SRI VENKATESVARA ORIENTAL SERIES No. 9

EDITOR :—P. V. RAMANUJASWAMI,

M.A.



# திருக்குறள்
# காமத்துப்பால்

## காலிங்கருரை :
## பரிப்பெருமாளுரை

பதிப்பாசிரியர் :

வித்வான்

T. P. பழனியப்ப பிள்ளை,

B.O.L.

தமிழ் ஆராய்ச்சியாளர்




திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகம்

திருப்பதி

1945

[Price Rs.



PRINTED AT

TIRUMALAI-TIRUPATI DEVASTHANAMS PRESS
TIRUPATI

# INTRODUCTION

I am glad to introduce the present volume of the Sri Venkatesvara Oriental Series which, though not the first, is however, the first Tamil volume to be issued in the series. It comprises the *Tirukkural Kāmattupāl* with two hitherto unpublished commentaries by Kāliṅgar and Paripperumāḷ. *Kuraḷ* is one of the important ancient Tamil classics and although ten commentaries have been written upon it, only two, those by Parimēlaḷagar and Maṇakkuḍavar have been published so far. The commentaries included in the volume

are both more ancient than the two published before and

are important not only on this account but also on account of

the light which they throw on the published commentary of

Maṇakkuḍavar. The world of Tamil scholars cannot

therefore be too grateful to the editor of the commentaries for restoring and publishing them for the first time on upto date lines of modern critical editions from very scanty manuscript

material. The learned editor has discussed in his introduction

the age of the commentators and their

comparative merits. The present volume contains the Kāmattupāl of *Tirukkural*, that is the third section of the work which deals with erotics. The editor is now engaged in restoring the commentaries on

the second section of the work which deals with monetary

matters. It is proposed to publish them in a forth-coming volume of the series, if God Sri Venkatesvara were to bless the undertaking.

P. V. RAMANUJASWAMI,

*General Editor*

# பொருளடக்கம்

## முகவுரை.

---

நம் தமிழகத்தார் பெறலருந் திருவாகப் பெற்றுடையதும், 'எல்லாப் பொருளும் இதன்பாலுள இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை' என்று அறிவுடையாரால் போற்றி உரைக்கப்பட்டதும், வேற்று நாட்டு விழுக்கலைஞரும் விழைவுறுமாறு மெய்ப்பொருள் நிறுத்து அவர் உள்ள மெல்லாம் கொள்ளை கொண்டு, அறிவு அரசு ஆகச் செறிவு வீற்றிருக்கை பெற்று விளங்குவதும் ஆகிய நம் அருமைத் திருக்குறள் நூல் பன்னூளாகப் பரிமேலழகர் உரையொடு பயில வழங்குவ தென்பது உலகறிந்த செய்தி. சின்னாளுக்கு முன்னர் சென்னைப் புலவர் திரு. கா. பொன்னுசாமி நாட்டார் அவர்கள் அரிதின் முயன்று பழைய உரையாகிய மணக்குடவர் உரையினை உலகிற்கு ஈந்த செய்தியும் யாவரும் உணர்ப. இஞ்ஞான்று திருவேங்கடேசுவான் கீழ்க்கலை யாராய்ச்சிக் கழகத்தின் முதல் தமிழ்நூல் வெளியீடாகத் திருக்குறள் - காமத்துப் பாலின் காலிங்கர் உரையும் பரிப்பெருமாள் உரையும் ஒருங்கியைந்து இரட்டைக் குழவிகள் போலத் திருவேங்கடத் திறைவன் திருவருட் டுணையால் இளமுறுவல் பூத்து எழுந்துலவுகின்றன. இந்நாள் காறும் உலகில் நடைபெறு இல்லாத இவ்வரிய உரைகளை வெளியிட நேர்ந்த வாய்ப்பினைத் தமிழ் அறிஞர்கள் போற்றுவார்கள் என்று நம்புகின்றேன்.

எளியேன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழாசிரியனாக இருந்தபோது அப்பல்கலைக் கழகத்து நூல் நிலையத்துக்குச் சேது சம்ஸ்தானம் மகாவித்துவானும், பாஷா கவிசேகரரும், ஆராய்ச்சி வல்லுநரும் ஆகிய திரு. உ. வே. ரா. ராகவையங்கார் அவர்கள் அளித்த ஏட்டுச் சுவடிகளுள் திருக்குறள் காலிங்கர் உரை அடங்கிய ஓலைச் சுவடியும் பரிப்பெருமாள் உரை யெழுதப்பட்ட கடிதக் கையெழுத்துச் சுவடியும் இருந்தன அறிந்து, அவற்றை அங்குப் படித்து வந்தேன். பரிமேலழகருரைக்கு முற்பட்ட பழைய உரைகளாதலின் உரையின் பெற்றி எத்திறம் ஆயினும் அவைகள் போற்றத் தக்கன என்ற எண்ணம் எழுந்தது. ஆகவே ஓய்வு நாட்களில் அவற்றை எழுதி வைத்திருந்தேன். இவ்விரண்டு தனிச் சுவடிகளையே கொண்டு இப்பதிப்பு வெளிவருகின்றது.

இவற்றுள் காலிங்கருரைப் பிரதியில் அறத்துப்பால் முதல் தொடங்கி ௩௧-ம் அதிகாரம் ஆகிய வெகுளாமையில் உள்ள 'நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்தின்' என்ற குறள் வரையுள்ள ௩௱௪

பாக்களுக்குரிய உரையுள்ள ஏடுகள் சுவடியில் காணப்படவில்லை. எஞ்சிய அறத்துப்பாற் பகுதியினும் பொருட்பாலினும் உள்ள உரைதானும் செல்லரிப்புண்டமையால் பலவிடத்தும் உரைப்பொருள் உணர வியலாவாறு சிதைந்தும் குறைந்தும் இருந்தது. தமிழன்னையின் திருவருளால் காமத்துப் பாலுரைப் பகுதி மட்டும் அத்துணைச் சீர்கேடின்றி உரைவடிவுணரக் கிடைத்தது. ஆதலின் இப்போது திருக்குறளின்



முன்னைய இருபாலினையும் விடுத்துப் பின்னைய காமத்துப் பாலினைப் பதிப்பிக்க நேர்ந்தது.

இனி, பரிப்பெருமாள் உரை முழுதுங் கிடைப்பினும் அது தானும் மணக்குடவருரை நடையின் வேறுபாடிலதாகி அமைந்துள்ளமையின் அவருரையிற் குறைந்தும், சிதைந்தும், பிழைபட்டும் கிடந்தவற்றை ஓராற்றான் ஒழுங்கு படுத்துணர்ந்து கோடற்குரிய கருவியாகப் பயன் படுமெனத் தெரிந்தமையால் அதனை வேறு பதிப்பித்தலிற் பயனின்றென எண்ணி இப்பதிப்பால் முன் பதிப்பு எய்திய மணக்குடவருரையிலுள்ள குறைபாடுகள் நீங்கிச் செப்பம் பெறலாமென்ற கருத்தால் அஃது இதனோடு சேர்த்துப் பதிப்பிக்கப் பெறுகின்றது. இப்போது திருக்குறளில் ஒருபாலுக்கு நான்குரைகள் உண்டாயிருத்தலின் தமிழறிஞர்கள் ஆர்வத்தோடு பயின்று ஒப்பிட்டுத் தாம் காணும் அரும்பொருள்களைத் தமிழுலகிற்கு அளிக்க வருவாம் என்னும் கருத்துக் கொண்டே எளியேன் தமிழ்ப் பணியாக இதனை என் சிற்றறிவுக் கியன்றவரை ஆராய்ந்து பதிப்பித்தேன்.

தமிழுலகு ஏற்றருள்க.

இறுதி ௨௩, ௨௪, ௨௫ ஆகிய மூன்றதிகாரங்களின் பாடல் வைப்பு முறை யொழிய ஏனைய அதிகாரங்களுள், உரைகாரர்கள் குறட்பாக் களின் முறை வைப்பினை ஓராங்குக் கொள்ளாராய்ப் பல பிறழ்ச்சிப் படக் கோத்து வைத்திருத்தலின் மூல பாடத்தைத்தருதலிற் காலிங்கர் மூல பாடத்தின் முறை வைப்பினையே தலைமையாகக் கொண்டு ஏனைப் பரிப்பெருமாளுரையிற் காணும் பாடங்களையும் எண்முறை வேறுபாடு களையும் பாட வேறுபாடாகவும் பிறிதெண் குறிப்பாகவும் காட்டுதல் நலம் என்று திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை யாராய்ச்சிக் கழகத்துத் தலைவர் ஆகிய ஸ்ரீ உ. வே. P. V. இராமாநுஜஸ்வாமி ஐயங்காரவர் கள் M.A., பணித்தார்கள். ஆதலின் அவ்வாறே பதிப்பிடலாயிற்று. அவர்களுக்கு என் நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். எளியேனைப் பலவகையினும் ஊக்கி இப்பதிப்பினை நிறைவேற்றச் செய்த எம் ஆராய்ச்சிக் கழகத்து மந்திரத்துணைவர் உயர் திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T. அவர்களுக்கும் என் நன்றி யுணர்வைக் கூறுகின்றேன். அறிவு ஆற்றல்களில் குறைபாடுடைய எளியேன் இயன்றாங்கு இயற்றிய தமிழன்னையின் திருப்பணியில் குறைகளிருப்பின் பொறுத்தருளுமாறு தமிழ்ச் செல்வப் பெரியார் களைப் பணிந்து வேண்டுகின்றேன்.

> குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
> கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்:

தி. பொ. பழனியப்ப பிள்ளை. தலைமைத் தமிழ் ஆராய்ச்சியாளன்.

# திருக்குறள் உரைகள்.



நம் இந்திய நாட்டில் வழக்காற்றிலுள்ள மொழிகள் இருநூற் றிருபதின் மேலுள்ளன எனினும், அவை பலவற்றுள்ளும் தொன்மை யானும், நூற்பன்மையானும், பொருள் நன்மையானும் சிறப்பெய்தி யிருத்தலின் நம் நாட்டினர்க்கு இரு கண்ணெனை எண்ணப்படுவன வடமொழி யாகிய ஆரியமும் தென்மொழி யாகிய தமிழும் ஆம். இவ் விருமொழியினும் அறிவுப் பெருங் கருவூலமாக விளங்கும் நூல்கள் பன்னூற்றின் மேலுள்ளனவேனும் புலத்துறை முற்றியோர் அறி வுக்கு விருந்தாக அமைந்து தலை சிறந்தன ஒரு சில பெருநூல்களே ஆகும். வடமொழியில் பேரிலக்கண நூலாகிய பாணினீயமும், பேரிலக்கிய நூலாகிய வான்மீகமும், தத்துவ நுண்பொருளாராய்ச்சி நூல்களாகிய பிரம சூத்திரமும் பகவற் கீதையும் பலவேறு காலங்களில் பல்பெரும் புலவர்களின் ஆராய்ச்சி அமைந்த பேருரைகளைப் பெற் றுத் திகழ்தல் அந்நூல்களின் பொருண் மாட்சியையும், புலப்பெருஞ் செல்வர் அவற்றைப் போற்றிக் கொண்ட ஆட்சியையும் செவ்விதின் உணர்ந்து கொள்ள ஏது ஆம். இம்முறையே நம் தாய் மொழியாகிய தமிழ் மொழிக்கண் வழங்கும் பன்னூறு நூற்றொகுதியுள் பண்டைப் பேரிலக்கண நூலாகிய தொல்காப்பியமும், பேரிலக்கிய நூலாகிய திருக்குறளும், வைணவ சமய நூலாகிய திருவாய்மொழியும், சைவ சமய நூலாகிய சிவஞான சித்தியாரும் ஆன்ற அறிஞர் பல்லுரை களைப் பெற்று விளங்குவது இந்நூல்களின் அளப்பரிய மாட்சியையும் ஆன்றோர் போற்றிய ஆட்சியையும் நமக்கு நன்கு தெளிவுறுத்துவது ஆகும். இவ்விருபெரு மொழிகளினும் இவ்வாறு அமைவுற்ற நூன் மாட்சியும் நூலுரையாட்சியும் ஒப்புமை வழக்கு நோக்கி யுணர் வார்க்குக் கழிபெரு மகிழ்ச்சி யூட்டுவ தாகும்.

மாநில மருங்கின் மன்னிய மக்கள் உள்ளுவ எல்லாம் தெள்ளி தின் உரைக்கும் சிறப்பின தாகிய நம் திருக்குறள் அறிஞர் பதின்மர் உரையேற்று விளங்குவதென்பது தொண்டை மண்டல சதகத்து மேற்கோட் பாடல் ஒன்றால் தெரிகின்றது. திருக்குற ளுரைகாருள் பரிமேலழகர் உரைத்த உரையே சிறந்த தென்பதனையும், அவர் தொண்டை மண்டலத்துப் புலவர் என்பதனையும் புலப்படுத்தற்கு அந்நூலாசிரியர்,

வள்ளல் சிலைப்பெரு மாணச்சர் சாத்தர் வழுதிமுதற்
றள்ளுவ னார்க்குந் தலையான பேரையுந் தன்னுரையை
விள்ளுவ னார்க்குந் திருக்காஞ்சி வாழ்பரி மேலழகன்
வள்ளுவ னார்க்கு வழிகாட்டி னன்றொண்டை மண்டலமே.

என்ற செய்யுளைப் பாடியுள்ளார். அதற்கு மேற்கோளாக அந்நூற்கண் காட்டிய பழைய வெண்பாவாகிய



" தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி—திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர்."

என்பது திருக்குறள் உரைகாரர்கள் பதின்மர் என அவர்கள் பெயர்களைத் தெளிவாய்ச் சுட்டுகின்றது.

இங்குக் குறித்த பதின்மர் உரைகளுள் பரிமேலழகர் உரையே முன்னைய ஒன்பதின்மர் உரைகளுக்கும் காலத்தாற் பிற்பட்டது என்பது அவர் உரைப்பாயிரச் செய்யுளால் அறியக்கிடக்கின்றது.

" திருந்திய தமிழிற் றெய்வப் புலமை
அருந்திறல் வள்ளுவ னுய்ந்துதன் வாக்கால்
அறம்பொரு ளின்பம் வீடென நான்கின்
திறந்தெரிந் துரைத்த செவ்விமுப் பாலுக்
கோருரை யின்றி யொன்பது சென்றும்
ஐயுற வாக நையுறு காலை "

என்ற அகவற் பகுதியால் பரிமேலழக ருரைக்கு முன்னையனவே பிற ஒன்பதின்மர் உரைகளுமென்பது தெள்ளிதின் அறியலாம். இங்ஙனம் கண்ட சான்று அன்றிப் பிறசான்றுகளும் உளவோ என ஆராய்தலை ஈண்டு மேற்கொள்ளுகிறேன்.

முதற்கண் பரிமேலழகர் கால வரையறையை உணர்ந்து கொண்டு அதற்கு முன் பிற உரையாளர் காலங்களின் மேலெல்லையை உணர்ந்து கொள்ள முயல்வோமாக. பெருந்தமிழ்ப் புலவரும் ஆராய்ச்சி வல்லுநரும் ஆகிய இராவ் சாகிப் - திரு. மு. இராகவையங்காரவர்கள் தாம் ஆழ்ந்தாராய்ந்து வெளியிட்ட 'சாசனத் தமிழ்க்கவி சரிதம்' என்ற கட்டுரை நூலின்கண் பரிமேலழகர் காலத்தைத் தெளிவுற வரையறுத்தற்குரிய சான்றுகளை விரித்துக் கூறியுள்ளார்கள். அவ்வரிய ஆராய்ச்சிப் பொருளின், சுருக்கமாவது—பரிமேலழகர் காமத்துப் பாலுரைத் தொடக்கத்தில் போசராசனைச் சுட்டி யுரைத்துள்ளமையாலும், உமாபதி சிவாசாரியர் தனிப்பாட்டு ஒன்றில் பரிமேலழகருரை பாராட்டப்பட்டுள்ளமையாலும், திருக்கச்சிநகர் அருளாளப்பெருமாள் திருக்கோயிற் சாசனம் ஒன்றில் கி. பி. 1272-ல் ஆண்ட விஜய கண்ட கோபாலன் காலத்துப் பரிமேலழகிய பெருமாள் தாதர் என்ற பெயர் காணப்படுகின்றமையாலும் அவர் கி. பி. 1272-ல் வாழ்ந்தவ ராகலாம் என்று துணிந்துள்ளார்கள்.

இனி, இங்குப் பதிப்பு எய்திய உரைகளுள் காலிங்கர் உரையுள் சிறந்து தோன்றும் ஓர் இயல்பு கொண்டு இவ்வுரையின் காலம் அறுதியிடப் பெறலாம். அஃது என்னை எனின், கூறுவேன். அவர் காமத்துப் பாலின் முதல் ஏழதிகாரங்கட்கு உரை கூறிச் சென்று இறுதிக்

கண்ணுள்ள ' அலரெழ ' என்ற குறட்பாவினுரை முடிவில் "தலைமகன் கூற்று முடிந்தது : இனித் தலைமகள் கூற்றுக் கிளவி வருமாறு " என்றுரைத்து மேல் தொடர்பாகப் பன்னிரண்டு அதிகாரங்களுக் குரை யெழுதி ' அவர் வயின் விதும்பல் ' என்ற பத்தொன்பதாம் அதிகாரத் தினிறுதியில் " இருபாற் கிளவி வருமாறு " என்றுரைத்து இருபதாம் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்கிறார். அவர் இவ்வாறு காமத் துப்பாற் பொருளைத் தலைமகன் கூற்றும், தலைமகள் கூற்றும், இருபாற் கூற்றும் ஆக முத்திறப்படுத்துக் கொண்டது எதுபற்றியென ஆராய்ந்து காண்பாம்.

திருக்குறளுக்குச்சிறப்புப் பாயிரமாக விளங்குகின்ற திருவள்ளுவ மாலை என்ற நூலில், தொடித்தலை விழுத்தண்டினார் பாடியதாக உள்ள

> " அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
> திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
> நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
> போலு மொழிந்த பொருள்."

என்ற செய்யுளையும், மோசி கீரனார் பாடியதாக உள்ள

> " ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
> பூண்ப விருபாலோ ராறாக—மாண்பாய
> காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
> நாமத்தின் வள்ளுவனார் நன்கு "

என்ற செய்யுளையும் உற்று நோக்கின்,

பண்டைக்காலத்துத் தண்
டமிழ்ச் சான்றோர்கள் இக் காமத்துப் பாவினை மூன்று பகுப்பின தாகவே கொண்டு போற்றினர் என்பதும், அம்மூன்று பகுதியாவன— முதல் ஏழதிகாரங்களும் ஆண்பாற் கூற்று என்றும், அவற்றை யடுத்த பன்னிரண்டு அதிகாரங்களும் பெண்பாற் கூற்று என்றும், அவற் றுக்குப் பின்னடுத்த ஆறு அதிகாரங்களும் இருபாற் கூற்று என்றும் வழங்கலாயின என்பதும் தெளிவாய்க் காணலாவதாம். இதற்கு ஒப்பவே தஞ்சை மன்னர் சரபோசி சரசுவதி மால் நூல் நிலயத்துக் கண்ட ஏட்டுச் சுவடிகளுள் 'திருக்குறள் அதிகார அடைவு' என்ற ஏட்டிற் கண்ட

" அறத்துப்பான் முப்பத் தெட்டவை தன்னுட்
பாயிர நான்கில் லறமிரு பத்தோ
டோதிய துறவற மொருபதின் மூன்று
மேதமி லூழொன் றெனவிசைத் தனரே :
பொருட்பா லெழுபதி லரசிய லையைந்
தமுக்கி லமைச்சிய லவையி ரைந்தா

மாணிரண் டொருகூ ழுடற்படை யிரண்டு
படர்தரு நட்புப் பதினே ழாகும்

b

x

குடிமைபன் மூன்றெனக் கூறினர் புலவர் :
காமத்துப் பால்கரு திருபத் தைந்தறி
லேழுறு மாண்பா லேழவை யன்றிப்
பெண்பா லாறிரண் டாம்பொது விருமூன்
றன்பா னாற்றுமுப் பத்துமூன் றவையே"

என்ற அரிய செய்யுளும் பண்டை நாளில் திருக்குறள் காமத்துப்பால் இம் முப்பகுப் புடையதாகவே அறிஞர்களாற் கொள்ளப்பட்டுப் போந்த உண்மையை உணர்த்துகின்றது. ஆதலின் இங்குச் சுட்டிய திருவள்ளுவ மாலையின் காலத்துக்குப் பின்னரே இவ்வுரையாளராகிய காலிங்கர் வாழ்ந்தவராக வேண்டுமென அறிந்து கொள்க.

சங்க காலத்துக்குப் பின்னெழுந்த அகப்பொரு ளிலக்கிய கல்லாடத்தின்கண்,

" சமயக் கணக்கர் மதிவழி கூறா
துலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்
மாதுடன் றோன்றிக் கூட லு ணிறைந்தோன்".

என்ற ஆசிரியப் பாவின் பகுதியில் 'திருவள்ளுவர் பாடியருளிய திருக்குறள் நூலுக்குச் சிறப்புப் பாயிரமாகச் சங்கப் புலவருள் முதல்வராகிய இறையனார் அவர்கள் முன்னிலையில் முதற்கவி பாடி யளித்தனரென்று ஒரு செய்தி கூறப்பட்டுளது. இது சங்கப் புலவர் பலர் பாடல்களுடனாக இறையனார் முதற்கவியும் சேர்த்து திருவள்ளுவ மாலையென ஒருதனி நூலாகச் சிறப்ப வழக்கெய்திய காலத்தையே சுட்டுமெனக் காண்க. இக்கல்லாடத்துள் பிறாண்டும் இறையனார்

களவிய லியற்றித் தந்த அருமைப் பாட்டினையும் போற்றியுரைத்துள்ள மையும் ஒப்பிட்டுணர்ந்து கொள்க. ஆராய்ச்சியாளர்கள் இக்கல்லாட நூல் ஒன்பதாம் நூற்றூண்டிற்குப் பிற்பட்டதாக வேண்டுமென முடிவு கூறியுள்ளார்கள். ஆதலின் திருவள்ளுவ மாலை என்பது அந்நூற் றூண்டில் ஒரு தனி நூலாக வழங்கியமை அறியப்படுகின்றமையால், அந்நூற்கண் சான்றோர் காமத்துப்பாலை முத்திறமாகப் பகுத்துக் கூறிய மாபை மேற்கொண்ட காலிங்கர் காலத்துக்கு அதுவே மேலெல்லை யாமெனத் தெளிய அறிந்து கொள்க.

இனி, பரிப்பெருமாள் என்பாரும் பரிமேலழகர்க்குக் காலத்தால் முற்பட்டவர் என்பது பரிமேலழக ருரைப்பாயிரக் கூற்றான் முடி வெய்துமாயினும்,இவர் காலத்துக்கும் மேலெல்லை காண முற்படுவேன். தமிழ்மொழியில் அளப்பரிய பெரும்புலமையும் ஆராய்ச்சித் திறனும் பெற்று விளங்கும் முதுகண்ணுளராகிய சேது சமஸ்தானம் மகா வித்வான் திரு. ரா. ராகவையங்கார் அவர்கள் பெரிதும் ஆராய்ச்சித்திறம்



தோற்றத் தாம் எழுதிய "சேதுநாடும் தமிழும்" என்ற உரைநடை நூலுள் சேதுநாட்டுப் புலவருள் ஒருவராகிய பரிப்பெருமாளைப் பற் றிய செய்யுட்களைத் தொகுத்துக் காட்டிப் பின்னர் "இவருரை தலை யாய பரிமேலழகருரைப் பின்சார் நன்று என்று தெளியலாகும். பரிப்பெருமாளைப் பரி என்று கொண்டு அவரினும் உரைவன்மையான் அழகுடையாதலாற் பரிமேலழகரெனப் பட்டாரோ என்று ஊகிக்க இடனுகின்றது. அத்தகைத் திருக்குறளுரையாளருடைய தென் செழுவை(யூர்) இச்சேது நாட்டதேயாம்." என்று எழுதியுள்ளார்கள். இதனை யுற்று நோக்கின் அப்பெரியார் பரிப்பெருமாளைப் பரிமேலழ கர்க்குக் காலத்தில் முற்பட்டோரெனக் கருதின ரென்பது தெள்ளி திற் புலனாம்.

இனி அவருரைக்கண் காணும் அகச்சான்று கொண்டு அவர் காலத்தின் மேலெல்லையை நிறுவுதற்கு இடனுண்டென்பதும் புலப் படுகின்றது : அதனைக் கூறுவேன். பரிமேலழகர் காமத்துப்பா

லுரைத் தொடக்கத்துள் வடநூற் புலவனுகிய போசனைச் சுட்டியது போன்று, பரிப்பெருமாளும் காமத்துப்பால் உரைத்தொடக்கத்துள், " இக்காமப் புணர்ச்சியை வடநூலாசிரியர் அராகத்தாற் கூடும் கூட்டமென்ப.

கூடலும்,

அதுதான் மூவகைப்படும், அருமையிற் கூடலும், பிரிந்து ஊடிக் கூடலுமென. அருமையிற் கூடுதலாவது கூடுதற்கு

எளிது அன்மையால்
நினைவினராய் நின்று

ஒருவர் ஒருவரைக் கண்ட காலம் தொட்டும் ஒத்த கூடுதல். பிரிந்து கூடுதலாவது இவ்வாறு கூடினர் பின்பு ஒரு காரணத்தால் பிரிந்து அதன்பின் கூடுதல். ஊடிக் கூடலாவது தலைமகன் மாட்டுத் தவறு கண்டு புலந்த தலைமகளைப் புலவி நீக்கிக் கூடுதல். இவை மூன்று கூட்டமும்

. . . . . . . . . . . ." என்று ஒரு பழைய வடநூன் முறைமையைச் சுட்டிக் கூறுகின்றார்.

இதனைக் கூர்ந்து நோக்கின் இவர்மேற்கொண்ட வடநூன் முறை இன்னதெனக் காணக் கூடும்.

இவ்வுரைத் தோற்றுவாயிற் பின்னர் இவர் சுட்டிய "வாற்சாயனிய மென்னும் காம தந்திரத்தின்,

ரங்களின் இலக்கணங்களை ஆராய்ந்த வட நூற்புலவர் பலரும் இன்ப ஒழுக்கத்தைச் சம்போக சிருங்காரம் என்றும் விப்ரலம்ப சிருங்காரம் என்றும் இருபகுதியினதாகவே வகைப்படுத்து இலக்கண முறைத்துச் செல்லத் தசரூபகம் என்ற வடநூலாசிரியராகிய தனஞ்சய கவி என்பார்தாம் தம் நூலின்கண் இரசங்களின் இலக்கணம் உரைக்கும் நான்காம் பிரிவின்கண் சிருங்கார பாகங்களைக் கூறுங்கால்—"அயோகோ விப்ரயோகஸ்ச சம்போகஸ்சேதி ச த்ரிதா" என்று சூத்திரித்துள்ளார். இதன் கருத்து சிருங்காரம் என்பது அயோகம் என்றும், விப்ரயோகம் என்றும், சம்போகம் என்றும் மூன்று பாகுபாடுறும் என்பது.

## xii

இவர் வகுத்துக் காட்டிய இவ்வியல்பினை இவ்வுரைகாரராகிய பரிப்பெருமாள் தழுவிக் கூறுகின்றாராதலின் அந்நூற் காலத்திற்குப் பிற்காலத்தவர் இவர் எனத் தெளியலாம். இத்தனஞ்சய கவி கி. பி. 974 முதல் 995 வரை ஆண்ட மாளவ நாட்டுப் பாமார குலத்து மன்னனாகிய இரண்டாம் வாக்பதி ராசன் காலத்தவர் என்று வடநூற் புலவர் முடிவு செய்துள்ளாராதலின் பதினொன்றும் நூற்றாண்டில் அந்நூல் விளக்க மெய்தியதென அறியலாம். ஆகவே பரிப்பெருமாளின் காலத்தின் மேலெல்லை இப்பதினொன்றும் நூற்றாண்டெனக் கோடல் பொருந்துவதாம்.

இனி உரைகளின் அகச்சான்று கொண்டும் இவ்விரண்டுரைகாரும் பரிமேலழகியார்க்கு முற்பட்டோர் எனக்கோடற்கு இடனுண்டு. கண்விதுப்பழிதல் என்ற அதிகாரத்தில் 'பேணாது பெட்டார்' என்ற குறளின் உரையில் ஆசிரியர் பரிமேலழகர் "இனிக் கொண்கனை என்று பாடமாயின், என்கண்கள் தம்மைக் காணாதமைகின்ற கொண்கனைத் தாங் காணா தமைகின்றன வில்லை. இவ்வாறே தம்மை யொருவர் விழையா திருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துள்ளரோவென் றுரைக்க" என்று பண்டு வழங்கிய பாட வேறுபாடு ஒன்றினைச் சுட்டுகிறார். ஈண்டு அவர் பிற உரை யாசிரியரின் பெயரைக் குறித்துக் கூறவில்லை யாயினும், அவர் சுட்டி யுரைத்த பாடாந்தரமும் உரை வேறுபாடும் காலிங்க ருரையிற் காணக் கிடத்தலின் காலிங்கர் பரிமேலழகியார்க்குக் காலத்தான் முற்பட்டவர் என்பது அகச்சான்றால் நிலை பெறுவதாம்.

மற்று ஆசிரியர் பரிமேலழகியார் 'அவர் வயின் விதும்பல்' என்ற அதிகாரத்தின் பெயர்ப்பொருள் விளக்குதற்கண் "அஃதாவது சேயிடைப் பிரிவின்கட் டலைமகனுந்தலைமகளும் வேட்கை மிகவினான் ஒருவரை யொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் அதிகாரப் பட்டு வருகின்றமையின் இருவரையுஞ் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினார். பிறரெல்லாம் இதனைத் தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புறலென்றார்........" என்று எழுதிச் செல்லுகிறார். ஈண்டும் அவர் பெயர் சுட்டாது பிறரெல்லா மென்று பொதுவாகக் கூறினும் அவர் மறுப்புரைத்தவாறே காலிங்கர் தம்முரைக்கண் இவ்வதிகாரத் தொடர் பொருளுரைப்புழி "இங்ஙனம் தலைமகட்கு அவ்வாறு பிரிந்தவரிடத்து விருப்பம் மேன்மேலும் மிக்குச் சேறலான் அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்" என்றும், பரிப்பெருமாள் தம் முரைக்கண் "அவர்வயின் விதும்பலாவது அவர் வரவின்கண் துக்கம் உறுதல் என்றது காதலர் வரவு வேட்டு இருத்தல் என்றது. ....." என்றும் அவதாரிகை கூறிச் செல்கின்றார்க ளாதலின் இவ்விருவரும்

பரிமேலழகர்க்குக் காலத்தான் முற்பட்டோர்
விலங்கலெனத் தெள்ளிதி னறியப் படுவதாம்.
என்பது வெள்ளிடை

இனி, "தாழ்வீழ்வார்" என்ற குறளுரையில் ஆசிரியர் பரிமேலழகியார் "இந்திர னுலகு என்றுரைப்பாருமுளர்; தாமரைக் கண்ணனென்பது அவனுக்குப் பெயரன்மையின் அஃதுரையன்மை அறிக" என்று மறுத்துரைத்தார். இவ்வாறு "இந்திரனது சுவர்க்கம்" என்றுரை கூறியோர் பரிப்பெருமாளும் மணக்குடவரு மாவர் என்பது அவருரை நோக்கிக் கண்டு கொள்க. ஆயின் ஈண்டைக்குக் காலிங்கர் கூறிய உரை வேறாக அமைந்துள்ளது அறிஞர் கண்டு இன்புறத் தக்கது. அவர் தாமரைக் கண்ணான் என்னும் தொடர்க்கு "ஆயிரம் வேள்வியின் எய்துவாராக அருமறை கூறும் அயனுலகு ஆண்டுறும் இன்பம்" என்றுரைத்தார். இவ்வரிய செய்திக்கு மறைநூலாதாரம் யாதேனும் உளதோ என உசாவினேனாக வடநூற் பெரும் புலமையாளரும் திருவேங்கடேசுவரன் கலையாராய்ச்சிக் கழக நூனிலையத் தலைவரும் ஆகிய சிரோமணி ஸ்ரீ உ. வே. D. T. தாதாசாரிய ஸ்வாமிகள் அவர்கள் M. O. L. கீழ்க் காட்டிய வேதநூற் பிரமாணத்தை அன்புடன் உதவினார்கள். "விச்வஸ்ருஜாம் ஸஹஸ்ர ஸம்வத்ஸரம் ஏதேந வை விச்வஸ்ருஜ இதம் விச்வம் அஸ்ருஜந்த. தஸ்மாத் விச்வஸ்ருஜ: விச்வம் ஏநாந் அநுப்ரஜாயதே: ப்ருஹ்மண: ஸாயுஜ்யம் ஸலோகதாம் யந்தி...ய ஏதத் உபயந்தி"

—யஜுர் பிராம்மணம்

இதனல் விச்வஸ்ருட்டுக்கள் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தார்கள். அதனல் விச்வஸ்ருட்டுக்கள். இதை யாவர் அனுட்டிக்கிறார்கள் அவர் களை உலகம் முழுதும் பின்பற்றும். ப்ரும்மத்தின் ஸாயுஜ்யத்தையும் ஸாலோக்யத்தையும் அவர்கள் அடைகிறார்கள் என்பது மேற்கண்ட வேத மொழிப்பொருள். ஈண்டு ஸம்வத்ஸரம் என்பது நாளைக் குறிக் கும் என்பது மீமாம்சை 6-ம் அத்தியாயம் 7-வது பாதம் - கடைசி அதிகரணத்துள் கண்டு கொள்க.

இனி இவ்வுரைகளி னியல்பு பற்றிச் சிறிதுரைக்கின்றேன்.

இவ்விருரையாளரும் பரிமேலழகர்போலப் பொழிப்பகல நுட்பவெச்சக் கூறுபாடுகள் தோன்ற உரையெழுதாது பிண்டப் பொழிப்பாகவே உரை கூறிச் சென்றுள்ளார்கள். காலிங்கர் உரைப் போக்குக்கு மாறாகப் பரிப்பெருமாளும் பரிமேலழகரும் அவர் முக் கூற்று முறைமையைத் தழுவாதும் அம்முறை யொன்று பண்டு வழக் குற்றிருந்ததெனச் சுட்டி மறுப்புரையாமலும் தாம் தாம் களவு கற்பு என்னும் கைகோளிரண்டினும் பயிலும் பல்கிளவித் துறைகளை ஆங் காங்குக் கூறி அமைவு காட்டிச் செல்கின்றது பயில்வார் கன்குணர லாம். இவ்வாறு இவர்கள் காலிங்கர் கொண்ட பண்டை முறையைத்



தழுவாமைக்குக் காரணம் அவருரையிற் சில பொருந்தாமை கண்ட மையாற் போலுமெனக் கருத இடனுண்டாகின்றது. எடுத்துக் காட்டாக ஒன்றுரைப்பேன்

காதற் சிறப்புரைத்தல் என்ற அதிகாரத்தில் "கண்ணுள்ளார் காதலவாக" என்ற பாட்டி னுரையில், காலிங்கர் தாம் கொண்ட கூற்றுவகை முறைப்படி, ஆண்பாற் கூற்றுகக் கிளவித்துறை கூறுதல் பெரிதும் இழுக்குடைத்தெனக் கருதிப் போலும் இவ்விருவரும் இதனைத் தலைமகள் கூற்றாகக் கொண்டு உரைகூறிப் போயினர். 'கண்ணெழுதுதல்' மகளிர் மாபன்றி மற்றை யாண்பாலார்க்கு அடையின்ரும் என்றே எவரும் கருதுப. ஆயினும் காலிங்கர் இம்மாபன்மையை உணாராது இழுக்கி ஆண்பாற் கூற்றுக உரைகூறினரெனக் கொள்வாம் எனின், அவர் அக்கால மாபுக்கு இயைபவே உரைகண்டார் எனத் தெளியக் கிடக்கின்றது. எவ்வாற்றுனெனின், அக்காலத்து ஆண்பாலாரும் தம் விழிகளுக்கு மையெழுதுத லாகிய வழக்குண்மை பண்டை நூல்களால் அறியப்படுகின்றதெ௯ன ஈண்டுக் காட்டுகின்றேன். சீவக சிந்தாமணி, பூமக ளிலம்பகத்தில், 3!-வது பாடல்.

" முனைவற்றெழுது முடிதுளக்கி முகந்து செம்பொன் கொளவீசி
நினைய லாகா நெடுவாழ்க்கை வென்றிக் கோலம் விளக்காகப்
புனையப் பட்ட வஞ்சனத்தைப் புகழ
கனைவண் டார்க்கு மலங்கலுங் கலனு

வெழுதிப் புனைபூணுன்
மேற்பத் தாங்கினன்."

என்பது ஆண்பாலாரும் மையெழுதும் வழக்குண்மை குறிப்பதறிந்து கொள்க. இவ்வழக்கினைக் "காதன் மிக்குழிக் கற்றவும் கைகொடா வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்" எனப் பிறுண்டும் அக் கவிஞர் பெருமான் குறித்தலைக் காண்க. கொங்குவேளிரும் தம் பெருங்கதையில் பிரச்சோதன மன்னன் புலரிப்போதில் "அமிழ்தியல் யோகத்தஞ்சனம் வகுத்துக் கொண்டு கபிலைக் காட்சி பெற்றனனென்று உரைத்ததும் நோக்கிக் கொள்க. எனவே காலிங்கர் இக் குறட்பாவினை ஆண்பாற் கூற்றினதாகக் கொண்டது இழுக்கின்றும் எனக்கொள்க.

இக்காள்வரையும் திருக்குறள் காமத்துப் பாலுக்குப் பரிமேலழகர் மணக்குடவருரைகளே வழங்கின. இஞ்ஞான்று வேறு இரண்டு பழைய உரைகளும் பதிப்பெய்தி வருவனவாதலின் நல்லறிவுடைய செந்தமிழ்ச் செல்வர் இவ்வுரைகளை யொன்றிப் படித்துணர்ந்து பயன் பெறுவார்களாக. இவ்வுரையாளருள் பரிப்பெருமாளும் பரிமேலழகரும் வடநூன் முறைமைகளை இக்காமத்துப் பாவினியைத்துக் கூறுதற்கு எவ்வியைபுண்டென்பதைத் தனிக்கட்டுரை யொன்றிலாய்ந் தெழுதக் கருதுகிறேன்.



உ

கடவுள் துணை.

# திருக்குறள்.

## காமத்துப்பால்.

## காலிங்கருரை :

## பரிப்பெருமாளுரை.



### காலிங்கர் உரைத்தொடக்கம்.

இவ்வாறு பொருட்பகுதி உணர்த்தி மற்று இதன் பின்னரே காமப்பகுதி உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவற்றுள் இது தகையணங்குறுத்தல் என்பது; மற்று இதனால் காட்சி முதலாகிய வகையியற் கைக்கிளை காட்டுகின்றது இவ்வதிகாரம்.

### பரிப்பெருமாள் உரைத்தொடக்கம்.

காமத்துப் பாலாவது மைந்தர்க்கும் மகளிர்க்கும் கலவியானுகிய இன்பப் பகுதி கூறுதல். அஃது யாங்ஙனம் கூறினெனின், ஒருவனுக்கு இன்பம் நுகர்தற்கு இடம் கன்னியரும் கணிகையரும் பிறர் தாரமுமென மூவகை யல்லது இல்லை; அவற்றுள் பிறர் மனைக் கூட்டம் பாவம் தருமென்று [1]அறத்துப்பாலுள் கூறிக் கணிகையர் கூட்டம் பொருள் கேடுதருமென்று [2]பொருட்பாலுள் கூறினாதலின் அறனும் பொருளும் இன்பமும் வழுவாமல் வருவது கன்னியர் கூட்டமென்று அதனை ஈண்டுக் கூறப்பட்டதென்க. அதுதான் எட்டு வகைப்படும்; பிரமம், பிராஜாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசமென. அவற்றுள் அசுரம் முதலான மூன்றும் ஒருதலைக் காமம் ஆகலானும், பிரமம் முதலான நான்கும் ஒப்பில் கூட்டம் ஆகலானும், அவையிற்றுக்கு இன்பச் சிறப்பின்மையின் காந்தருவ நெறியே யீண்டுக் கூறப்பட்டதென்று கொள்ளப்படும். என்னை? [3]"முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே, பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே" யென்றும், [4]"காமக் கூட்டங் காணுங்

---

1. பிறனில் விழையாமை அதிகாரம்.
2. வரைவின் மகளிர் அதிகாரம்.
3. தொல். களவியல்—14-15 சூத்.
4. தொல். களவியல்—1 சூத்.

காலை, மறையோர் தேஎத்து மன்றல் எட்டினுட், டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே" என்றும் இலக்கணங்கூறுதலின். அஃதாவது கொடுப்போரும் அடுப்போரும் இன்றி ஒத்தார் இருவர் தாமே கூடுங்கூட்டம்; என்னை? [1]"அதுவே, தானே யவளே தமியர் காணக் காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்" என்பதாகலின். இச்சூத்திரம் நாடக வழக்கிற்குக் கூறியதாகலின், ஈண்டு உரைக்கின்ற காமமும் நாடக வழக்கோவெனின், இச்சூத்திரம் கூறுகின்றுழி யுரையாசிரியர் உலகத்தோடு ஒத்தும் ஒவ்வாதும் வருமென்று பொதுப்படக் கூறினாராதலின், இஃது உலக வழக்கை நோக்கி யெடுத்துக் காட்டப்பட்டதென்க. இக்காமப் புணர்ச்சியை வடநூலாசிரியர் அராகத்தாற் கூடுங் கூட்டமென்ப. இதுதான் மூவகைப்படும்; அருமையிற் கூடலும், பிரிந்து கூடலும், ஊடிக் கூடலுமென. அருமையிற் கூடுதலாவது கூடுதற்கு எளிது அன்மையால் ஒருவர் ஒருவரைக் கண்ட காலம் தொட்டும் ஒத்த நினைவினராய் நின்று கூடுதல். பிரிந்து கூடுதலாவது இவ்வாறு கூடினார் பின்பு ஒரு காரணத்தால் பிரிந்து அதன்பின் கூடுதல். ஊடிக் கூடலாவது தலைமகன் மாட்டுத் தவறு கண்டு புலந்த தலைமகளைப் புலவி நீக்கிக் கூடுதல். இவை மூன்று கூட்டமும் இவற்றது நிமித்தமும் இக்காமத்துப் பாலுட் கூறுதல் தமிழ்நடை யன்றாதலின் இதற்கு இலக்கணம் யாங்ஙனம் பெறுதுமெனின், இவ்விலக்கணம் தமிழ் நடையாயின், அகப்புறமென்று கூறுதல்வேண்டும்; அவ்வாறு கூறாது அறம் பொருள் இன்பமென வடநூல் வழியே கூறினாராதலின் இதற்கு இலக்கணம் வாற்சாயனிய மென்னும் காம தந்திரத்துச் சுரத விகற்பமென்னும் அதிகாரணத்துட் கண்டுகொள்க. அன்றியும், [2]"புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவற்றின் நிமித்த மென்றிவை, தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" என்றாராதலின் அவற்றுள் இருத்தலும் இரங்கலும் பிரிந்துழி நிகழுமன்றே; அவற்றைப் பிரிவினுளடக்கிப் புணர்தலும் பிரிதலும் ஊடலுமெனத் தமிழ் நடையிற் கூறினும் இழுக்காது. இதனுள் தகையணங் குறுத்தல் முதலாகப் புணர்ச்சி மகிழ்தல் ஈறாக, அருமையிற் கூடலும் அதற்கு நிமித்தமும் ஆகிய அதிகாரம் மூன்றும், நலம் புனைந்துரைத்தல் முதலாகப் புணர்ச்சி விதும்பலீறாகப் பிரிந்து கூடலும் அதற்கு நிமித்தமும் ஆகிய அதிகாரம் பதினெட்டும், நெஞ்சொடு புலத்தல் முதலாக ஊடலுவகை ஈறாக ஊடிக் கூடலும் அதற்கு நிமித்தமுமாகிய அதி

காம மானகும ஆக இருபததைக தநுகாமமுங கூறபபட்டது. அவற றுள் முன்பு கண்டறியா வருமையிற் கூட்லைப் புணர்ச்சி மகிழ்தலென் றும் அதனை யறிதலாற் பிரிந்து கூட்லைப் புணர்ச்சி விதும்பலென்றும், கலாந் தீர்ந்து கூடுதலால் ஊடிக்கூட்லை ஊடலுவகை யென்றுங் கூறினரென்று கொள்ளப்படும்.

---

1. இறையனுர் களவியல் 2. சூத்.
2. தொல். அகத்திணை—16 சூத்.

## 1. தகையணங்குறுத்தல்.

(பரிப்பெருமாள் உரை) தகையணங் குறுத்தலாவது தலைமக னும் தலைமகளும் எதிர்ப்பட்ட இடத்துத் தலைமகளது கவின் தலைமகனை வருத்துதலும் தலைமகனது கவின் தலைமகளை வருத்துதலும். இது முதலாகக் காம நிகழுமாதலின் இது முற்பாடு கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

அணங்குகொ லாய்மயில் கொல்லோ
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.

கணங்குழை

(காலிங்கர் உரை) என்பது செய்குன்றும் இளமரக் காவும் ஆகிய யாருமில்லதோர் சிறையிடத்து மற்று இவண் வல்லிப்பூக் கொய்து கொண்டு ஆங்கு இனிது நின்ற தலைமகளை நிரம்ப முன்தான் செய்த தவப்பயனாகிய விதி வகையால் ஓர் வேட்டம் போந்து விளையாடுகின்ற தலைமகன் ஒரு மான் தொடர்ந்து வந்து எய்திக் கண்டான்; கண்ட பின் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. இங்ஙனம் ஆரும் இல்லதோர் சிறையிடத்து நின்றும் இவ்வணி யணிந்த உருவுடையதோர் தெய்வ வடிவாங் கொல்லோ வென்றும், மைக்கோலமும் வளரிளஞ் சாயலும் வனப்பும் உடையதோர் அழகிய மயிலாங் கொல்லோ வென்றும் தக்க செல்வக் குலத்துள் பிறந்த மக்களுள் ஒருத்தி கொல்லோ வென்றும் இங்ஙனம் மயக்குறும் என்னினை வென்று தன்னெஞ்சிற்குச் சொல்லித் தளர்வுற்றான் தலைமகனென்பது பொருள் என்றவாறு. கணங் குழை யென்றது மகரக்குழை. மாலுமென்றது மயங்குமென்றது.

(பரிப்பெருமாள் உரை) என்பது.—இக்கணங் குழையை யுடையவள் தெய்வம் கொல்லோ? நல்லதொரு மயில் கொல்லோ? அன்றி மக்களுள்ளாள் கொல்லோ? என என் மனம் மயங்கா நின்றது இவற்றுள் யாதோ? என்றவாறு.

எனக்குத் தெரிகின்றதில்லை என்றவாறு ஆயிற்று; கணங்குழை ஆகுபெயர். ஆய்தலென்பது தெரிதல்; பலவற்றினுந் தெரியப்படுதலின் நல்லதென்று பொருளாயிற்று. மக்களும் தேவரும் ஒரு நீர்மையர் ஆதலின், தெய்வமோ மக்களோ வென்று ஐயுறுக; மயிலோ என்றது என்னை? எனின், இம்மணம் காந்தருவம் அன்றே? தலைமகளைத் தலைமகன் எதிர்ப்படுங்கால் யாரும் இல்லாததோர் பொழிலகத்தே எதிர்ப்படுதல் வேண்டும்; ஆயிடை எதிர்ப்பட்ட தலைமகள் இப்பெற்றியாள் இவ்விடைத் தனிவருதல் கூடாதாகலான் ஈண்டு உறைவதோர் தெய்வமோ? என்று ஐயுற்றான்: அதன்பின் பொழிலகத்து வாழ்வன மயில்கள் பலவுமுள: அவற்றுள் இஃதொரு மயில் விசேடமோ? என்று ஐயுற்றான் என்று கொள்ளப்படும். இதனுட்

காட்சி சொல்லி ஐயஞ் சொல்லுதலன்றே யிலக்கணம்: அது கூறாதது என்னை? யெனின், கண்ட காலத்துப் புணர்ச்சி வேட்கை தோற்றுகையுந் தோற்றாமையும் நிகழுமாதலான், அதனை யொழித்து அதற்குக் காரணமாகிய ஐய முதலாகச் சொன்னானென்க. இது தலைமகன் தலைமகளை எதிர்ப்பட்டுழி ஐயுற்றது. (1)

[1](கா - உ.) ஆற்றானாகிய தலைமகன் இவள் கால்நிலந் தோய்தலும் கண்ணிமைத்தலும் கண்ணி வாடுதலும் பிறவும் கண்டு தெய்வ வடிவில் தீர்வுடைய மக்களுள் ஒருத்தியென அறிந்து மற்றதுவே பற்றுக் கோடாக உளனாகிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லி யறிவிக்கின்றது மேலிற் செய்யுள்.

கா. 2.

ப. 2.

நோக்கினா ணோக்கெதிர் நோக்குத
தானைக்கொண் டன்ன துடைத்து.

றாக்கணங்கு

(கா - உ.) என்பது.—கண்ணுக்கு இனியதாகிய மிக்க அழகினை யுடையாள் நாட்டத்து எதிர்நோக்கும் தன்மை நெஞ்சே! எத்தன் மைத்தோ? எனின், அனைத்துயிரையும் விதிவழி வந்து தாக்குவ தாகிய கூற்றுப் பின்னும் தன்திறல் போதாமல் சேனையும் கொண்டு வந்த அவ்வொப்புடைத்தென்று இங்ஙனம் வருந்தித் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது என்றவாறு. இவ்வுருவு கொண்டதோர் கூற்றம் இதுவென்று இங்ஙனம் இவன் தன்னெஞ்சிற்குச் சொல்லி யறிவிக்கின்றது மேலைச்செய்யுள்.

²(ப - உ.) என்பது.—இவ்வழகினை யுடையாள் எனது நோக்கின் எதிர்நோக்குதல், தானே வருத்தவல்ல தெய்வம் சேனையைக்கொண்டு வந்தது போலு மென்றவாறு.

தெய்வத்திற்கு உவமை வடிவு. தானைக்கு உவமை நோக்கம்.

இது மெய்கண்டு வருந்துவான், கண் கண்டதனுன் வருத்தம் மிக் கமை கூறியது. (2)

கா. 3. ப. 3.

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

(கா - உ.) என்பது.—உலகத்து உயிர் கவர்ந்து ஒழுகுங் கூற்று என்பதொன்று உளதென்று கேட்டறியும் அத்துணை அல்லது பண்டு ஒன்றும் கண்டறியேன் கூற்று என்பது; மற்று அஃது இப்பொழுது கண்டறிந்தேன்; இப்பெண்மைக் கோலத்துடன் பெருமித்து அமர்

1. காலிங்கர் உரை என்று படித்துக்கொள்ளுக.

2. பரிப்பெருமாள் உரை என்று படித்துக்கொள்ளுக.



செய்யும் கண்ணினை யுடைத்தென்று தலைமகன் வருத்தத்தோடு னெஞ்சிற்குச் சொல்லிய தென்றவாறு. இன்னமும்,
தன்

(ப - உ.) என்பது.—பண்டு கூற்றினது வடிவு இன்ன பெற்றித்து என்று அறியேன்; இப்பொழுது அறிந்தேன்; பெண் தகைமை யோடே கூடப் பெருத்து அமர்த்த கண்களை யுடைத்து என்றவாறு.

கூற்று என்று அறிந்தேன் என்றது மேல் ஐயப்பட்ட மூன்றினும் எம்மை வருத்துதற்குத் தக்காளென்னும் குறிப்பு. பெண்தகைமை யாகிய நடையும் கண்ணிமைத்தலும் கண்டு மக்களுள்ளாள் என்று தேறியது. (3)

கா. 4.

ப. 5.

கொடும்புருவம் கோடா மறப்பி
செய்யல மன்னிவள் கண்.

னடுங்களுர்

(கா - உ.) என்பது—இவளது கோடுதலுடைய புருவம் கோடாதவாய் மற்று அவ்வினை மறந்துளவாயின் நெஞ்சமே! யாம் இங்ஙனம் உள் நடுங்கு துயரஞ் செய்தல் இல்லை இவள் கண்ணென்ற வாறு. அன்றியும்,

(ப - உ.) என்பது.—இக்கொடிய புருவம் இவள் கண்கள் என்னைத் துன்பம் செய்வதன் முன்பே கோடி மறைத்தனவாயின், அதனைக் கடந்து போந்து, எனக்கு நடுங்கப்படும் துன்பஞ் செய்யலாற்றாவே அவை யென்றவாறு.

மேல் தலைமகன் கூறிய சொற்கேட்டு நாணமுற்ற தலைமகள்
தலையிறைஞ்சியவழிக் கண்ணை மறைத்துத் தோற்றிய புருவ முரிவு கண்டு தலைமகன் கூறியது. (4)

பரி. பா - ம். மறைப்பி.

கா. 5.
ப. 7.

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! இவள் கண் நமதுயிர் நடுக்கம் செய்தலாற் கூற்றமென்றும், குளிர்ந்த நோக்குடைமையிற் கண்ணுருவுதானேயோ என்றும், வெரூஉதற் பேதைமை தோன்றப் பிறழ்தலின் பிணைமான் விழிவடிவோ என்றும், இங்ஙனம் நீயே உற்று வருந்துதலால் இவை இத்துணையும் ஒருங்குடைத்து இவள் நோக்கமென்பதனால் தனது வருத்தம் ஒருகாலைக்கு ஒருகால் மிக்குச் செல்லுகின்றமை பிகுத்துரைத்தது கருத்து என்றவாறு.

(ப - உ.) என்பது.—கொடுமை செய்தலாற்கூற்றமோ? அருள் செய்தலாற் கண்ணோ? வெருவுதலான் மான்பிணையோ? மடவரலே! நினது நோக்கமான இவை மூன்று பகுதியையு முடைத்து; அவற்றுள் யாதோ? வென்றவாறு.

தலைமகள் குறிப்பறிதற் பொருட்டுத் தலைமகன் கூறியது. (5) கா. 6.

ப. 4.

கண்டா ருயிருண் ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்

பேதைக் கமர்த்தன கண்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இவ்விடத்து வந்து கண்டவ ராகிய நமது உயிர்பருகும் தன்மையே இவை யிரண்டினுஞ் சாலப் புலப்படத் திகழ்தலால், இப்பெண்மை நலனும் பேதைமையும் உடையாட்கு இதனால் இயன்றன கண்ணெனவே, இரண்டும் ஒருவாற்றால் இத்துயர்க்கு ஒரு தண்ணளி செய்வன போலுமென்பது கருத்தென்றவாறு.

(ப - உ. ) என்பது. —தன்னைக் கண்டவர்கள் உயிரை உண்ணும் தோற்றத்தாலே பெண் தகைமையை உடைய பேதைக்கு ஒத்தன கண்ணென்றவாறு.

அமர்தல் - மேவல். அது பொருத்தத்தின் வந்தது. பேதையோ டொத்த தொழிலுடைத்தென்று கண்ணின் கொடுமை யுட்கொண்டு கூறுதல். (6)

கா. 7.

ப. 8.

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! தன் பெண்மை அழகு பேரொளி சிறத்தற்குப் பெடைமான் நோக்கனைய அழகும் மடப்ப மும் சிறந்த நோக்கினது நலத்திற்கு இயல்பாகிய நாணினையும் தனக்கு உடையளாகிய இவட்கு இனிவேறு சில தந்து அணிகின்ற அணி என்னையோ? எனவே நம்மை வருத்துகின்றது மற்று இப்பிறவணியும் வந்து படைத்துணை செய்யவேண்டுமோ வென்று பின்னும் தன்னுறு துயரம் தன் நெஞ்சொடு கிளத்தல் கருத்தென்றவாறு.

(ப - உ.) என்பது.—பிணையை யொத்த மடப்பத்தினையுடைய நோக்கினையும், நாணினையும் உடையவட்குப் பிறிது அணிதந்து அணிகை யாதினைக் கருதியோ? பிறரை வருத்துதற்கு இவைதாமே யமையு மென்றவாறு.

1. தகையணங்குறுத்தல்

7

மேல் தலைமகன் கூறிய சொற்கேட்டு

வாளாது நிற்றல் ஆற்றாது தன் அணிகலனைத்
நாணுற்ற தலைமகள்
தொட்டுழி, அதனை
நோக்கி இத்தன்மையாட்கு இதனையும் அணிதல் வேண்டுமோ என்று
தமரைக் கொடுமை கூறுவான் போல நலம் பாராட்டியது. (7)

கா. 8. ப. 9.

கடாஅக் களிற்றின்மேற் கட்படா
மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

(கா - உ) என்பது.—கொலைவினை காத்தற்கு மதக்களிற்றின்
மாட்டு உறுத்திய முகபடாமன்; அது யாதோவெனின், நெஞ்சே!

இம்மாதாாள் தனது முகஞ்செய் பருவமாகிய இளமுலைமேல்
கிய உத்தரியப் பட்டாடை என்பது கருத்தென்றவாறு.
துவக்

(ப - உ.) மதயானை முகத்துக் கண்மறைவாக
விட்ட படாம் போலும்; மாதரே! நினது
படாதமுலை மேலிட்ட துகிலென்றவாறு. நீக்கிற்
கொல்லுமென்பது கருத்து. முலைகண்டு
அவ்வேட்கை யால் தலைமகன் கூறியது.
இத்துணையும் தலைமகன் கூற்று. (8)

கா. 9.

ப. 6.

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே
ணண்ணரு முட்குமென் பீடு.

ஞாட்பினு

(கா - உ.) என்பது.—நெஞ்சமே!
இவ்வொளிய நுதலினை உடையாள் பொருட்டு
மிகவும் கேடு அடைந்தது; யாதோஎனின், போர்த்
தொழிலிடத்துப் பகைவரும் அஞ்சும் எனது
நெஞ்சு உரம் என்றவாறு.

(ப - உ.) என்பது.—இவ்வொளிய நுதற்கு
மிகவும் கெட்டது;
போரின்கண் கிட்டாதாரும் உட்கும் எனது வலி
யென்றவாறு.

உம்மை யெச்சவும்மை. கிட்டினர் உட்கு முன்பே அமைந்து கிடந்தது. மேற்கூறிய சொற்கேட்ட தலைமகள் மிகவுங் கவிழ்ந்து நிலன் நோக்கியவழிப் புருவத்தின்மேற் றோற்றிய நுதல்கண்டு கூறியது.

(9) கா. 10.
ப. 10.

உண்டார்க ணல்ல தடுநறாக்
காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே!

அடப்பட்ட நறவாகிய கள் ளானது உண்டாரை மனக்களி செய்யும் இத்துணை அல்லது காதல் உருபு கண்டவிடத்துக் களிசெய்யும் காமம்போலத் தன்னைக் கண்டாரைக் களிப்புறுத்தல் எஞ்ஞான்று மில்லை என்றவாறு.



(ப - உ.) என்பது.—உண்டார் மாட்டு அல்லது அடப்பட்ட நறவு காமம்போலக் கண்டார் மாட்டு மகிழ்ச்சி செய்தல் இன்றென்ற வாறு. இது தலைமகனைத் தலைமகள் கண்டுழி வருத்தமுற்றுக் கருதியது. (10)

(கா - உ.) இனி மற்றிங்ஙனம் தன்னெஞ்சம் அவளுழைக் காதலுறினும்
யன்றே:

தான் அவளது உள்ளக்குறிப்பு உணராக்கால் ஒரு பயனில்லை அதனால் மற்றிதன் பின்னரே அதனை யறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 2. (கா.) குறிப்புணர்தல்.—(பரி.)

## குறிப்பறிதல்.

(ப - உ.) குறிப்பறிதலாவது தலைமகள் உள்ளக் கருத்துத் தலைமகன் அறிதல். இது தலைமகற்கே யுரித்து. பெண்டிர் நாணமுடையரன்றே! அவாறு உள்ளக் கருத்து வெளிப்படுமாறு என்னையெனின், மேலை யதிகாரத்துத் தலைமகனைக் கண்ட தலைமகள்,

"காமம்போ

கண்டார் மகிழ்செய்தல்" இன்றென்று நினைத்தாளாகக் கூறிஐ ரன்றே: அதனானே கண்ணும் முகமும் வேறுபடும்; அதனானே அறியலாகும். மனக்குறிப்பு அறிதல் கூறியது எற்றுக்கு? பிறவாற்று னுங் கூடுதற்கு நெறியுளவாலெனின், பிறவாற்றாற் கூடுங்கால், குரவ ராற் கூடிற் பெருந்திணையாம்; பொருள் கொடுத்துச் சாரின் அசு மாம்; வலியிற் சாரின் இராக்கதமாம்; மறவியிற் சாரின் பசாசமாம்; ஆதலின் இக்கூட்டத்துக்குக் குறிப்பறிந்தே புணர வேண்டுதலின் இது கூறப்பட்டது. மேலதனோடு இயைபும் இது. இது தலைமகற் குறிந் தன்றோவெனின் அவன் வெளிப்பட இரத்தலான் வேண்டா என்க

கா. 1. ப. 1

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! இவளது மையுண்ட கண் ணின்கண் ணுளதாகிய நோக்குத்தான் நம்பால் இரண்டு நோக்கா யிருந்தது. இஃது எங்ஙனமெனில், ஒரு நோக்கு நம்மிடர் செய்யு நோக்கம்: ஒரு நோக்கம் மற்று அவ்விடர் தணித்தற்கு ஓர் தனி மருந்து போலும் என்றவாறு. எனவே எங்கும் ஓடும்போது நோக் கின், தனக்கு ஒரு பயனின்மையின் நோயதென்றும், இனித் தன் வயிற் சென்ற நோக்குத் தனது உயிர் ஆற்றற்கோர் தண்ணளி யான யால் இடர்தணி நோக்கு என்றும், இங்ஙனம் இவள் நோக்கினை பிரித்துக்கொண்டு அவன் உட்குறிப்பறிந்தா னென்பது கருத்து என்றவாறு.

---

1. 10-வது, குறள்.

## 2. குறிப்புணர்தல்

(ப - உ.) என்பது.—இவள் மைஉண் கண்ணின் உள்ள நோக்கம் இரண்டு வகைத்து; அவ்விரு வகையினும் ஒருநோக்கு நோய் செய்யும்: ஒரு நோக்கு அதற்கு மருந்து ஆம் என்றவாறு.

நோய்நோக்கு என்பது முதல் நோக்கின நோக்கு: மருந்து நோக்கம் என்பது இதனால் வருத்தமுற்ற தலைமகனைத் தலைமகள் கலங்கி நாணொடு கூடி நோக்கின நோக்கம். அதனானே உடம்பாடு காண்டலின் மருந்து ஆயிற்று. இது நாணி நோக்குதல் உடம்படுதலாம் என்றது. (1)

கா. 2. ப. 7.

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா

ஞேக்கப்

பசையினள் பைய நகும்.

(கா - உ.) என்பது.—அசைந்த இயல்பினை

உடையாள் மாட்டுப்

பின்னும் ஓர் நன்மை உண்டு: யாதோ எனில், யான் தன்னை நோக்கிய நோக்கு எதிர் தானும் நம்மாட்டு உள்ளத்தால் ஒருநோய்தல் உடையாள் போல மெல்ல நிகழ்வதொரு முறுவல் உண்டென எய்து பற்றுக்கோடாக அப்பொழுதைக்கு ஆறுதல் உளன் தலைமகன் என்பது கருத்து என்றவாறு. ஆண்டோரோர் என்பது அவ்விடத்து ஓர் அழகு என்றவாறு.

(ப - உ.) என்பது.—அசைந்த விடத்து ஓர் அழகு உண்டு; யான் நின்றாள் என்றவாறு.

இயல்பினை உடையாட்கு அவ்
நோக்க நெகிழ்ந்து மெல்ல நகா

அவ்விடம் என்றது அவள் நெகிழ்ந்து நக்க விடம். அழகு உண்டு என்றது தன் வடிவினும் மிக்கது குணமெனக் குறிப்பு அறிந்தான் ஆதலான் என்றவாறு.

காமக்குறிப்புத் தோற்ற

பைய நகுதல்-ஓசைப்படாமை நகுதல். இது நின்று நகுதல் உடம்படுதலாம் என்றது. (2) கா. 3.

ப. 2.

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா
ளாப்பினு ளட்டிய நீர்.

ளஃதவள்

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! இங்ஙனம் சிறந்த நோக்கினை உடையாள் முன்னம் தான் நோக்கிப் பின்னர் யான் தன்னை நோக்கும் இடத்து எதிர் நோக்கு இன்றி முகம் இறைஞ்சி நின்றாள். மற்று அஃது யாதினை ஒக்குமோவெனில் ஓர்ப்புறைந்த இடத்துப் பின்னும் அதற்கு உறுதி பெறுவதாக நீர் பெய்து கூறு கொண்டாற் போலத் தானும் நம் இடத்து ஓர்த்தற் குறிப்புடைமை வைப்புறுத்தினாள் போலுமென்று மகிழ்ந்து தேறினான் தலைமகனென்பது கருத்தென்றவாறு.

2



(ப-உ.) என்பது.—முற்பட நோக்கிப் பின்பு அஃது அவள் நட்பு வளர வார்த்த நீரென்றவாறு.

நாணினாள்; நாண் போகாமைக்குக் காரணம் என்பதனை யாப்பு என்று கூறினார்.

கூறியவாறு ஆயிற்று. பந்தம் பார்த்தவள் பெயராது நாணி நிற்றலும் உடன்படுதலாம் என்றது.

(3) கா. 4.

ப. 3.

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! யான் தன்னை நோக்கும் நோத்து நாணினள் போலத் தான் நிலம் நோக்கி நிற்கும்: யான் அவள் குறிப்பு அறிதற்கு நோக்காதேன் போலக் கடைக்கணித்து நின்ற நோத்துத் தான் என்னை நோக்கி மெல்லென வேறாய் உள்முறு வல் செய்யுமெனவே தன்வயிற் கொண்டதோர் குறிப்பின் முணம் பற்றிக்கொண்டு இன்புற்று ஆற்றினு னென்பது கருத்தென்றவாறு.

(ப - உ.) என்பது.—யான் தன்னைப் பார்க்குங்கால் தான் நில னைப் பார்க்கும். யான் பாராத காலத்துத் தான் மல் நகுமென்றவாறு.
பார்த்தது தோற்று

மெல்ல நகுதல்—முகிழ்முகிழ்த்தல் ; எதிர் படுதலாமென்றது.

நோக்காமல் உடன் கா. 5.
(4)
ப. 4

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங்
செம்பாக மன்று பெரிது.

காமத்திற்

(கா - உ.) என்பது.—இங்ஙனம் இவளது கண்களானவை வேறு புலப்படாதவாறு தாம் காதல் உருபினைக் கவர்ந்து கொள்வது போலும் சிறு நோக்கமானது காமச்சுவையைப் பகுத்துணரின் யாண்டும் ·பர்ந்த முழு நோக்குடைய கலவியான காமத்திற் செவ்வனம் பகுத்த பாகச்சுவைப் பங்கெனவே அன்றியும் பின்னும் பெரிதெனலாமென்று இங்ஙனம் பெற்றான் போல்வதோர் பற்றுக்கோடு எய்திச் சிறிது படர் தீர்ந்தானென்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது—என் கண்களைச் சோர்வு பார்த்துக் களவினால் நோக்குகின்ற சிறிய நோக்கம் வேண்டப்பட்ட பொருளிற் பாதியே யன்று: பெரிது ; என்றவாறு.

*சோர்வு பார்த்தலாவது தலைமகன் தனது காதலினாலே எப்பொழுதும் நோக்குவனன்றே ; தலைமகளுக்கும் அவ்வாறு நோக்க வேண்டுதலின் அவன் பாராக் காலத்தைக் குறித்து நிற்றல். களவினான் நோக்குதலாவது அக்காலத்தே நோக்குதல். தலைமகன் காணா*





*மல் நோக்குதலின் களவு ஆயிற்று. கொள்ளுதல் நோக்குதற் பொருள்மேல் வருதலின் நோக்கு ஆயிற்று. சிறு நோக்கமாவது பார்த்ததும் மீளுதல். நெடிது நோக்காமையிற் சிறிது ஆயிற்று. வேண்டப்பட்ட பொருளாவது புணர்ச்சி. செம்பாக மன்று பெரிது என்பது அதற்குப் பாதி இசைவுக்கு மேலே பெற்றேம் என்பது.*

*இது மறைய நோக்குதல் உடம்பாடென்றது.* (5)

கா. 6.

ப. 6.

குறிக்கொண்டு நோக்காமை யல்லா
சிறக்கணித்தாள் போல நகும்.

லொருகண்

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! நம்மோடு பயின்றிலாமை யிற் குறிக்கொண்டு எதிர்முகம் நோக்காமை அல்லது நங்கண் தனது உட்குறிப்பினு ளொருகண் கடைக்கணித்தாள் போல நின்று அகமுறுவல் செய்யுமெனவே மற்றொன்று நோக்குவாள்போல முகம் புரிந்தும் இப்பக்கத்து விழிக்கடை நோக்கு என் கண்ணதே போல்வதோர் இன்பப் புன்முறுவல் செய்யுமென முன்னிலையினும் பின்னிலைக் குறி வேற்றுமை கண்டு மற்றிது பற்றுக்கோடாக ஆறினனென்பது பொருளாயிற் றென்றவாறு.

(ப - உ.) என்பது.—குறித்து நோக்காமை உடம்பட்டாள் போல நகாநின்றாள் என்றவாறு.

அல்லாது ஒருகால்

உடம்பட்டாள் போல நகுதல்—அஃதாவது காமக் குறிப்புடையார் போல நகுதல். அதனை வெளிப்பட நில்லாமையிற் போல என்றார். அஃதாவது நகை தோற்றிய வழிப் பிறிது ஒன்று கண்டாள் போல நகுதல்.

இதன் குறிப்புத் தோற்றுமல் மறைத்து

நகுதலுடம்படுதல் ஆவது.

(6) க.ர. 7.

ப. 5.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! இங்ஙனம் குறிக்கொண்டு நோக்காது அயலார் போலப் பொதுநோக்கு நோக்குதலும் மற்று உள்ளத்துக் காதலுடையோர் மாட்டேயும் உளவென்பது கண்டனம். அதனான் முன்னர் ஒரு நோக்கு நோய்நோக்கன்றி யாம் அஞ்சியதூஉம் இனிமைக்கூறு என்பது சிறிது பயின்ற இடத்துத் தெளிந்தனம் என்று ஆற்றாமை சிறிது நீங்கினான் தலைமகனென்றவாறு.

(ப - உ.) என்பது.—அயலார் போலப் பொதுப்பட காதலித்தார் மாட்டே உளவாம் என்றவாறு.

நோக்குதல்



நோக்குதற் பன்மையால் உளவென்றார்.
காமையும் உடம்படுதல் என்றது.
இது குறித்து நோக்
(7)

கா. 8.
ப. 10.

கண்ணொடு கண்ணிணை
நோக்கொக்கின் வாய்ச்
சொற்கொண்
டென்ன பயனு மில.

(கா - உ.) என்பது.—கேளாய் நெஞ்சே! ஒருவனோடு ஒருத்தி யிடை மற்று அவர்தம் கண்ணொடு கண்ணெதிர்ந்து நோக்குங்கால், நெஞ்சில் காதல் குறிப்புக் கண்ணில் புலப்படுமாறு இரண்டு நோக்கும் தம்மில் ஒக்கக் குளிர்ந்திருக்கப்பெறின், மற்று வாய்ச்சொற் கொண்டு என்ன பயனும் இல எனவே, யாம் இவள் வாய்ச்சொல் கேட்கப் பெறின் எனைத்துப் பயனும் அதன்கண்ணே நிகழுமென்று அவள் சொற்கேட்டலும் காதலித்தான் தலைமகன் என்பது கருத்தென்றவாறு. இதனால் இயற்கைப்புணர்ச்சி எய்தினான் தலைமகனென்பதூஉம் மற்று அவள் இன்சொல் கேட்ட கருத்துண்மையும் புலப்பட்டதென அறிக.

(ப - உ.) என்பது.—கண்களோடு கண்கள் காமக் குறிப்பினால் நோக்கும் நோக்கம் ஒக்குமாயின், வாயினால் கூறும் சொற்கள் ஒரு பயனும் உடைய வல்ல என்றவாறு.

இது சார்தல் உறுகின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. (8)

பரி. பா - ம். வாய்ச்சொற்கள்.

கா. 9.
ப. 8.

உரு அ தவர்போற் சொலினுஞ்
செரு அர்சொ
லொல்லை யுணரப் படும்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நெஞ்சிற் பரிவுறுதார்போற் சில சொல்லினும் பரிவுடையார் சொல்லும் சொல்லினது குறிப்பினை அறுதரிக்க அடாது; மற்று இதன் கருத்து என்னைகொல் என்று விரைந்து குறித்துணா அடுக்கும் என்பதனால், தனக்கு ஆற்றுமை வந்த இடத்து இதுவும் ஒரு பற்றுக்கோடு ஆயிற்று என்றவாறு.

(ப - உ.) கூடாதவர்போல் சொல்லினும் செறுதல் இல்லாதார் சொல்லை இதற்குக் காரணம் பிறிது ஒன்று அறியவேண்டும் என்றவாறு.

உளது என்று விரைந்து

மனம்
யுறுத்துதற்

நெகிழ்ச்சி கண்டு சாருற்ற தலைமகனைத்
பொருட்டுக் கடுஞ்சொல் கூறித் தலைமகள்

தனதில் வலி
நீங்கின வழி,

இஃது உள்ளன்பு இன்மையால் கூறினள் அல்லள்; அதற்குக் ணம் யாதென்று தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

கா

## 3. புணர்ச்சியின் மகிழ்தல்

இஃது உறுப்பினல் இசைவுகாட்டி
உடம்படுதல் ஆம் என்றது.
உரையினல் மறுப்பினும் கா. 10.
(9)

ப. 9.

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ
ஞேக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

(கா - உ). என்பது—நெஞ்சமே! நமக்கு ஒன்று சொல்லினும் இவள் எங்ஙனம் சொல்லுமோ என்று இடர் உறவேண்டா; உள்ளத்தால் செறுது புறம்பு உரைக்கும் புன்சொல்லும் அங்ஙனம் சிரியாசே செற்றுரைப் போல்வதோர் நோக்கும் இவை இரண்டும் புறத்துப் பரிவிலாதார் போன்று வைத்து அகத்து அன்புடையார் செய்யும் மனக் குறிப்பென்று ஆற்றியுளேம் ஆதலே கருமம் யிற்று என்றவாறு.
என்பது பொருளா

(ப - உ.) என்பது. —செறுதல் இல்லாக்

கடுஞ்சொல்லும் செற்
றுரைப் போல நோக்குதலும் அன்புறுதார்
குறிப்பென்று கொள்ளப்படு மென்றவாறு.

போல அன்புற்றாது

மேல் தலைமகன் கூறிய கடுஞ்சொல்லும்
அதன்பின் கடுத்து
நோக்கின
தோற்றம்

நோக்கமும் குறித்து இவ்வாறு செய்யினும்
இல்லாமையின் உடம்பாடு என்று தேறியது.

அன்பின்மை
(10)

(கா - உ.) இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தலைமகள் மாட்டு அன்பு பெரிது உடையன் என்று இன்புறுதல் காரணமாகத் தன் நெஞ்சிற்குச் சொல்லுவான் போன்று அவள் அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.—

கேட்பச் சொல்லி

3. (கா.) புணர்ச்சியின் மகிழ்தல்.—(பரி.)
புணர்ச்சி மகிழ்தல்.

(ப-உ.) புணர்ச்சி மகிழ்தலாவது தலைமகள் குறிப்பு அறிந்து புணர்ந்த தலைமகன் புணர்ச்சியினை மகிழ்ந்து கூறுதல். மேலதனோடு இயையும் இது. இது தலைமகட்கு உரித்தன்றோ எனின், அவட்கும் ஒக்குமாயினும் அவன் மாட்டுக் குறிப்பினான் நிகழின் அல்லது கூற்றினான் நிகழாதென்க.

கா. 1. ப. 2.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு
மொண்டொடி கண்ணே யுள.

ஐம்புலனு

(கா-உ.) என்பது.—தாம் எப்பொழுதும் கண்ணுக்கு இனிய ..................வுறுதலுமன்றே: அதனால் இவை இத்துணையும் நம் மாற் காதலிக்கப்பட்ட இவ்வொண்டொடி மாட்டே உளவாகலான் இனிப் புறத்துப் போய் ஒன்று அறிவுற வேண்டுவதில்லை; இவ்வாறு



இவளோடு இன்புற்று இனிது வாழ்தற்கு யாம் முன்னம் என்ன தவஞ் செய்தனம்; இது என்ன வியப்போ என்று இங்ஙனம் தன் நெஞ்சிற்குச் சொல்லுவானைத் தலைமகள் கேட்பச் சொல்லியது பொருளென்றவாறு.

(ப-உ.) என்பது.—கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிகின்ற ஐந்து புலனும் இவ்வொள்ளிய தொடியை உடையாள் மாட்டே உளவென்றவாறு.

பொறிகள் ஐந்தினுக்கும் ஒரு
புணர்ச்சியை வியந்து கூறியது.

காலத்தே இன்பம் பயந்ததென்று

கா. 2.

வீழு மிருவர்க் கினிதே வளியிடைப்
போழப் படாஅ முயக்கு.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! உள்ளுற விரும்பும் விருப்ப
இருவர்க்கும் சால இனியது ஒன்றுளது; அஃது யாது எனின்
நுண்ணிதாகிய காற்றும் ஊடு போதாற்கு இடனில்லாதவாறு இரு
முறுக முயங்கப் பெறும் முயக்கம் என்றவாறு.

(ப - உ.) என்பது.—காதல் உடையார்
இருவர்க்கு இனி
ஆம்: காற்றும் இடையறுத முயக்கம் என்றவாறு.

என்றது இடையறுதல் இல்லாத முயக்கம் என்றவாறு ஆயிற்று தோழியிற் கூடிய தலைமகன் பகற்குறி யாயினும் இரவுக்குறி யாயினும் ஒழுகா நின்றுழிக் காவல் கடுகுதல், நிலவு வெளிப்பாடு, அல்ல குறி முதலாயினவற்றால் இடையீடு பட்ட தலைமகட்குத்[1] தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும் தோற்ற ஊடற்குறிப்பினால் தலைமகன் கூறியது. புணர்ச்சி விருப்பினாற் கூறினமையால் புணர்ச்சி மகிழ்தலாயிற்று. இது குறிப்பினால் (பு)கழ்ந்தது. (2)

கா. 3. ப. 1

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(கா - உ.) என்பது.—கேளாய் நெஞ்சே!

உலகத்து வினை
யான் வந்துற்ற நோய்க்கு அது தணித்தற்கு மருந்து பிற ஆம் இத்துணை: இனி மற்று இவ்வணியிழை தன்னால் முன் நமக்குளதாகிய நோய் பின் தணிதற்கு மருந்து தானே ஆயினள்: அது என்ன வியப்போ என்றவாறு.

---

1. (தொல். களவு. ௱௬. இ.)

3. புணர்ச்சியின் மகிழ்தல்



(ப - உ.) என்பது.—நோய் உற்றால் அதற்கு மருந்தாவது பிறிதொன்று: இவ்வணியிழையால் வந்த நோய்க்குக் காரணமாகிய இவள் தானே மருந்தாயினள் என்றவாறு.

இது புணர்வதன் முன்னின்ற வேட்கை தணிந்தமை கூறிற்று.

(3)

கா. 4.

ப. 4.

தாம்வீழ்வார் மென்றோ டுயிலி
னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

(கா - உ) என்பது.—நெஞ்சே! நாம் விரும்புதற்கு உரிமையுடையோர் தமது மென்றோள் மேவித் துயிலும் துயிலின் இனிமை போல இனிதோதான்? இது அன்று; யாதெனின், ஆயிரம் வேள்வியின் எய்துவாராத அருமறை கூறும் அயனுலகு ஆண்டு உறும் இன்பம் என்றவாறு. தாமரைக் கண்ணானென்பது தாமரை யிடத்தானென்றது. மாயவன் உறையும் வைகுந்த உலக மென்றும் ஆம்.

(ப - உ.) என்பது.—தாம் விரும்பப் படுவாரது மெல்லிய தோளின்கண் துயிலும் துயிலினு மினிதோ: இந்திரனது ஸ்வர்க்கம் என்றவாறு.

ஸ்வர்க்கத்தின்பமும் இதுதானே என்று கூறியது. (4)

கா. 5.

ப. 5.

வேட்ட பொழுதி னவையவை

போலுமே
தோட்டார் கதுப்பினு டோள்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! உலகத்து யாதானும் ஒரு பொருள்களை விரும்பினால் விரும்பின பொழுதிலே அவை அவை எய்தி இன்புறல் யார்க்கும் அரிது: அவ்வாறு அன்றி அவை அவை விரும்பிய பொழுதே எளிதாக எய்தி இன்புறும் இனிமை போலும் இதழ் ஆர்ந்த சுரிகுழலினுள் தோள் நமக்கென்றவாறு.

பரி. பா - ம். தோட்டாழ் கதுப்பினள்.

(ப - உ.) என்பது.—காதலித்த பொழுது காதலிக்கப் பட்ட அவ்வப் பொருள்களைப் போலும் தோளின்கண் தாழ்ந்த கூந்தலையுடையவள் தோள் என்றவாறு.

தோள் தாழ் கதுப்பு - புணர்ச்சிக் காலத்துத் தாழ்ந்து அசைந்த கூந்தல்.

இதனை ஒழியப் பிறிதொன்று தோற்றுகின்ற தில்லையென்று கூறியது அன்றி, யாம் காதலிக்கப்பட்ட பொருள்கள் அக்காலத்தே

முயலாமற் பெற்றதனோடு ஒத்த உவகையை மிகுக்கும் என்றும் ஆம். (5)

கா. 6. ப. 8.

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமுதி னியன்றன தோள்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யாம் இங்ஙனம் இருந்தவள் மெய்யோடு மெய்யுறு தோறும் ஒருகாலைக்கு ஒருகால் நமது உயிர் தளிர்த்து எழுறுமாறு முயங்கிச் சேறலான் இப்பேதையாட்கு அமிழ் தினுன் அமைத்தன போலும் இத்தோள்களானவை என்றவாறு.

(ப - உ.) என்பது.—சாருந் தோறும் என்னுயிர் தழைப்பச் சார்தலாற் பேதைக்குத் தோள்கள் அமிழ்தினாற் செய்யப்பட்டன ஆகவேண்டும் என்றவாறு.

சாராத காலத்து இறந்துபடுவதான உயிரைத் தழைக்கப் பண் ணுதலால் அமிழ்தம் போன்றது. இது கூடின தலைமகன் மகிழ்ந்து கூறியது. (6)

கா. 7. ப. 7.

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! உலகத்துத் தீயினது இலக் கணம், தன்னை வந்து அணுகின் சுடுதலும், அகலின் மெய்தண் ணென்றலுஞ் செய்யும் அது வல்லது இங்ஙனம் சிறிது தன்னை அக லின் சுடுதலும், அணுகின் தண்ணென்றலும் செய்யும் இந்தத் தீ இவள் எவ்விடத்துப் பெற்றனள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—தன்னை நீங்கின இடத்துச்சுடும்; குறு கின இடத்துக் குளிரும்: இத்தன்மை யாகிய தீ எவ்விடத்துப் பெற்

ருள் இவள், என்றவாறு.

இரண்டாம் கூட்டத்துக் கூடலுற்ற தலைமகன் தலைமகள் கேட்பது பயனாகத் தனது வேட்கை தோன்றச் சொல்லியது. இது புணர்ச்சி வேட்கையாற் கூறுதலாற் புணர்ச்சி மகிழ்தலாயிற்று. (7)

கா. 8.

ப. 6.

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்

செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

(கா - உ.) என்பது—நெஞ்சே! யாம் பல வகைப்பட்ட நூல்களையும் கற்று அவற்றின் கருத்து அறியுந்தோறும் அறியுந்தோறும் மற்றது ஒழிந்த நன்னூலும் அவ்வாறு கற்று இனிது அறியப்



பெருமையாகிய விரும்புதலை நெஞ்சிற் கண்டு செல்கின்ற அதுவே போல இந்தச் சேயிழையாளை யாம் செறியும் தொறும் செறியும் தொறும் இவள் திறத்து நமது உள்ளம் செல்கின்ற காமச் சுவையும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—யாதானும் ஒன்றை அறியுந்தோறும் அறியாமை தோற்றினாற் போலும் இச்சேயிழை மாட்டுப் புணரும் புணர்ச்சியும் புணரும் தோறும் அமையாமை என்றவாறு.

காமப் புணர்ச்சி யாயிற்று : இஃது

அமைவின்மை கூறியது. (8)

கா. 9.

ப. 3.

தம்மி லிருந்து தமதுபாத்
தம்மா வரிவை முயக்கு.

## துண்டற்று

(கா - உ.) என்பது.—கேளாய் நெஞ்சே ! தமக்குரிமையுடைய இல்லின்கண் இருந்து தமது தாளாண்மையால் நீதியின் தந்த பொருள்கொண்டு தாமே தனித்து உண்டு ஒழியக் கருதாது பலர்க்கும் பகுத்துண்டு வாழ்தலின் இனிமை எத்தன்மைத்து: மற்று அத்தன்மை உடையது யாதோ எனில் இவ்வரிவையை யாம் ஒரு பொழுதும் இடைவிடாது முயங்கப் பெறு முயக்கின் நன்மை என்றவாறு.

(ப - உ.) என்பது.—தம்மிடத்தே இருந்து தமது தாளாண்மையாற் பெற்ற பொருளை இல்லாதார்க்குப் பகுத்து உண்டாற்போலும்: அழகிய மாமை நிறத்தினை யுடைய அரிவையது முயக்கம் என்றவாறு.

உணவினு மதனின் மிக்க இன்பம் தருவது இல்லை: யின் இதனின் மிக்க இன்பம் தருவது இல்லை என்று அதன் கூறியது.

புணர்ச்சி
இனிமை
(9)

கா. 10.

ப. 10.

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இன்னமுங் கேளாய்: இவ்வளவு அன்றிப் பலவுள; அவை யாவை யெனில் ஊடி இன்புறுதலும், அவ்வூடல் தீர்த்தார்க்குப் பணிதலும், பணிந்து பணிமொழி கூறி இன்புறுதலும் என்னும் இவை எல்லாம் காம இன்பக் கலவியைக் கலந்தார் பெற்ற பெரும்பயன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஊடுதலும் ஊடல் தீர்தலும் பின்னைப் புணர்தலும் என இவை அன்றிக் கூடினோர் பெற்ற பயன் என்றவாறு.

௨

காமம் - அன்பு. ஊடற் குறிப்புத் தோற்ற நின்ற தலைமகளை ஊடல் தீர்த்துப் புணர்ந்த தலைமகன் அதனால் வந்த மகிழ்ச்சி கூறியது. காமம் கூடினார் பெற்ற பயன் என்றான்; முன்பு இவை கண்டு அறியாமையால். இவையெல்லாம் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லினவும் தலைமகளே கேட்பது பயனாகச் சொல்லினவும் என்று கொள்ளப்படும். இவற்றுள், "நீங்கிற் றெறூஉம்" என்பது முதலாகக் கூறியது என்னையோ எனின், முதலாகக் கூறிய குறள் நான்கும் நலம்புனைந் துரைத்தலின் பின்னும் காதற் சிறப்புரைத்தலின் பின்னும் நாணுத் துறவுரைத்தலின் பின்னும் கூறற்பாலன. ஈண்டுக்கூறியது களவு காலத்துக் கூடுங் கூட்டம் எல்லாம் அருமை யுடைத்து. ஆதலானும், ஆண்டுத் தனி ஓரதிகாரம் கூற வேண்டுதலானும், அது கூறுங்கானும் புணர்ச்சி மகிழ்தலென்று கூறவேண்டுதலானும் ஈண்டுச்சேரக் கூறப்பட்டன. ஆயின் இக்கூட்டங்கட்கு நிமித்தம் ஆகிய நலம்புனைந் துரைத்தல் முதலாகிய அதிகாரங்களை அருமையிற் கூடலென்று கூற வேண்டும் பிற எனின், ஒக்கும்: அவை எல்லாம் புணர்ந்த பின்பு நிகழ்தலானும் பாங்கற் கூட்டமும் தோழியிற் கூட்டமும் இயற்கைப் புணர்ச்சியோடு ஒத்த இயல்பிற் றன்மையானும், அவைதாம் பெரும் பான்மையும் பிரிந்து கூடுதலானும், கூறப்படா என்க. இதனுள், ஆலிங்கனம் முதலாயின கூறாது பசுக்களைப்போலப் புணர்ச்சி மாத்திரமே கூறிவிட்டது என்னை யெனின், [1]"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யுள" என்றாராகலின், அவையெல்லாம் இதனானே சொன்னா ரென்று கொள்ளப்படும். இது காமப் பகுதி யன்றே; இதனை வட நூலாசிரியர் கூறிய வாறுபோல விரித்துக் கூறாதது என்னை எனின், அந்நூலகத்து விரித்துக் கூறிய தெல்லாம் அளவும், காலமும், வேகமும், ஒவ்வாதாரை ஒப்பிக்கும் நெறியும், கைக்கிளை, பெருந்திணைப் பாற்பட்ட கன்னியரைக் கூடும் திறனும் கணிகையர் சீலமும் கூறினார்: ஈண்டு உழுவ லன்பினாற் கூடுகின்ற நற்கூட்டம் ஆகலின், இவையெல்லாம் விதியினாலே ஒக்க அமைந்து கிடக்கு மாதலாற் கூறாராயினாரென்க. (10)

(கா - உ.) இனி மற்றித் தன்மையனாகிய தலைமகன் நெடிது நினைந்து அவளுருபு நலங்கண்டு புகழ்ச்சி தோன்றப் புனைந்துரைக்கவே இருவரும் மனமகிழ்ச்சி எய்துவர் ஆகலான் மற்று அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 4. நலம்புனைந்துரைத்தல்.

(ப - உ.) நலம்புனைந் துரைத்தலாவது தலைமகளது நலத்தினை அலங்கார வகையாற் கூறுதல். புனைதலெனினும் அலங்கரித்தலெனினும் பேணுதலெனினும் ஒக்கும். புனைந்துரையும் பாராட்டெனினும்,



கொண்டாட்டெனினும், புகழ்ச்சியெனினும் ஒக்கும். புணர்ச்சியால் மகிழ்வுற்ற தலைமகன் பிரியக் கருதின காலத்துப் புணராத முன்னின்ற வேட்கை புணர்ந்த பின்னும் அப்பெற்றியே நிற்றலின், இத்தன்மையாளை யாங்ஙனம் பிரிந்து ஆற்றுகேம் என்னும் கவற்சியால் நெஞ்சு மிக்கது வாய்சோர்ந்து தன்னை அவள் காணாமல் தான் அவளைக் காண்பது ஓர் அணுமைக்கண் நின்று பாராட்டுகின்றான் ஆதலின் பிற் கூறப்பட்டது. இவ்வாறு கூறுதலானே தலைமகற்குச் சிறிது வேட்கை தணியும்: இதனைத் தலைமகள் கேட்டலினாலே இவன் அன்புடையன் கொல்லோ என்றும் இப்புணர்ச்சி இன்னும் கூடுமோ என்றும் சொல்கின்ற கவற்சி நீங்கும். [1]"மதியும் மடந்தை முகனும் அறியா"—இது தலைமகன்கண் ணுள்ளதோர் மெய்ப்பாடு. இது பிரிதற் குறிப்பு ஆதலின் பிரிந்து கூடலின் முன் கூறப்பட்டது. இது தலைமகட்கு உரித்து அன்றோ எனின், உரித்து ஆயினும் குறிப்பினான் அல்லது கூற்றினான் நிகழாமையின் கூறார் ஆயினார்.

மாதர் முகம்போ லொளிவிட
காதலை வாழி மதி.

வல்லையேல்

(கா - உ.) என்பது.—மற்று இவ்வனப்பு உடைய மடந்தை

தன்னொளி திகழ் முகம்போல நீயும்
சால அழகியை மதியே வாழ்வாயாக

ஒளிவிட வல்லை ஆயின், நீயும்
என்றவாறு.

(ப - உ) என்பது.—இம்மாதர் முகம்போல்
யாயின், நீயும் எம்மால் காதலிக்கப் படுவை மதியே

ஒளிவிட வல்லை
என்றவாறு.

இது மறுப் போயிற்றுயி னைக்குமென்று
கூறப்பட்டது. (1)

கா. 2.

ப. 1.

மதியு மடந்தை முகமு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! விசும்புள் வாழும் மதியும் நிலத்து வாழும் மடந்தை முகமும் தெரியமட்டா: ஆதலால் விசும் பாகிய பதியுள் நின்றும் இந்நிலத்துறத் தாழ்ந்து பார்த்தும் விசும்புற உயர்ந்து பார்த்தும் இங்ஙனம் தடுமாறித் திரிகின்ற மீன்களானவை (அம்மதியைப்போல மதியில) என்று இங்ஙனம் புனைந்துரைத்தான் தலைமகன் என்றவாறு.

இவள் முகம் நலம்

(ப - உ.) என்பது.—மதியினையும் மடந்தை முகத்தினையும் கண்டு
இவ்விரண்டினையும் யாது மதியென்று அறியாது தம் நிலையினின்றும்
கலங்கித் திரியா நின்ற மீன்கள் என்றவாறு.

1. நலம்புனைந்துரைத்தல். 2.



மீன் இயக்கத்தைக் கலக்கமாகக் கூறினர். அன்றியும் பதியிற் கலங்கிய மீன் அறியா என்று பாடம் ஓதித் தம் நிலைமையினின்றும் கலங்கின மீன்கள் மதியினையும் மடந்தை முகத்தினையும் அறியாவா யின எனினும் அமையும். மீன்கள் கலங்கித் திரிதலானே இவள் முகம் மதியோடு ஒக்கும் என்று கூறியது. (2)

பரி. பா - ம். முகனும்.

கா. 3.
ப. 2.

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

(கா - உ.) என்பது.—நாடோறும் நாடோறும் கலைகலையாக அற்று அற்றுச் செல்கின்ற அறுவாய் மற்றொரு வழியால் நிறைவு பெற்ற மதியன்றே, ஒவ்வொரு நாளும் விரிகின்ற மதியமானது; மற்றது தானும் அற்று அங்ஙனம் நிறைந்த விடத்துப் பின்னும் யாவரும் அறிய முயற்கை என்பதோர் அடைக்கறை உடைத்து: மற்றும் மதிக்குப்போல ஒருமறு உளதோ நம்மாதாாள் திருமுகந் திங்கள் என்று இங்ஙனம் பின்னும் நுவன்றான் தலைமகன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—குறைவு இடம் நிறைந்த ஒளிர் மதிக்குப் போல இம்மாதர் முகத்து மறு உண்டோ என்றவாறு.

தில்

மேற் கலக்க முற்றுத் திரிகின்ற மீன் கலங்குதற்கு இவள் மறு இல்லையாகலான் மதி ஒவ்வாது என்று கூறியது.

முகத்

(3)

கா. 4.

ப. 4.

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

(கா - உ.) என்பது.—மதியே! நீ இக்குவளை மலரன்ன கண்ணினை உடையாளது முகத்தை ஒப்பதோர் ஒளிநலம் உடையை யாயின் இவள்போல் ஒரு வரம்பினை யுளவாய் ஓர் இடத்து உறைதல் அன்றி இங்ஙனம் யாவரும் காணத் தோன்றக் கடவை யல்லை என்று மற்று அவள் கேட்ப இங்ஙனம் கூறினான் தலைமகன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—மலர்போலுங் கண்ணினை யுடையாளது முகத்தை ஒப்பை யாயின் பலர் காணுமாறு தோன்றாது ஒழிக மதியே என்றவாறு.

இது மதி ஒளியும் வடிவும் ஒத்தகாயினும் குணத் திறல் ஒவ்வாதென்றது. ஒருவாற்றால்

(4)

4. நலம்புனைந்துரைத்தல்



கா. 5. —
ப. 5. மலர்காணின் மையாத்தி

நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! எம்மால் காதலிக்கப்பட்ட இவள் கண்மலா யாவரும் காணும பூமலா ஒககும எனறு கருதா ந மலர் கண்ட இடத்து மையலுறுதி; மதிப்பில்லை என்றவாறு.

(ப - உ.) என்பது.—இவள்கண் பலாானும் காணப்படும் பூவை ஒக்கும் என்று மலரைக் என்றவாறு.

கண்டபொழுதே மயங்காநின்றாய் நெஞ்சே!

இது கண் பூவினது நிறம் ஒக்கும் ஆயினும் குணம் ஒவ்வா தென்று கூறியது. இவை இரண்டினானும் தான் கிட்டுதற்கு அருமை கூறினான். (5)

கா. 6.
ப. 6.

காணிற் குவளை கவிழ்ந்து நிலநோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யான் அழகுடையே னென்று இங்ஙனம் தன்னை மதித்து வான்நோக்கிச் செவ்விதாய் நிற்கும் குவளை
வோம்

மற்றதுவும் அம்மாணிழையாள் கண்ணுக்கு உவமை ஒவ் என்று நாணிக் கவிழ்ந்து நிலநோக்கி நிற்கும் என்பது, இதற் குக் காரணம் என்றான் தலைமகன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—குவளை மலர் காண வற்றாயின் கவிழ்ந்து நிலத்தை நோக்கும் மாட்சிமைப் பட்ட இழையினை யுடையாளது கண்ணை ஒவ்வே மென்று நாணி என்றவாறு.

இது வடிவு தானும் ஒவ்வாது என்றது.

கா. 7.

(6) அனிச்சப்பூக்

ப. 8.

கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! தனது இடையின் மென்மை அறிந்தே பிறபூக்களின் நொய்தாகிய அனிச்சப்பூத் தன் கூந்தலுள் பெய்தாள்; ஆயினும் அதனைக் காம்பு கழற்றாதிட்டு முடித்தாள்; அஃது ஓர் அறியாமையுண்டு; அதனால் இனி இவள் நுசுப்பிற்குப் பறைஒலி நல்லவாக எழாபோலும் என்று இங்ஙனம் இறந்துபடுவாள் போலுமெனப் பெரிதும் ஆற்றான் தலைமகன் என்பது பொருள் என்றவாறு.



(ப - உ.) அனிச்சப் பூவைக் காம்பு கழற்றாது மயிரில் அணிந் தாள் ஆதலின் அவள் நுசுப்பிற்கு நல்லவாக ஒலிக்க மாட்டா பறை

என் றவா று.

எனவே இனி செய்தல் பறையே ஒலிப்பது என்றவாறு இஃது இடையினது நுண்மை கூறிற்று.

ஆயிற்று.

(7) கஅ. 8.

ப. 10.

அனிச்சமு மன்னத்தின் றூவிய மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

இன்

(கா - உ.) என்பது.—நெஞ்சே! அனிச்ச மலரும் அன்னத் தூவியும் இரண்டும் சால மென்மை உடைய வன்றே; மற்று

அவை தாமும் நம்மாதாாள்
முள்ளெனவே அவற்றினை
என் றவா று.
அடியினது மென்மைக்குச் சில நெருஞ்சி
அடியிடினும் ஆற்றாள் என்பது பொருள்

(ப - உ.) என்பது.—அனிச்சப் பூவும், அன்னத்தின் தூவியும் இம்மாத ரடிக்கு நெருஞ்சிப் பழத்தோடு ஒக்கும் என்றவாறு.

அவையிற்றினும் மெல்லியது அடியென்று கூறப்பட்டது.

இதனுள் இரவும் பகலும் காணப்பட்ட

பொருள்களை உவமமாகக் கூறிய அதனால் இயற்கைப் புணர்ச்சியும் நலம் பாராட்டுதலும் பகற் குறியினும் இரவுக் குறியினும் என்று கொள்ளப்படும். (8) கா.

9.

ப. 7,

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

(கா - உ.) என்பது.—கேளாய் அனிச்சமே! மென்மையை உடையை நீயும் சால அழகிய மென்மையை ; அது நன்று : ஆனாலும் நின்னினும் சால உடையவள் மற்று யாம் விரும்பப்பட்ட இவள் என்று இங்ஙனம் தானும் உற்று அறிபொருளாகலின் மகிழ்ந்து உரைத்தனன் தலைமகன் என்றவாறு.

உள்

(ப - உ.) என்பது —அனிச்சப்பூவே! நீ நல்ல நீர்மையாய் இருந்தாய் ; நின்னினும் மெல் நீர்மையுடையாள் பப் பட்டவ ளென்றவாறு.

காண் யாம் விரும்

இஃது உடம்பினது மென்மை கூறிற்று.

(9)

கா. 10. ப. 9.

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

## 5. காதற் சிறப்புரைத்தல்

23

(கா - உ.) என்பது.—நெஞ்சே! எம் காதலியாகிய வேய்போலும் தோளினுட்கு நிறமான து மாந்தளிர் ஒக்கும்: முறுவல் கோவை முத்து நிரை ஒக்கும்: நாற்ற மெல்லாம் பலநறு நாற்றம் ஒக்கும்: மை உண்டு அகன்ற கண்ணானது வடிவேலினை ஒக்கும்: இவ்வகையால் இவ்வுருவு நலனுடையாளை எங்ஙனம் பிரிந்தாற்றுமோ என்னும் குறிப்பினல் இனிது புணர்ந்து உரைத்தான் தலைமகன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—தளிர்போலும் மேனி: முத்தம் போலும் முறுவல்: நறுநாற்றம் போலும் நாற்றம்: வேல்போலும் உண்கண்: வேயை ஒத்த தோளினை உடையாட்கு என்றவாறு.

இது நிறமும் எயிறும் நாற்றமும் கண்ணின் வடிவும் தோளும் புகழ்ந்து கூறிற்று. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் நலம்புனைந்து உரைத்த தலைமகன் பிறர் ஆராயும் முன்னர்ப் பிரிந்து எய்துவதே கருமமென்று கருதி வற்புறுத்தலும், இடம் அணித்தென்றலும், பிறவும் எல்லாம் இவட்கு உரைத்துப் பிரிந்தபின் தலைமகன் பாங்கற்கு உரைத்தமை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 5. காதற் சிறப்புரைத்தல்.

(ப - உ.) காதற் சிறப்புரைத்தலாவது தலைமகன் காதல் மிகுதி கூறுதலும் தலைமகள் காதல் மிகுதி கூறுதலும். இது நலம்புனைந்துரைத்தலின் பின்னிகழ்வ தொன்றாதலின் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1. உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு.

(கா - உ.) என்பது.—வினவிய பாங்கற்குத் தலைமகன் கூறியது எங்ஙனம் எனில், உடம்பொடு உயிரிடை உள்ள நட்பு எத்தன்மையது மற்று அத்தன்மையது எம்மால் காணப்பட்ட மடவாளொடு எம் மிடை யுள்ள நட்பெனவே எவ்வாற்றானும் இன்றியமையாமை எடுத்துரைத்தான் பாங்கற்கு என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—உடம்பினோடு உயிரிடை யுள்ள நட்பு எத்தன்மைத்து: அத்தன்மைத்து மடப்பத்தை யுடையாளோடு எம் மிடையுள்ள நட்பு என்றவாறு.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன்

பிரியலுற்ற குறிப்புக் கண்டு வேறுபட்ட தலைமகளை நோக்கி நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேனென்று தலைமகன் தனது காதல் மிகுதி கூறியது. (1)



கா. 2.
ப. 5.

உள்ளுவென் மன்யான் மறப்பின் மறப்பறியே

ளொள்ளமர்க் கண்ணாள் குணம்.

(கா-உ.) என்பது.—இடைவிடாமல் நினைப்பேன் யான், மறக்கக்கூடுமாயின்; மறப்பு என்பதனை அறியேன்: ஒள்ளிய அமர்செய்யும் கண்ணினை உடையாள் குணத்தை என்றவாறு.

(ப - உ.) என்பது. —நினைப்பேன் யான் மறந்தேனாயின்: மறத் தல் அறியேன், ஒள்ளமர்க் கண்ணாள் குணத்தினை என்றவாறு.

தோழியிற் கூடி நீங்கும் தலைமகனை நோக்கி வீரோ என்ற தோழிக்குத் தலைமகன் கூறியது.

எங்களை நினைக்கு இது நோக்கிக்

நாணுத் துறவுரைத்தலிற் கூறற்பாலது. காதன் மிகுதி கூறுகின்றார் ஆதலின் ஈண்டுக்கூறப்பட்டது. இவை ஐந்

தும் தலைமகன் கூற்று; இனிக்கூறுகின்ற ஐந்தும் காதல் மிக்கார்க்குத் தான் காதலிக்கப்பட்டாரை

தலைமகள் கூற்று.
ஒழிவின்றி நினைத
லும் அவர் தம் மாட்டு இல்லாத காலத்திலும் கண் முன்னாய்க் கண்டலும் உண்ணாமையும் உறங்காமையும் கோலஞ் செய்யாமையும் உளவாம் அன்றே: அவை ஐந்தும் ஈண்டுக் கூறப்படுகின்றது. (2)

கா. 3.

ப. 8.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

(கா - உ.) என்பது.—கேளாய்! எங்கேளே! இவ்வாறு எப் பொழுதும் என் நெஞ்சத்தார் நம் காரிகையாராகவே வெய்து ஒன்று உண்டலும் அஞ்சுதும்; என்னை எனில் அதனாலே அவர்மேனி வெம்மை உறுவதோர் கூறுபாட்டினை அறிந்து என்றவாறு. இதனா லும் இன்றியமையாமை இவன் அறிவது பயன்.

(ப - உ.) என்பது.—என்னாற் காதலிக்கப்பட்டவர் என் நெஞ் சகத்தே யிருக்கலானே வெய்தாக வுண்டலை அஞ்சா நின்றேன். அவர்க்குச் சுடுமென்பதனை அறிந்து என்றவாறு.

இது நீ உண்ணாதது என்னை என்று வினவிய தோழிக்கு உண விற் காதல் இல்லை என்று கூறியது. [1]இது பசியடா நிற்றல் என்னும் மெய்ப்பாடு. (3)

கா. 4. ப. 7.

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற்
நுண்ணியரெங் காத லவர்.

பருவரார்

1. தொல். பொருள் மெய். 22. இ.

## 5. காதற் சிறப்புரைத்தல் 25

(கா - உ.) என்பது.—கேளாய்! இங்ஙனம் எம் கருத்துள் உறைதலே யன்றிக் கண்ணுள் நின்றும் போகின்றிலர்: மற்று இமைப் பின்கண் நெருக்குண்டு வருந்துவதோர் வருத்தமும் மிகார்: அதனால் ஆண்டு அங்குக்கண்ட உருவு நலனுடையரேனும் ஈண்டு இங்ஙனம் பெரிதும் நுண்ணியர் எம்மாற் காதலிக்கப்பட்டவரெனவே மற்று இவன் தான் காண்பதும் கருதுவதும் அவள் அல்லது பிறிது ஒன் றும் இல்லை யென்பது பெரும்பாலும் பாங்கன் உட்கொள்வான் ஆவது பயன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—எனது கண்ணுள் நின்று நீங்கார்: இமைப் பேனுயின், இவட்கு உறுத்தும் என்று பருவருத்து இருப்பதுஞ் செய் யார்: ஆதலான் நுண்ணிய அறிவையுடையர், எம்மாற் காதலிக்கப் பட்டவ ரென்றவாறு.

இஃது அறிவிலரென்று இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் கூறியது. *இஃது எதிர்பெய்து பரிதலென்னும் மெய்ப்பாடு. (4)

கா. 5.

ப. 6.

உவந்துறைவ ருள்ளத்து ளென்று
ரேதில ரென்னுமிவ் வூர்.

மிகந்துறைவ

(கா - உ.) என்பது.—இங்ஙனம் எப்பொழுதும் அவர் தாம் எம்
மினும் எம்முடன் உறைதலை மிகவும் விரும்பி எமது உள்ளத்துள்ளே
உறைவார் : அஃது யாம் அறிகுவம் : பின்னும் ஓரிடத்து அகன்று
உறைவர் : அவர் தாம் அயலார் என்று இங்ஙனம் பட்டாங்கு உண
ராது பழியுரைப்பார் இவ்வூரவர் என்றவாறு.

(ப - உ ) என்பது,—என்
பார் : அவரை ஏதிலராய் நீங்கி
இவ்வூர் என்றவாறு.

னெஞ்சத்தே மகிழ்ந்து உறையா நிற்
உறைவர் என்றே சொல்லா நின்றது

தலைமகள் வேறுபாடு
பழித்த தோழிக்கு எனது

கண்டு தலைமகனை அன்பிலன் என்று இயற்
நெஞ்சில் நின்றும் நீங்காரென்று ஊர்மேல்
வைத்துக் கூறியது.

வேறுபாடு கண்டு கூறுதல்
பின்வருவனவற்றிற்கும் ஒக்கும். (5)

பரி. பா - ம். "உகந்து".

கா. 6.

ப. 9.

இமைப்பிற் கரப்பாக் கறிவ
ஏதில ரென்னுமிவ் வூர்.

வினைத்தற்கே

(கா - உ.) என்பது.—யான் விழித்த கண்சிறிது இமைப்பின் அப்பொழுது காண்பரிதாகவே, காந்து உள்ளே நிற்கும் பண்பினை

*தொல். பொருள். மெய். 22. சூ.

4

அறிவேன் ; யான் அதனால் அறிந்து இமைத்தற்கு அஞ்சுவேன் : மற்று அத்தன்மைப்பட்டது ஒன்று............அயலார்.......... என்று கூறுவர் இவ்வூரவர் : என்ன பாவமோ ? என்றவாறு.

(ப - உ.) என்பது.—கண் இமைக்குமாயின் அவர் ஒளிக்குமது யான் அறிவேன் : அவ்வளவு ஒளித்தற்குமாக அவரை நமக்கு ஏதிலரென்று சொல்லுவர் ஊரார். அதற்காக இமைக்கின்றிலேன் என்றவாறு.

இஃது உறங்காய் ஆயினதென் னென்று வினவின தோழிக்குக் கூறியது.

*இது கண்டுயில் மறுத்த லென்னும் மெய்ப்பாடு.

(6)

பரி. பா - ம். "அனைத்திற்கே".

கா. 7. ப. 10.

கண் ணுள்ளார் காத லவராகக் கண் ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

(கா - உ.) என்பது.—இங்ஙனம் எங்கண்ணுள் உறைவர் எப்பொழுதும் எங்காதலடுத்தவராகக் கண்ணும் அஞ்சனம் இட்டோமாேனும் என்னெனின் அப்பொழுதத்து வரையும் கரந்துறைவார் என்னும் பாகுபாட்டைக் குறிக்கொண்டெனவே முன்னு மேதிலார் என்னும் இவ்வூர் என்று இவனைத் தான் கொடுமை கூறியதே பொருளான்றவாறு.

(ப - உ.) என்பது.—எம் காதலவர் கண்ணுள்ளார் : ஆதலானே கண்ணும் எழுதேன், அவர் ஒளிப்பதனை அறிந்து என்றவாறு.

உய்மை சிறப்புமை. கோலஞ் செய்யாதது என்னை என்ற தோழிக்கு அவர் ஒளிப்பதனை அறிந்து கண்ணும் எழுதேன்; என்னை உறுப்புக் கோலம் செய்யுமாறு என்னை என்று கூறியது; எப்பொழுதும் நோக்கி யிருத்தலாற் கோலஞ் செய்தற்கும் காலம் பெற்றிலே னென்றவாறு ஆயிற்று. *இஃது இன்பத்தை வெறுத்த லென்னு மெய்ப்பாடு. இவை ஐந்தும் காதல் மிகுதியாற் கூறியவாறு கண்டுகொள்க. (7)

கா. 8. ப. 4.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! பாலொடு தேனும் கூடக் கலந்த அத்தன்மைத்தே தான் இப்பணி மொழியினுளது வெளிய நகையி னூறிய நீரெனவே காமுயற்சி செய்துகொண்டன வேற்றுமை

*தொல். பொருள். மெய். 22. சூ.

5. காதற் சிறப்புரைத்தல்.

யுடைய இரண்டிற்குஞ் சுவையும் இருவகைய அன்றே: மற்று அங்ஙனம் வேறுபட்டவற்றை ஒன்றோடு ஒன்று கலந்து சுவைபெறும் தன்மைத்து அன்று: இவையாவும் இன்று இயல்பாக இவள்வாய் இன்னகையினின்று இனிது ஊறிய நீர் நலம் யாம் அறிந்தனம் ஆதலான் என்று இங்ஙனம் இன்றியமையாமை தன்னெஞ்சிற் குச் சொல்லுவான் போல அவள் கேட்பச் சொல்லினு னென்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—பாலொடு கூடத் தேனைக் கலந்தாற் போல மிகவும் இனிமை தரும் தாழ்ந்த மொழியினை யுடையாளது வெள்ளிய எயிற்றினின்றும் ஊறிய நீர் என்றவாறு.

இஃது இரந்து பின்னின்ற தலைமகனை நோக்கி நீர் பெரியிராத லானே எமது புணர்ச்சி நுமக்கு இன்பம் தரவற்றோ என்ற தோழிக் குத் தனது புணர்ச்சி யுண்மையும் காதல் மிகுதியும் தோற்றத் தலை மகன் கூறியது. (8)

கா. 9. ப. 2.

கருமணியிற் பாவாய்நீ போதாயாம்
திருநுதற் கில்லை யிடம்.

வீழுந்

(கா - உ.) என்பது.—கண்மணி யுள்புக்கு உறையும் பாவாய்! நீ அங்குநின்று என்மாட்டுப் போதுவாயாக: என்னை காரணம் எனில் யாம் விரும்பும் திருநுதலாட்கு இவ்வுருவுகொண்டு நிற்றற்கிடமில்லை: இவள் கண்மணி என்றவாறு.

(ப - உ.) என்பது.—என் கண்ணுள் கருமணியகத்து நிற்கும் பாவாய்! நீ இங்கு நின்றும் போதுவாயாக: எம்மால் விரும்பப்பட்ட அழகிய நுதலினை யுடையாட்கு இருத்தற்கு இடம் போதாது என்ற

வாறு.

இஃது இரண்டாம் கூட்டத் தெதிர்ப்பட்ட தலைமகன் தலைமக ளது நாணம் நீங்குதற் பொருட்டு அவளது கவின் தனது கண் ணிறைந்த தென்று தலைமகள் கேட்பச் சொல்லியது. (9)

கா. 10.

ப. 3.

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நாம் இவளின் நீங்காது உடன் வாழ்காலத்து அவ்வுடன் வாழ்தல், இவ்வுடலோடுயிர் வாழ்

காலத்தில் வாழ்தல் உயிர்க்கு என்னது: மற்று அன்னள் நமக்கு இவ் வாயிழையாள்: இனி உடல் சாதல் இன்னுயிர்க்கென்னது: மற்று



அன்னள் இவள் யாம் ஒருபொழுது இவண் நீங்குமிடத்து என்ற வாறு.

பன்

(ப - உ.) என்பது.—இவ்வாயிழை உயிர்க்கு வாழ்தலோடு ஒப் கூடுமிடத்து; சாதலோடு ஒப்பள் நீங்கும் இடத் தென்றவாறு.

இஃது இரண்டாம்
மகன் தலைமகள் கேட்பத்

கூட்டத்துப் புணர்ந்து நீங்காநின்ற தலை
தன் னெஞ்சிற்குச் சொல்லியது (10)

(கா - உ.) இனி மற்று இவளை மனமகிழ வருடி வற்புறீஇய பின்னர் இவளொடு கூறுவனவும் பாங்கிக்கு உரைப்பனவும் அவளை இரந்துபின் நிற்பனவும் அவள் எதிர்மறுத்து உரைப்பனவும் எல்லாம் வந்து முடிவது பாங்கி மனித்தழையேற்பக் கொடுத்தபின் அங்ஙனம் வந்து எய்துதல் : மற்று இவ்வாறன்றி மடல் ஊர்ந்தானும் கொள்வல் என்று எய்துதற் கண்ணேயும் வந்து இறும் ; ஆதலால் மற்று இதன் பின்னரே மடலேற்று உணர்த்துகின்றது மேலை அதிகாரம்.

## 6. நாணுத்துறவுரைத்தல்.

(ப
கினமை

- உ.) நாணுத்துறவு உரைத்தலாவது தலைமகனது நாண நீங் தோழிக்குக் கூறுதலும் தலைமகளது நாண நீங்கினமை தோழி தலைமகற்குக் கூறுதலும் ஆம். காதல் மிக்கார்க்கு நாண மில்லையாம் என்பதனுன் பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

காம முழந்து வருந்துவார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

(கா - உ.) என்பது.—தாம் கருதிய இன்பம் கையுறுமையாற் காமநோய் உழந்து மற்று அதனாலே தமது பெருநாணினைக்கை விட்டுப் பெரிதும் வருந்துவார் யாவர்: மற்று அவர்க்கு இனி மேவுறுதி யாதோ எனின் மன்றுத்துப்போந்து மடல் ஊர்தலே யல்லது பிறிது இல்லை என்று தன் கையுறை வாங்காத தோழிக்குத் தலைமகன் மடல் ஏற்று உலகின் மேல் வைத்து உணர்த்தினான் என்பது பொருளென்றவாறு.

(ப - உ.) என்பது.—காமம் காரணமாக முயன்று வருந்தினார்க்கு ஏமமாவது மடலெடுக்குமது வல்லது மற்ற வலியில்லை என்றவாறு.

இஃது இரந்து பின்னின்ற தலைமகனைத் தோழி சேட்படுத்த விடத்து மடலேறுவே னென்று தலைமகன் கூறியது. (1)

பரி. பா - ம். "வருந்தினர்".

6. நாணுத்துறவுரைத்தல் 29

கா. 2.
ப. 10.

நிறையரிது மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

(கா - உ.) என்பது.—அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் நாற்பெருங் குணத்துள்ளும் நிறை என்கின்றது ஒருவன் தான் தன்னைச் சமைத்துக் கொள்ளும் வன்மையுடைமை யாதலால் மற்று அதன் இறப்பானது சாலப்பெறுதற்கு அரிதாயுள்ள தொன்று: மிகவும் அதனால் அளிக்கத் தக்கார் இவரை நாம் எளிமைப் படுத்தலாகாது என்னாது என்வயிற் காமமானது என்னையும் கொண்டு அங்குட்பட்ட களவியலைக் கடந்து சென்று யாவரும் அறிய மன்றத்து வெளிப்படும் ஆயின் யான் செயற்பாலது என்னை? எனத் தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(ப - உ.) என்பது.—நிறையிலர்: நனியளிக்கத் தக்கார் என்னாது காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கட் படாநின்றது என்ற
வாறு.

அம்பலும் அலரும் ஆகாநின்றது என்று
மறுத்தது.

தோழி பகற்குறி
(2)

பரி. பா - ம். 'நிறையரியர்'.

கா. 3.

ப. 5.

அறிவில்லா ரெல்லாரு மென்

றேயென் காம

மறுகின் மறுகு மருண்டு.

(கா - உ.) என்பது.—இங்கு யான்

உறுதுயரினைக் கண்டும்
உணர்ந்தும் இனி மற்று இது தீர்ப்போம் யாம்
என்னும் அறிவில்லா
தாராய் இருந்தார் இத்தலைக்கண் எல்லாரும் என்று கொண்டே இங்கு
யானுற்ற காம நோயானது ஒரு மன்றத்து உரைத்தலுமன்றிப் பின்
னும் மறுகுதொறும் தடுமாறும் போலும் மாலுற்று என்றவாறு.

(ப - உ.) என்பது,—என்னை
என்றே சொல்லி என் காமமானது

ஒழிந்த எல்லாரும் அறிவிலர்
தலைமயங்கி மறுகின் கண்ணே
வெளிப்பட்டுச் சுழலா நின்றது என்றவாறு.

சுழலுதல் — இவ்வாறு சொல்லிச் சாற்றித்
திரிதல். நீர் அறி
வுடையீர் ஆகலான் மடலேறுதல் கூடாது; இஃது அறிவுடையார்
செயலின்மையான் என்ற தோழிக்கு என்னைப்போல மடலேறக்
கருதாதாரே அறிவிலாதார்: யான் அறிவுடையேனென்று தலைமகன்
கூறியது.

(3)

பரி. பா - ம். "அறிவிலார்".



கா. 4.
ப. 2.

நோனு வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

(கா
உடம்பும்

- உ.) என்பது.—யான் உற்ற காமநோய்
உயிரும் முன்னின்ற நாணினையும் எடுத்து

பொறுக்கலா
எறிந்து இங்ங
னம் மடலேறுமாயிருந்தது: இனி என்னை செயற்பாலது என்று பின்
னும் இதனையே வலிபெறுத்து உரைத்தான் தலைமகன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—பொறுத்தல் இல்லாத
மடலேறும்: நாணினை நீக்கி நிறுத்தி என்றவாறு.

உடம்பும் உயிரும்

நீர் கூறிய மடலேறு நாணமுடையார்க்குக் கூடுமோ என்ற
தோழிக்கு நாணினை நீக்கி உடம்பும் உயிரும் மடலேறு மென்று தலை
மகன் கூறியது. (4)

கா. 5 .

ப். 6.

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன்

மனாற

படலொல்லா பேதைக்கென் கண்.

(கா - உ.) என்பது.—இன்று யான் மடலூர்தலைச் சென்ற நள்ளிருள் யாமத்தும் கூடக்கருதுவேன் : மற்று என்னை காரணம் எனின் என்னுயிராகிய அப்பேதை பொருட்டுக் கழிந்த யாமம் எல்லாம் என் கண் படல் ஒல்லா ஆகலான் என்றவாறு.

(ப - உ.) என்பது.—பேதைபொருட்டு தலை இசையா : ஆதலானே மடலூர்தலை ஒரு நினைப்பேன் என்றவாறு.

என் கண்கள் உறங்கு தலையாக யாமத்தினும்

மடலேறுவது நாளையன்றே :

இராவுறக்கத்திலே மறந்து விடு கின்றீர் என்ற தோழிக்கு என் கண் உறங்கா வாதலான் மறவே னென்று தலைமகன் கூறியது.

(5)

கா. 6

ப. 3.

நாணொடு நல்லாண்மை
பண்டுடையே னின்றுடை
காமுற்று ரேறு மடல்.

[யேன்

(கா - உ.) என்பது.—நாணொடு நல்லாண்மைப் பாடு என்னும் இவை இரண்டுமாய் யான் பண்டு உடையேன் : அதனால் என்னை பயன்? அவை விடுத்து இன்று உடையேனாவேன் : யாதினை யெனில்

இவ்வுலகத்துக் காமுற்றார் ஏறு மடலினை

என்றவாறு.

(ப - உ.) என்பது.—நாண மிக்க நிலைமையும் சிறந்த ஆண்மையும் யான் பண்டுடையேன் இன்று உடையே னாயினேன் காமம் மிக்கார் ஏறு மடலினை என்றவாறு.

## 6. நாணுத்துறவுரைத்தல்

31

மேற்கூறிய சொற்கேட்டு நீர் உலகத்துப் பன்மக்களோடு ஒப்பார் ஒருவரன்றே : நாணமும் ஆண்மையும் இயல்பாக உடையீர் ஆதலான் நுமக்கு இது கூடாதென்ற தோழிக்கு இவை யிரண்டும் இப்பொழுது இல்லையென்று தலைமகன் கூறியது. (6)

கா. 7. ப. 7.

யாங்கண்ணிற் காண நகுவ

ரறிவில்லார்

யாம்பட்ட தாம்படா வாறு.

(கா - உ.) என்பது.—இவ்விடர் உற்றேம் நாமாகவே இகழ்ச்சி எம் கருத்துள் அறிதலே அன்றிக் கண்ணினுலும் காணுமாறு நகுவர் இவ்வறிவில்லாதார் இதற்குக் காரணமாய் யான் அறிந்தேன். ஈங்கு யாம் பட்ட இடர் அனைத்தும் தாம் படாமையால் தமக்குத் தெரியாது அன்றே ஆதலா லென்றவாறு;

(ப - உ.) என்பது.—யாம் கண்ணுற் காணும் வகை எதிரே நின்று அறிவில்லாதார் நகாநின்றுர்: யான் பட்ட துன்பம் தாம் படாமையா னென்றவாறு.

யாமத்து மறவேன் என்ற தலைமகனை நோக்கி நகை செய்த தோழிக்கு எமக்கு உண்டாகிய நோய் தமக்கும் உண்டாயினு ரல்லரோ என்று தலைமகன் வெகுண்டு சொல்லியது. (7)

கா. 8. ப. 4.

## காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
## நல்லாண்மை யென்னும் புணை.

(கா - உ.) என்பது.—நாணும் ஆண்மைப்பாடு என்னும் பெருமிதமும் இவை இரண்டும் கொண்டு இக்காமம் என்னும் கடுவரத்துப் பெருவெள்ளத்தை நீந்த முயன்றேனுக்கு அதனையும் தள்ளித் தான் மேற்பட்டுச் செல்லு மாயிருந்தது: இனி என்னை மற்று ஆவது என்று இங்ஙனம் தோழி கேட்பத் தலைமகன் சொல்லினு னென்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நாணமும் ஆண்மையும் ஆகிய புணைதனைக் காமம் ஆகிய பெரும்புனல் ஈர்த்தது என்றவாறு.

நினக்கு ஆண்மையும் நாணமும் இப்பொழுது என்ற தோழிக்குத் தலைமகன் கூறியது.

யாண்டுப் போயினை

(8)

கா. 9.

ப. 8. தொடலைக் குறுந்தொடி
தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.



(கா - உ.) என்பது.—மாலையும் சிறுதொடியும் உடைய இம்மாத ராள் எமக்குத் தந்தாளே: இனி அஃது யாதோ எனின் மடலோடு கூட இற்றை மாலைப் பொழுதின்கண் யாம் உழப்பதோர் துயரினை என்றவாறு.

(ப - உ.) என்பது.—மாலைபோலச் செய்யப்பட்ட சிறு வளையினை யுடையாள் தான் காண மடலோடே கூட மாலைக் காலத்து வருந்தும் துயரினை(த்தந்தாள்) என்றவாறு.

தொடலை என்பதனைச் சேர்ந்த வளை யெனினும் அமையும், குறுந்தொடி பிள்ளைப்பணி; அதனானே இளையளென்பது சொன்னானும். தலைமகன் ஆற்றாமை கண்டு நின்றாற் காதலிக்கப் பட்டாள் இவ்வாயத்துள் யாவளென்ற தோழிக்கு இத்தன்மையாள் என்று தலைமகன் கூறியது. வளையுடையார் பலருங் கூட நிற்றலின் மாலை போலச் செய்த வளையினை யுடையாள் என்று விசேடித்துக் கூறப் பட்டது. இவை எட்டும் தலைமகன் கூற்று. (9)

கா. 10.

ப. 9.

கடலன்ன காம முழந் து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

(கா - உ.) என்பது.—கடல் போலும் காமத்தை உழந்தேயும் பின்னும் பெண்டிர் மடலேறல் பெரிதும் இன்றே: அதனால் அங்ஙனம் இம்மடல் ஏற்றந்தாப் பெண்மை பெருந்தகுதி யுடையது பிறிது ஒன்றும் இல்லை என்றவாறு. எனவே இனி யான் மடல் ஏறல் இன்னிது என்றான், இவள் விலக்குதல் காரணமாக என்றவாறு.

(ப - உ.) என்பது.—கடலை ஒத்த காம நோயாலே வருந்தியும் மடலேற நினையாத பெண் பிறப்புப் போல மேம்பட்டதில்லை என்றவாறு.

நும்மால் காதலிக்கப்பட்டாள் தனக்கும் இவ்வருத்தம் ஒக்கும்; பெண்டிர்க்கு இயல்பு இன்மையான் மடலேறுதகே குறையென்று தலைமகன் ஆற்றாமை நீங்குதற் பொருட்டுத் தோழி கூறியது. (10)

(கா - உ.) இனித் தலைமகன் இங்ஙனம் மடலேற்று உணர்த்திய பின்னரோ தலைமகளை நீ புறத்துப் போய் விளையாடுதல் பொருள் அன்று: இனிப் பிறர் மகட்பேசற் பருவம் வந்தது போலும் என்று

யாய் இற்செறிக்கவும் கூடும் என்று இவ்வலரினைத் தோழிக்கு எடுத் துரைத்தான் இவளிற் றீரும் இதுவெனக் கருதி என்பதனால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

---

இக்குறள் உரையின் இறுதியில் [காந்திமதி பாதாரவிந்தமே கதி, வேணுவனேசன் பாதமே துணை, சுப்பிரமணியன் பாதமே துணை.]— என்று காலிங்கர் உரை ஏட்டுப்பிரதியில் உள்ளது.

## 7. அலரறிவுறுத்தல்.

(ப - உ.) அலர் அறிவுறுத்தலாவது இவ்வாறு ஒழுகும் ஒழுக் கத்தினான் வந்த அலரைத் தலைமகள் தோழிக்கு அறிவித்தலும் தோழி தலைமகட்கும் தலைமகற்கும் அறிவித்தலும் ஆம். நாணுத் துறவுரைத்து இரவுக்குறி ஒழுகாநின்ற தலைமகனுக்கு அம்பலும் அல ரும் ஆகாநின்றதென்று அறிவித்தலான் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 3.

அலர்நாண வொல்வதோ
வலர்நாண நீத்தக் கடை.

அஞ்சலோம் பென்றார்

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இனிப் பிறர்கூறும் அலர் உரைக்கு நாணத்தகுவது ஒன்றோ? யாம் தம்மொடு கலந்த ஞான்று இனி அஞ்சவேண்டா ; யாம் கடிது
லக் கேட்டவர் தாமே அத்துணையும்

ஆக வரைவோம் என்று சொல்
உடம்பட்டொழுகப் பெருராய்ப்
பலரும் நாணும்படி நம்மைக் கைவிட்ட விடத்து
என்றவாறு.

(ப - உ.) என்பது.—அலர் ஆகும் என்று நாணுதல் இயல்வதோ அஞ்சுதலைத் தவிர் என்று சொன்னவர் பலரும் நாணுமாறு நம்மை நீக்கின இடத்து என்றவாறு.

பலர் என்றது தோழியும் செவிலியும் முதலாயினரை. தலைமகனைக் காணும் பொழுதிற் காணப் பொழுது பெரிது ஆதலால் தான் ஆற்ருளாகிய தலைமகளை நோக்கி நினது ஆற்ருமை அலராகின்றது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (1)

கா. 2.

ப. 9.

நெய்யா லெரிநுதுப்போ மென்றற்ருற்
கவ்வையாற்
காம நுதுப்பே மெனல்.

(கா - உ.) என்பது.—பற்றி எரிகின்ற எரியினை நெய்யினைச் சொரிந்து மற்று இதனல் தணிக்கக் கடவே மென்று கருதிய அத் தன்மைத்து: யாதெனில், யாம் உற்ற காம எரியினைச் சிலர் தமது அலர் உரையால் தணிப்பேம் என நினைக்கின்றது என்றவாறு. இதில் நுதுத்தல் என்பது அமுக்குதல்; தணித்தல் என்றும் ஆம்.

(ப - உ.) என்பது.—எரிகின்ற நெருப்பை நெய்யினுனே அவிக்க நினைத்தாற் போலும்: அலரினுனே காமத்தை அவிப்பேம் என்று நினைத்தல் என்றவாறு.

தலைமகன் பின்னும் களவு ஒழுக்கம்
தோழி கூறியது.
வேண்டினமை கண்டு
(2)
5



கா. 3.
ப. 8.

*கவ்வையாற் கவ்வித்து காம மதுவின்றேற்*
*றவ்வென்னுந் தன்மை யிழந்து.*

(கா - உ.) என்பது.—நெஞ்சே! பிறர்கூறும் கவ்வையாற் கவ்வுண்டது யாம் வேண்டும் காமம். அதனால் கவ்வை இன்றாயின் சாலத் தவறுபடும் தன் தன்மை இழந்து என்றவாறு. இதிற் கவ்வித்து என்பது கவ்விய தென்றது. தவ்வென்னு மென்பது தவறுபடும் என்றது.

(ப -
அவ்வலர்

உ.) என்பது.—அலரினனே அலர்தலையுடைத்துக்
இல்லையாயின் தனது தன்மை இழந்து பொலிவு

காமம்:
அழியும்

என றவா று.

செவ்வை யுடையதனைச் செவ்விது என்றாற்போலக் கவ்வை யுடையதனைக் கவ்விது என்றார். அலர் அறிவுறுத்த தோழிக்கு இவன் கூறுகின்றது புனைந்துரையாகும் என்று நினைத்துப் பின்னும் களவு ஒழுக்கம் வேண்டித் தலைமகன் கூறியது.

இதுவும் ஒருகூற்று: மேலதனோடு இயைபு இன்று. (3)

பரி. பா - ம். கவ்விது.

கா. 4.
ப. 4.

தாம்வேண்டி னல்குவர் காதலர்
யாம்வேண்டுங்
கவ்வை யெடுக்குமிவ் வூர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நம்மாற் காதலிக்கப்பட்ட காரிகையார், இன்னும் தாமே நல்க வேண்டின் நம்மை நல்குவர்: ஆதலால் இவர்பெயர் நினைந்து இறந்துபடுதற்கு இயையும் இடத்து அவர் பெயர்கொண்டு யாம்கேட்க விரும்பும் கவ்வை எடுத்து உரையா நின்றது இவ்வூர் எனவே தோழியைப் பிறர்போலக் கொண்டு கூறியது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—யாம் விரும்பும் அலரை இவ்வூரார் எடுத்தார்: ஆதலான் இனித் தாங்களே விரும்பிக் கொடுப்பர் நம்முடைய காதலார்க்கு என்றவாறு.

வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்துழி ஆற்றுளாகிய தலைமகட்கு இப்புணர்ச்சியை அயலார் தூற்றா நின்றார் : ஆதலால் தமர் தாமே விரும்பிக் கொடுப்பர் என்று தோழி தலைமகனை யாற்றுவித்தது. யாம் வேண்டும் கவ்வை இவனுக்கு நாம் பெண்டிர் ஆனது புறத்தார் அறியவேணும் என்று நினைத்திருந்தவாறும். (4)

பரி. பா - ம். வேண்டி.

## 7. அலரறிவுறுத்தல்

35

கா. 5. ப. 7.

உறாஅதோ வூரறிந்த கவ்வை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சே ! நமக்குச் சால உறுவது ஒன்று அன்றோ ஊர் அறிந்து உரைத்த கவ்வையானது ; அதனை அவர் அறியாது நம்மை நிறையழித்தற்கு முன்னம் பெறுதற்கு ஓர் உபாயம் பெற்று ஒத்த நீர்மையை உடைத்து இவ்வூர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஊர் அறிந்த அலர் உறுவது ஒன்றே : அலரைத் தீதாகக் கொள்ளாது பெறுதது ஒன்றைப் பெற்றால் ஒத்த நீர்மைத்தாகக் கொள்ளப்படும் என்றவாறு.

அலர் அறிவுறுத்த தோழிக்கு அவ்வலரினன் என்றும் தமர் வரைவு உடன்படுவர் என்று தலைமகன் கூறியது இதுவு மொருகூற்று : மேலதனோடு இயைபு இன்று. (5)

கா. 6. ப. 1.

கண்டது மன்னு மொருநா
ளலர்மன்னுந்

## திங்களைப் பாம்புகொண் டற்று.

(கா - உ.) என்பது.—யாம் எங்காதலியைக் கண்டு இன்புற்றதும் ஒரு நாளே: அதுகொண்டு மற்று எம்மைப் பிறர் உரைக்கின்ற அலரின் மிகுதியுது எங்ஙனம் எனின் திங்களைப் பாம்பு கொண்டாற் போலப் பலரும் எடுத்துரைக்கின்ற அத்தன்மைத் தென்றவாறு.

(ப - உ.) என்பது.—யான் கண்ணுற்றது ஒருஞான்று: அக் காட்சி திங்களைப் பாம்பு கொண்டாற் போல எல்லாராலும் அறியப் பட்டு அலர் ஆகாநின்றது என்றவாறு.

காப்புக் கைம்மிகப்பட்ட தலைமகள் வேறுபாடு கண்டு செவிலி முதலாயினர் உற்று நோக்கிய குறிப்பைத் தலைமகள் கொண்டு ஒரு நாளைக்காட்சியே அலர் ஆகாநின்றதென்று தோழிக்குக் கூறியது. (6)

கா. 7.
ப. 6.

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற்
வெளிப்படுந் தோறு மினிது.

காமம் (கா
பின்னும்

- உ.) என்பது.—உலகத்துக் கள்ளுண்பார்க்குப் அதனை உண்டு மகிழ்தலே வேண்டியிருக்கின்ற

பின்னும்
அத்தன்
மைத்தாக யாம் உற்ற காமமும் நெஞ்சே! பிறர் மாட்டு வெளிப்படும் தோறும் மிக இனிது எனக்கு என்ன வியப்போ என்றவாறு.



(ப - உ.) என்பது.—மயங்குந்தோறும் ஞற்போலக் காமமும் அலர் ஆகுந்தோறும்

கள்ளுண்டலை விரும்பி
இனிது ஆகும் என்ற
வாறு.

அலர் அறிவுறுத்த தோழியை நோக்கி நமக்குத் துன்பம் ஆயிற்றே இவ்வலர் என்று வினவிய தலைமகற்குத் தோழி கூறியது. வெளிப்படுந்தோறும் இனிது என்றது விரைந்து வெளிப்படுதல் குறிப்பு.

(7) கா. 8.
ப. 5.

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீத்ததிவ் வூர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! மலரை ஒத்த கண்ணை உடையாளாகிய நங்காதலியது அருமை சிறிதும் அறியாதே அலருரையை மிகச்சொல்லித் திருகின்றது இவ்வூர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—பூ ஒத்த கண்ணுளது அருமை அறியாதே இவ்வூரவர் எங்கட்கு அலரைத்

இற்பிறப்பின்
தந்தார் என்ற
வாறு.

எளியாரைச் சொல்லுமாறு போலச் சொல்லநின்றார் என்றவாறு ஆயிற்று. தமது புணர்ச்சி அலராயிற்றென்று தோழி கூறியது. (8) கா. 9. ப. 2.

ஊரவர் கவ்வை யெருவாக
வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நம்மைத் தான் எய்தப் பெருமையா லுள்ளவாறு அருமை அவள் தனக்கும் ஒக்கும் அன்றே. அதனால் ஊரவர் உரைக்கும் கவ்வை தானே எருவாகத் தாய் சொல்லும் செறுத்துரையே நீராகக் கொண்டு நெடிது வளரும்போலும் இந் நோயானது இவள் இறத்தும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஊரார் எடுத்த அலர் எருவாக அன்னை சொல்லும் சொல் தண்ணீராக இந்நோய் வளரா நின்றது என்றவாறு.

அலரினன் ஆற்ருள் ஆய தலைமகள் தோழிக்குச் இவ்விரண்டுக்கும் வரைவு கடாவுதல் பயன்.

சொல்லியது.
(9) கா. 10.

ப. 10.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.



(கா - உ.) என்பது.—இவ்வகை அலர் தோன்றவே என் ஆருயிர் நிற்கும்; அங்ஙனம் ஆதலைப் பலரும் அறியாதே அலரினைக் கூறுகின்ருர் என் பாக்கியத்தால் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நமது புணர்ச்சியான் வந்து அலர் எழுதலி ஞனே அவளது ஆருயிர் நிற்கும்: அவ்வாறு உயிர் நிற்றலை எங்கள் புண்ணியத்திஞனே பலர் அறியாராயினர்; அறிவாராயின் எனக்கு ஏதிலாய் அலர் தூற்றுவார் இவள் இறந்துபட வேண்டுமென்று தூற் ருர் என்றவாறு.

நொதுமலர் வரைய வந்துழி இறந்துபடுவாளாயினள்: ஆயிடை இவ்வலர் எழுதலினுனே இனிப்பிறர்க்குக் கொடார் என்று அவள் உயிர் நீங்காதாயிற்றெனை நொதுமலர் வரைய வந்தமை தோழி தலை மகற்குக் கூறியது. (10)

இத்துணையும் களவு.



## கற்பியல்.

(கா - உ.) தலைமகன் கூற்று முடிந்தது. இனித்தலைமகள் கூற்றுக் கிளவி வருமாறு. இங்ஙனம் இவன் நீங்கிய ஆற்றாமை அவட்கும் ஒக்கும் ஆகலான் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை யதிகாரம்.

### 8. பிரிவாற்றாமை.

(ப - உ.) பிரிவாற்றாமையாவது அலர் அறிவுறுத்தப்பட்ட தலைமகன் தலைமகளை வரைந்து கொண்டதன் பின்பு ஆயினும் வரைவதன் முன்பு ஆயினும் பிரியும் காலத்து ஆற்றாமை. மேலதனோடு இயைபும் இது. இஃது ஈண்டு விசேடித்துக் கூறியது என்னை? காதற் சிறப்பு உரைத்தலின் தலைமகள் கூறினவும் நாணுத்துறவு உரைத்தலின் தலைமகன் கூறினவும் பிரிவு ஆற்றாமையன்றே எனின், இவை எல்லாம் களவு காலத்து ஓரிடத்து உறைவதோர் புணர்ச்சியிற் பிரிவால் வருந் தும் கூற்றெனின் அஃது அற்று அன்று. *ஓதல், காவல், பகை தணிவினை, வேந்தற் குற்றுழி, பொருட்பிணி என்னும் ஐந்தினும் ஒன்று காரணமாக நாடிடை விட்டும் காடிடை விட்டும் தலைமகன் பிரியும் காலத்து ஆற்றாமையென்று கொள்க. இது முதலாகக் கற்பு என்று கொள்ளப்படும்.

---

*" ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
றாங்க வாறே அவ்வயின் பிரிவே."

—இறையனார் களவியல். சூத். 35.

ப. 1.

இன்கண் ணுடைத்தவர் பார்வல்
பிரிவென்னும்
புன்கண் ணுடைத்தாற் புணர்வு.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! வன்கண்மை சிறிதும் இன்றிப் பெரிதும் இன்கண்மை யுடைத்தாய் இருந்தது அவர் வந்து நோக்கிய நோக்கமானது: இனிமற்று இவ்வாறு அன்றி நமக்குப் பெரிதும் மாற்றலாகப் (பிரிவென்னும்) புன்கண்மை உடைத்தாயிற்று அவர் நம்மோடு கூடிய கூட்டமெனவே அவர் நோக்கம் பயந்தது இனிய புணர்ச்சியை: புணர்ச்சி பயந்தது பெரியதோர் புன்கண்மை; இனி
யாம் உய்யுமாறு எங்ஙனம் என்று தலைமகள்
சொல்லியது பொருள் என்றவாறு.

தன்னெஞ்சிற்குச்

(ப - உ.) என்பது.—நாம் காதலரை வாவு பார்த்திருக்கும் இன்பத்தை உடைத்து: அவரைப் புணர்ந்திருக்கும் இருப்புப் பாலோ என்று அஞ்சப்படும் துன்பத்தை யுடைத்தென்றவாறு.
அது
பிரிவ

வாவு பார்த்தல் களவு காலத்து வாவு பார்த்தல்.

தலைமகன் பிரிய லுற்ற குறிப்புக் கண்டு வேறுபட்ட தலைமகளை இவ்வேறுபாடு எற்றி னான் ஆயிற்றென்று வினவிய தோழிக்குத் தலைமகள் கூறியது. (1)

பரி. பா - ம். 'பிரிவஞ்சும்'.

கா. 2.

ப. 3.

இன்னா தினனில்லூர் வாழ்த
லின்னா தினியார்ப் பிரிவு.

ல்தனினு

(கா - உ.) என்பது.—உலகத்து ஒருவர்க்கு மிகவும் இன்னாதது யாதோ வெனின், தமது இன்பத் துன்பங்கட்கு உடனுற வொத்த இனம் ஏதும் இல்லாத ஊரின்கண் தனித்து இருந்து வாழ்தலாகின்ற

இது பெரிதும் இன்னாது; இனி மற்று இதனினும் சால இன்னாது நெஞ்சே! யாதெனின்? கற்புடை மகளிர் தம் காதற் கொழுநரைப் பிரிந்திருக்கும் பிரிவானது எனவே இவர்க்கு உயிரன்ன கேளிர் இவ ரல்லது இல்லை என்று தனது ஆற்றாமை கூறினளாயிற்று என்றவாறு.

(ப - உ.) என்பது.— தமக்கு இனம்இல்லாத ஊரின்கண் இருந்து வாழ்தல் இன்னாது; அதனினும் இன்னாது இனியாரைப் பிரிதல் என்றவாறு.

பிரிவுணர்த்திய தலைமகற்கு இவ்விரண்டு துன்பமும் உளவாம் என்று பிரிவு உடன்படாது தோழி கூறியது.

எங்கட்டு
(2) கா. 3.

ப. 4.
அளித்தஞ்ச லென்ற் றுரைநீப்பிற்
றேறியார்க் குண்டோ தவறு.

றெளித்தசொற்

8. பிரிவாற்றுமை

39

(கா - உ.) என்பது.—முன்னம் தாமே வந்து தலையளித்து இனி நீ யாதும் அஞ்சேல் ஒருகாலும்: நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன்: என்று ஒரு சூளுறவு போலத் தம் உரையால் தெளிவிக்கப் பட்டாரைத் தாமே விட்டு நீங்கின் தாம் அங்ஙனம் தெளிவித்த சொல்லினை இது நமக்கு ஒரு தீர்வுரை என்று தேறினவர்க்கு உண்டோ ஒரு தவறு என்றவாறு.

(ப - உ.) என்பது —நம்மைத் தலையளிசெய்து நின்னிற் பிரியேன்: நீ அஞ்சேல், என்றவர் தாமே நீங்கிப் போவாராயின் அவர் தெளிவித்த சொல்லைத் தெளிந்தவர்களுக்கு வருவதொரு குற்றம் உண்டோ என்றவாறு.

தன்மையைப் படர்க்கை போலக் கூறினர்.
பிரிவுணர்த்திய தோழிக்குப் பிரிவு உடன்படாது கூறியது.

தலைமகள் வெருட்சிக் குறிப்பாற்
(3)

பரி. பா - ம். "வென்றவர் நீப்பிற்".

கா. 4.

ப. 8.

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின
னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

(கா - உ.) என்பது.—இங்ஙனம் தமது உரைதேறிப் பிரிவின் இயல் அஃது என்று இருந்த நமக்கு இஃது ஒழிந்து பிரிவினையும் நமக்குத் தாம் உரைக்கும் வன்கண்மையும் உடையாராயின் இனி மற்றவர் வந்து தலையளிப்பர் என்னும் பற்றுடைமையும் அரிது என்றவாறு.

(ப - உ.) என்பது.—பிரிவினை உடையாராயின் அவர் மறித்து வந்து

உரைக்கும் வன்கண்மையை நல்குவர் என்னும் ஆசையில்லை என்றவாறு.

பிரிதலும் ஆற்றுதலும் உலகியல் என்று தோழிக்குத் தலைமகள் கூறியது.

நெருங்கிக் கூறிய
(4) கா. 5.

ப. 5.

ஓம்பி னமைந்தார் பிரிவோ ம்பன் மற்றவர்

நீங்கி னரிதாற் புணர்வு.

(கா - உ.) என்பது.—தோழி நமது நெஞ்சோடு அமைந்த நம் காதலரை இனிப்பிரிவு குறிக்கொண்டு செல்லாமற் பாதுகாப்பாயாக ; மற்று அவர் பிரிவினைப் பாதுகாவாய் ஆயின் மற்று அவர் நீங்குவர் : நீங்குவாராயின் கூடுதல் சால அரிது எனவே யான் இறந்துபடுதலும் உண்டு என்பது பொருள் என்றவாறு.






(ப - உ.)
வைக் காக்க.
என்பது.—காக்கலாம் ஆயின் அமைந்தாருடைய பிரி
அவர் பிரிவாரயின் பின்பு கூடுதல் அரிது என்றவாறு.

மேற்
தோழிக்கு

றலைமகள் சொற்கேட்டு யாது சொல்வேன்
அவர் பிரியாமற் கூறு என்று தலைமகள் கூறியது.

என்ற

(5) கா. 6.

ப. 6.

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுத்தன்

வல்வரவு வாழ்வார்க் குரை.

பின்

(கா - உ.) என்பது.—தோழி நமக்கு உயிராகிய நம் காதலர் நம் நீங்கிச் செல்லாமை உளதாயின் அதனை எனக்குச் சொல்லு

வாயாக; மற்றுத் தனது விரைய வருகின்ற உயிர் வாழ்வார்க்குச் சொல் எனவே யான்

வரவினைப் பின் இருந்து உயிர் வாழ்வதில்லை என் பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—காதலர் போகாமை உண்டாயின் எமக்குக் கூறு; பிரிந்தார் நீட்டியாது விரைந்து வருவரென்று நீ சொல்லுகின்ற வரவினைப் பின்பு உளராய் வாழ்வார்க்குக் கூறு என்றவாறு.

பிரிவு உணர்த்தப்பட்ட தலைமகனது மென்று ஆற்றுளாயது கண்டு கடிது வருவர் மகள் ஆற்றுமை கூறியது.

வரவு நீட்டிக்கக் கூடு
என்ற தோழிக்குத் தலை கா. 7.
(6)

ப. 7.

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப்
பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

(கா - உ.) என்பது.—தத்தம் கொழுநரைப் பிரிந்த பிரிவின்கண் தமக்கு அல்லலைச் செய்யும் நெஞ்சுறுவது யாது அதை வரவாத் தணித்தும் மற்றும் அரியவை பொறுத்தும் இங்ஙனம் பிரிவு ஆற்றிப் பின்னும் இருந்து தம் உயிர்வாழும் பெண்டிரும் பலர் இவ்வுலகத்து எனவே யான் இருந்து வாழ்தல் எவ்வாற்றானும் அரிது என்று தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(ப - உ.) என்பது.—பொறுத்தற்கு அரியதனைப் பொறுத்து அல்லல் செய்யும் கோயை நீக்கிப் பிரிவையும் பொறுத்துக் காதலை நீங்கியபின் தமியாயிருந்து வாழ்வார் உலகத்துப் பலர் என்றவாறு.

அரியது அரிது ஆயிற்று—அதனைப் பொறுத்தலாவது பொழுதுங் குழலும் முதலாயினவற்றான் வரும் துன்பத்தைப் பொறுத்தல். அல்லல் நோயானது—காமவேதனை. பிரிவாற்றுதல்—புணர்ச்சி யின்மையைப் பொறுத்தல். இவ்வாறு உலகியற்கை யாதலால் நீ ஆற்றுய் ஆகின்றது தக்கது அன்று என்று தோழி தலைமகளை நெருங்கிக் கூறியது. (7)

8. பிரிவாற்றுமை

கா. 8. ப. 9.

*அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்*
*பிரிவோ ரிடத்துண்மை யான்.*

(கா - உ.) என்பது.—தோழி! உலகத்தினில் தம் உற்றார் சுற்றம் நட்டார் என்னும் அவரவர் மாட்டும் தேறும் தேற்றம் அரிது; மற்று இதற்கு என்னை காரணம் எனின் இன்றியமையாத் தன்மையாகிய இனியறிவுடையார் மாட்டும் கூடப்பிரியின் வாழாப் பேதையரினி னார்ப்(?) பிரிவென்பதும் ஒரு நிலத்து உளதாகலான் என்றவாறு.

(ப - உ.) என்பது.—உலகத்து ஒருவரைத் தேறும் தேற்றம் அரிதே: அறிவுடையார் மாட்டும் ஒரு காலத்தே பிரிவு உண்டாம் ஆதலின் என்றவாறு.

தலைமகன் பிரிந்தா னென்று கேட்ட விடத்து நின்னிற் பிரியேன் என்ற சொல்லை உட்கொண்டு தலைமகள் கூறியது. (8)

கா. 9. ப. 2.

*துறைவன் றுறந்தமை தேற்றுகொன்*
*யிறையிறவா நின்ற வளை.*
*முன்கை*

(கா - உ.) என்பது.—தோழி!
பிரிந்தமை அறியாவோ? அறியும்:
சந்தினின்று நீங்கா நின்றன வளை:

இவை நம் துறைவன் நம்மைப்
என்னையோவெனின் முன்கைச்
எனவே தன் தோள் மெலிவு

பார்த்துத் தளர்வுற்றாள் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—துறைவன் பிரிகின்றமையை எமக்கு அறிவி யாவோ? என் முன்கையின் இறையைக் கடவா நின்ற வளை என்ற வாறு.

முன்பே அறிதலான் உடம்பு மெலிந்தது என்றவாறு ஆயிற்று. பிரியாரென அறிவுறுக்கும் தோழிக்கு நீ சொல்ல வேண்டா; யான் அறிந்தேன் என்று தலைமகள் கூறியது. (9)

பரி. பா - ம். தேற்றுதோ.

கா. 10.
ப. 10.

தொடிற்சுடி னல்லது காமநோய்
விடிற்சுட லாற்றுமோ தீ.

போல

(கா - உ.) என்பது.—தோழி! தன்னைக் கிட்டித் தொட்ட காலத்துப் புறஞ்சுடும் அல்லது காமத்தீப் போல விட்டுநின்ற காலத்து வெவ்விதாகி நின்று உள்ளே சுடுதலை யறியுமோ உலகத்துத் தீ என்றவாறு.

6



(ப - உ.) என்பது.—தீண்டினாற் சுடும் அது அல்லது காமம் போல நீங்கிற் சுடவற்றோ தீ என்றவாறு.

தலைமகன் பிரிந்துழித் தலைமகளது ஆற்றாமை கண்டு தோழி கூறியது.
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் பிரிவு ஆற்றுளாகிய தலைமகள் தலைமகனை நினைந்து உறமெலிந்து தோழிக்கும் தன்னெஞ்சிற்கும் சொல்லித் துயர் உறுகின்றமை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 9. படர்மெலிந்திரங்கல்.

(ப - உ.) படர் மெலிந்திரங்கலாவது தலைமகன் மெண உற்ற துன்பத்தினன் மெலிந்து இரங்குதல்.

பிரிந்துழிக் கது
பிரிந்துழி யுற்ற
துன்பம் ஆவது போனன் என்று கேட்ட காலத்து வருவது ஓர் மன நிகழ்ச்சி. இது பிரியப்பட்டார்க்கு முற்பாடு தோற்றும் ஆதலான் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

மறைப்பன்மன் யானிதோர் நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

(கா - உ.) என்பது.—தோழி! நம் துணைவ ரானவர் பிரிந்த விடத்து நம்துயர் பிறர்க்குப் புலனாகாமை மறைக்குமதுவே நம் பெண் மைக்கு இயல்பு என்று என்னை நீ இடித்து உரைக்க வேண்டுவது இல்லை. இந்நோயினை யான் பிறர் அறியாமை மறைப்பேன்; மறைத்த இடத்தும் இறைப்பவர்க்கு ஊற்று நீர் போலத் தானே மிகா நின்றது என்றவாறு.

(ப - உ.) என்பது. —இந்நோயை யான் மறையா நின்றேன் ; மறைக்கவும் இஃது இறைப்பார்க்கு ஊற்று நீர்போல மிகாநின்றது என்றவாறு.

தலைமகள் ஆற்றாமை கண்டு இதனை இவ்வாறு தகாதென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

புலப்பட விடுதல்
(1) கா. 2.

ப. 3.

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

(கா - உ.) என்பது.—தோழி! இங்ஙனம் பெருகிச் செல்லா நின்ற படர்நோயை யான் இனிப் பலர்க்குப் புலனாகாமை மறைத்தலும் அறியேன்: மற்று இப்படர்நோய் செய்தார்க்குச் சென்று ஒரு தூது உரைக்கக் கருதின் மற்று அதுவும் பெரியது ஓர் நாணுதலைத் தருமாயிராநின்றது: இனி என் வினையும் யான் அறிகிலேன் என்றவாறு.



(ப - உ.) என்பது.—இந்நோயை மறைக்கவும் அறிகின்றிலேன்; இந்நோயைச் செய்தாற்குச் சொல்லி விடவும் நாணம் ஆகா நின்றது என்றவாறு.

இவ்வாற்றாமையைத் தலைமகற்குச் சொல்லி

விடுவோம் என்று தலைமகள் குறிப்பு
கூறியது.
அறிதற்பொருட்டுக் கூறிய தோழிக்குத் தலைமகள்
(2)

கா. 3.
ப. 1.

துப்பி னெவன்செய்வார் மற்கொ
றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

(கா -
யாதினைச்

உ.) என்பது.—பகைவர் மாட்டு வலிசெய்யும் பொழுது செய்வார்கொல்லோ? துயர் வரவினை நட்டார் மாட்டுச் செய்கின்றவர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—வன்மை செய்யவேண்டும் இடத்து யாங்ஙனம் செய்கின்றாரோ? மென்மை செய்யவேண்டும் நட்டோர் மாட்டே துன்பம் வருதலைச் செய்கின்றவர் என்றவாறு.

இது பகைதணி வினையின்கண் பிரிந்த தலைமகனது கொடுமையை உட்கொண்டு தலைமகள் தோழிக்குச் சொல்லியது. (3)

பரி. பா - ம். 'செய்வர்'.

கா. 4.

ப. 7.

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல தில்லை துணை.

(கா - உ.) என்பது.—தோழி! உலகத்து மன்னப்பட்ட உயிர்கள் அனைத்தையும் துயிலப் பண்ணி அளிக்கத் தக்கது இற்றை இராக்காலம் என்கின்ற இது; பின்னர் என்னை அல்லது தனக்கு வேறு ஒரு துணை யில்லையாயிற்று; எனவே இங்கு யானும் இராவுமே பிரியாது இருக்கின்றேம் என, இது மற்று என்னின் நீங்குவது எக்காலம்? என்று இங்ஙனம் தன்னுடைப் படர் மெலிவினை உரைத்த வாறு ஆயிற்று என்று அறிக.

கள்

(ப - உ.) என்பது.—அளித்த இரா உலகத்து வாழ்கின்ற உயிர் எல்லாவற்றையும் துயிலப் பண்ணி என்னை அல்லது வேறு துணை யாக இருந்தார் இல்லை என்றவாறு.

இது கண்ணுறங்குகின்றது இல்லை என்று மகள் தோழிக்குச் சொல்லியது.

பிற்றை ஞான்று தலை

(4)

பரி. பா - ம். 'வென்னல்ல'.

கா. 5.
ப. 8. கொடியார் கொடுமையிற்
றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.
(கா -
கொடுமை

உ.) என்பது.—நெஞ்சே! நமக்குப் பிரிவு
செய்த அக்கொடியாரது கொடுமையினும்

.என்பதோர்
தாம் சாலக்
கொடியவாய் இருந்தன: யாவை எனின், நம்மை ஒரு பொழுதும்
அறியாது இன்னவாய் நெடியவாய்ப் பெருகிச்செல்லும் பல யாமங்
களை நிலையுறுப்பாக உடைய இந்நெட்டிரா என்றவாறு; எனவே
அன்று நெடுகாமையும் இன்று நெடுகுதலும் கண்டு
வாறு ஆயிற்று.
மெலிந்துரைத்த
(ப - உ.) என்பது.—கொடியவர் செய்த
கொடுமை போலக்
கொடியவாகா நின்றன. முன்புபோலன்றி
கழிகின்ற இராப்பொழுது என்றவாறு.

இக்காலத்து நெடியவாய்க்

இது பொழுது

குச் சொல்லியது.

விடிகின்றது இல்லை என்று தலைமகள் தோழிக் கா.

(5)

6.

ப. 6. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்

யாமத்தும் யானே யுளேன்.

(கா - உ.)

நூறப் பெருகிச்

என்பது.—நெஞ்சே! நமது காதலர் மாட்டுக் கருத் செல்கின்ற இக்காம நோயாகிய கடும்புனல் வெள்

ளத்தை நீந்தி ஒருகால் கரைகாணப் பெறேனாகி மற்று யிருள் யாமத்தும் யானே உளேன்: இனி இதற்கு என்னை? என்றவாறு.

அவ்விடை

உய்யுமாறு

(ப - உ.) என்பது.—காமம் ஆகிய பெருக்காற்றினை நீந்திக் கரை காண்கின்றிலேன்; அரையிருள் யாமத்தும் உறங்காதேன் யானே யுளனென மற்று உறங்காதாரில்லை என்றவாறு.

இது காதலர் குறித்த நாள் வருந்துணையும் ஆற்றுமாறு என்னை என்ற தலைமகள் தன்னுள்ளே கூறியது. (6)

பரி. பா - ம். ' யுளன் '.

கா. 7. ப. 5.

இன்பங் கடலற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

காம்

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இக்காமம் ஆகின்ற இதுதான் அவரோடு கூடிவாழும் காலத்துப் பெருகும் இன்பம் கடல்



அனைத்து; இனி இன்பத்தை அடும் காலமாகிய பிரிவுக்காலத்துத் துன்பமானது அக்கடலினுஞ் சாலப் பெரிது என்றவாறு.

(ப - உ.) என்பது.—காமப் புணர்வினால் நமக்கு வரும் கடல் போலப் பெரிது. பிரிவினான், அஃது அடர்க்கும் வரும் துன்பம் கடலினும் பெரிது என்றவாறு.

இன்பம்
காலத்து

இஃது இன்பம் உற்றார் துன்பம் உறுதல் உலகியல் என்று ஆற்றுவித்த தோழிக்கு இன்பத்து அளவாயின் ஆற்றலாகும்: துன்பம் மிகுதலான் யான் ஆற்றல் அரிதென்று தலைமகள் கூறியது. (7)

பரி. பா - ம். "காமமற்".

கா. 8.

ப. 9.

உள்ளம்போன் றுள்வழிச் செல்கற்பின் வெள்ள நீர்
நீந்தல மன்னோவென் கண்.

(கா - உ.) என்பது.—தோழி! எனது உள்ளமானது அவர் உள்வழிச் சென்று என்மாட்டு வருதலின் மற்று அதுபோலத் தாமும் ஆண்டுச்சென்று கண்டு கண்டு ஓடி வருகற்பின் அங்ஙனம் அழுது அழுது பெருவெள்ளம் கோத்த நீர் நீந்துதலைச் செய்யல என்னோ என் கண்களானவை: அதனால் என்னெஞ்சு போலத் தாமும் அவரைக் கண்டு மீளப்பெறாத கடுந்துயரினாற் கலுழ்கின்றன என்றவாறு.

(ப - உ.) என்பது.—அவருள்ள இடத்து நெஞ்சினைப் போலக் கண்ணும் செல்ல வல்ல ஆயின் வெள்ளம் ஆகிய நீரின்கண் புகுந்து நீந்தாவே என்றவாறு.

இது காண்டல் விருப்பினால் தலைமகள் கூறியது.

(8) கா. 9.

ப. 10.

காமமு நாணு முயிர்காவாத்
தூங்கு மென்னோ னுடம்பி னகத்து.

தூங்குமென்

(கா - உ.) என்பது.—தோழி! காதலர் பிரிவின்கண் பெருகிய காம நோயும் அது பிறர் அறிதற்கு நாணுவதோர் நாணமும் என்னும் இவை இரண்டும் தானேயும் நிலையின்றி வாடுகின்ற எனது உயிரே காத்தண்டாகக் கனம் ஒக்கத் தூங்காநிற்கும்: இக்கனம் பொறுக்க லாத எனது உடலிடத்து என்றவாறு.

(ப - உ.) என்பது.—வேட்கையும் தண்டாகத் தூங்காநின்றது பொறுக்க

நாணமும் என்னுயிரே காத் மாட்டாத உடம்பினுள்ளே நின்று என்றவாறு.

தலைமகள் கருத்தின் பொருட்டு அவர் உள்வழிச் என்ற தோழிக்குப் போக நினைக்கும் ஒருகால்: அது

செல்வேம்
பெண்மை



அல்ல வென்று நினைத்துத் தவிரும் ஒருகால் :
நிகழ்ச்சி அதுவென்று தலைமகள் கூறியது.

இப்பொழுது என் மன
(9)

கா. 10.

ப. 4.

காமக் கடல்மன்னு முண்டே
ஏமப் புணைமன்னு மில்.

யது நீந்து

(கா - உ.) என்பது.—தோழி! அவரால் ஆகிய காம நோய் என்னும் பெருவெள்ளமானது மிகவும் உளதே: மற்று இனி அது நீந்திக் கரை ஏறு நிலைமைத்தாகிய இறுதி மிதவை ஈண்டு இல்லை என்றவாறு.

(ப . உ.) என்பது.—காமக்கடல் நிலையாக உண்டே; அது கடக்கும் ஏமம் ஆகிய புணை நிலையாக இல்லையே என்றவாறு.

இது தலைமகள் ஆற்றாமை கண்டு நெருங்கிய குறித்து நமக்குத் துணையாவார் இல்லை என்று தலைமகள்

தோழியைக்
கூறியது (10)

(கா - உ.)

திய தலைமகன்

இனி மற்று அப்பொருள் கடைக் கூட்டி வந்து எய்
இவளை வரைந்து எய்தி நெடுங்காலம் இன்புற்று இங்

ஙனம் இயலும் என்பது பொருளாம் என
வாறு அன்றிப் பின்னும் அவன் வருதல்

அறிக. இனி மற்று இவ்
நீட்டித்த விடத்து இவள்
பெரிதும் காண்டல் விருப்பினளாகும் அன்றே தலைமகனை: அதனுல்
மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 10. (கா.) கண் விதுப்பழித்தல்—(பரி.) கண் விதுப்பழிதல்.

(ப - உ.) கண் விதுப்பழிதலாவது கண் தனது விரைவினுல் அழிந்தமை தலைமகள் தோழிக்குக் கூறியது. பிரிவின்கண் துன்பம் உற்றூர்க்குக் கண்ணீர் முற்பாடு தோன்றுமாதலின் தனது ஆற்றுமையை ஒன்றன் மேலிட்டுக் கூறுவாள் அதனை முற்பாடு கண்ணின் மேலிட்டுக் கூறுதலான் அதன்பிற் கூறப்பட்டது.

கா. 1. ப. 6.

ஓஒ வினிதே யெமக்கிந்நோய்

செய்தகண்
டாஅ யிடார்ப்பட் டது.

(கா - உ.) என்பது.—தோழி! சால வியப்ப இனியது ஒன்றே: யாது எனின், முன்னம் தாம் அவரைக் கண்டு பின் எமக்கு இவ்வாறு இடர்தரும் நோய் செய்த கண் தாம் இப்பொழுது அழுதும் துயிலாதும் இங்ஙனம் இடர்ப்பட்ட இது என்றவாறு.

(ப - உ.) என்பது.—எமக்கு இந்நோயைச் செய்த கண் இந்நோயகத்துப் பட்டது மிகவும் இனிது என்றவாறு.
தாழும்

## 10. கண்விதுப்பழித்தல்

47

இது நின்கண் கலங்கிற்று: அஃது எனக்கு என்ற தோழிக்கு, அது மிகவும் இனிது என்று இன்னாதாயிற்று
தலைமகள் கூறி
யது.
(1)
பரி. பா - ம். 'மிதற்பட்டது'.
கா. 2.
ப. 4.
கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு

மதுநகத் தக்க துடைத்து.

(கா - உ.) என்பது.—தோழி! நாம் இவரைக் கண்...........
கைக்கொண்ட விடத்து மேல் நமக்கு இது வாய்க்கும் வாயாது என்றும் சிர்தூக்காது அன்று சடக்கெனத் தாமே நோக்கி இனிது இருந்து தாமே கலுழும்; அது யாம் பெரிதும் சிரிக்கத் தக்கது ஒன்று உடைத்து என்றவாறு.

(ப - உ.) என்பது.—அன்று விரைந்து தாமே நோக்கி, இன்று தாமே கலுழாநின்ற இது சிரிக்கத்தக்கது உடைத்து என்றவாறு.

இஃது ஆற்றுமையால் நக்க தலைமகளை இந்நகுதற்குக் என்னை? என்று வினவிய தோழிக்குக் கூறியது.

காரணம்

(2)

பரி. பா - ம். ' மிதுநக '.

கா. 3.

ப. 2.

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ
தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

(கா - உ.) என்பது.—இன்று இக்கண் தாம் மிகுந்து இங்ஙனம் கலுழ்வது என்னை கொல்லோ? தம்மாலும் நம்மாலும் தடுத்தற் கரிய உறுநோய் உறுதற்கு அன்று அவரைத் தாம் காட்டிற்றாக யாம் கண்டது எனறவாறு.

(ப - உ.) என்பது.—அமையாத நோயை யாம்

கண்டது அந் நோய் செய்தாரைக் காட்டுதலானே யன்றே? பின்னைக் கண்கள்
தாம் காண்டல் வேட்கையால் கலுழ்கின்றது யாவர் கருதியோ என்றவாறு.

காட்டுவாராகக் இது தலைமகள் காட்டுவாரில்லை சொல்லியது.

யென்று தோழியைக் குறித்துச் கா. 4.

(3)

ப. 1.

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
கொண்கனைக்
காணா தமைவில கண்.

(கா - உ.) என்பது.—தோழி! இவ்விடர் இரக்கத்திற்கு எது வாகிய கொண்கனைப் பின்னும் காணாவாயின் வாழாவாய் விட்டன



இக்கண்களானவை: இதற்கு என்னை காரணம். உலகத்துத் தம்மை விரும்பாதாரைத் தாம் இல்லை என்றவாறு.

விரும்புவாரும் உளரோ? எங்கும் கண்டது

(ப - உ.) என்பது.—விரும்பத் தகாதனை உளரோ? நம்மைக் காண்டல் விருப்பம் இன்றிப்

விரும்புவாரும்
போனவரைக்
காணாது இமைக்கின்றில எம் கண்கள் என்றவாறு.

இதனை யொழியப் பிறவும் உளவோ என்றது. சொல்லாது பிரிந்த தலைமகனது பெருமையை உட்கொண்டு வேட்கையாற் கூறியது. விரும்பத்தகாது என்றமையாற் சொல்லாது பிரிதல் ஆயிற்று.
(4)

பரி. பா - ம். மற்றவர்க்காணா திமையல.

கா. 5.

ப. 5.
மறைபெற லூரார்க் கரிதன்று லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

(கா - உ.) என்பது.—தோழி! அகத்து அடங்கு பொருளைப் புறத்து எளிதிற் பெறுதல் இவ்வூரவர்க் கரிது அன்று: யார் மாட்டு எனின் எம்போலக் கருத்துற்றது ஒன்றனை வெளிப்பட அறையும் பறைபோலும் கண்ணினையுடையார் மாட்டு என்றவாறு.

(ப - உ.) என்பது.—எம்மைப்போல அறைபறையாகிய கண்ணை உடையார் மாட்டு உளதாகிய மறையை அறிதல் ஊரார்க்கு எளிது எனறவாறு.

வரையாது பிரியப்பட்ட தலைமகள் என் கண்ணினாலே இவ்வொழுக்கம் பிறர்க்குப் புலனாகா நின்றது; அதற்கு யாங்ஙனம் செய்வேம் என்று தோழிக்குக் கூறியது. (5)

கா. 6.

ப. 9.

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

(கா - உ.) என்பது.—என் தோழி! அவர் இவ்விடத்து வாராத காலத்து எல்லாம் வரவு நோக்கி வருந்தித் துயிலப்பெறு; மற்று இனி ஒருகால் வந்தனராயின் பிரிவர் என்னை என்று அஞ்சித் துயிலப்பெறு: இங்ஙனம் இருவாற்றானும் அவ்விடத்து இவ்விடத்து இருந்து அஞர் உற்றன என கணகளானவை எனறவாறு. ஆர் என்பது அரும் துயர் உற்றன என்றது.

அஞர் உற்றன

(ப - உ.) என்பது.—அவர் வாராத காலத்துப் புணர்வு வேட் கையால் துஞ்சா; வந்த காலத்துப் பிரிவார் என்று அஞ்சித் துஞ்சா;



அவ்விரண்டு இடத்தினும் மிக்க துன்பம் உற்றன கண்கள் என்ற

வாறு.

இது நீ உறங்க வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் இன்றே அல்ல எஞ்ஞான்றும் உறக்கம் இல்லை என்று கூறியது. (6)

கா. 7. ப. 3.

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்.

(கா - உ.) என்பது.—தோழீ! யான் உன்னை ஒன்று வினவுகின்றேன். மற்று அதனைச் சிறிது ஆராய்ந்து அறிந்து சொல்லுவாயாக: அவரிடத்துப் பரிந்து நோக்கிய என் மை உண்டு அகன்ற கண்ணனவை அங்ஙனம் அன்று அறியாவாயினும் இன்று உற்ற பின்னும் உணராவாய் உறுதுயர் உழப்பது என் கருதிக் கொல்லோ? சொல் என்றவாறு.

(ப - உ.) என்பது.—முன்பு அவரை நல்லர் என்று தெரிந்து உணர்ந்து நோக்கிய உண்கண் இப்பொழுது வருத்தமுற்று நல்லர் என்று உணராவாய்த் துன்பம் உழப்பது எற்றுக்கு? என்றவாறு.

இது கண்ணின் அறியாமையைத் தோழிக்குக் கூறியது. (7)

கா. 8.
ப. 10.

படலாற்றா பைத லுழக்குங்
காமநோ யுற்றவெங் கண்.

கடலாற்றுக்

(கா - உ.) என்பது.—தோழீ ! ஒருபொழுதும் துயில மாட்டா வாய் இங்ஙனம் சால உறுதுயர் உழக்கும் : யாவை யெனின் கடலும் நிறையாற்றுப் பெருவெள்ளம் ஆகிய காமநோய் உற்ற என் கண்க ளானவை : யான் இதற்கு என் செயத்தகுவது என்றவாறு.

(ப - உ.) என்பது.—கடலினும் மிக்க காம நோயை என்மாட்டு நிறுத்துதலானே கண்கள் தாமும் உறங்க மாட்டாவாய்த் துன்பம் உழு நின்றன என்றவாறு.

இது பிறர்க்கு இன்னுமை செய்தார் தமக்கும் இன்னுமை வந் தது என்று தோழிக்குக் கூறியது. இவை எல்லாம் ஒன்றின் ஒன்று வந்தனவாகக் கொள்ளப்படா. இவ்வதிகாரத்துக் காம வேதனையாற் கண்ணுக்கு உறுவன எல்லாம் கூறப்பட்டது. (8)

பரி. பா - ம். ' செய்தவெங் '.

கா. 9.
ப. 8.

பெயலாற்ரு நீருலந்த வுண்க ணுயலாற்ரு
வுய்விஞோ யென்க ணிறுத்து.
7

(கா - உ.) என்பது.—தோழீ! உய்தற்கு ஓர் உபாயம் இல்லாத உறுதுயரத்தை என் கண்ணும் மருவுறுத்தி வைத்துத் தாமும் அகத்துள்ள நீர் எல்லாம் சொரிதலின் இனிக் கலுழ்மழை பெயலாற்றுவாய் நீர் ஒழிந்தன: என் மையுண்டு அகன்ற கண்ணனைவை: இனி யாதோ செயத்தக்கது? என்றவாறு.

(ப - உ.) என்பது.—உயல் ஆற்றாத என் மாட்டு உய்வில்லாத நோயை நிறுத்தி உண் கண்கள் தாமும் அழமாட்டாவாய் நீர் உலந்தன என்றவாறு.

கண்கள் தாம் நினைத்தது முடித்துத் தொழின் கூறியது.

மாறின என்று கா. 10.
(9)

ப. 7.

உழைந்துழைந் துண்ணீ ரறுக
வேண்டி யவர்க்கண்ட கண்.

விழைந்திழைந்து

(கா - உ.) என்பது.—தோழீ! முன்னம் தாம் விரும்பியவரைக் கண்டு இன்புற்ற கண் இவ்வாறு விரும்பிக் குழைந்து அலமந்து அலமந்து அழுது இங்ஙனம் உண்ணீர் செலவு அற்றுப்போக: இனி இதற்கு என்னை செய்வது என்றவாறு.

(ப - உ.) என்பது.—அழுதலை உழந்து உழந்து உள்ள நீர் அற வனவாக, தாம் வேண்டினவரை

விருப்பி நெகிழ்ந்து கண்ட கண்கள் என்றவாறு.

இவ்வாறு அழுதல் தகாது என்று தோழிக்குக் கூறியது. (10)

பரி. பா-ம். 'உழந்துழந்து'.

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் பிரிவிடை யாற்றாளாகிய தலை மகள் கண் கலுழ்தலே யன்றி மெய்பசத்தலுண்டு அன்றே! அதனை மற்று இதன் பின்னரே அவள் பசப்பினால் மதித்து உரைக்கின்றது மேலை அதிகாரம்.

உறுகின்ற பருவரலை

## 11. பசப்புறுபருவரல்:

(ப-உ.) பசப்புறு பருவரலாவது பசப்பு உறுதலான் வந்த வருத்தத்தைத் தோழிக்குத் தலைமகள் கூறியது. காதலித்தார்க்குக் காதலிக்கப்பட்ட பொருள் எய்தாக்கால் நிறம் வேறுபடுதலின் அதன் பின் இது கூறப்பட்டது.

கா. 1.

ப. 10.

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

## 11. பசப்புறுபருவரல்

(கா - உ.) என்பது.—தோழீ! என் மேனியானது பெரிதும் பசப்பதாக; மற்று இது பட்டாங்கு எய்துதலால் முன்பு என்னைத் தமது அருட்குணங்களால் பெரிதும் விரும்புதல் செய்த அவர் மற்று யான் பசப்பினுல் பருவால் உற்ற இந்நிலை ஒழிக்க வந்து தலையளிக்கும் தன்னிலையர் ஆவாராயின் என்றவாறு. நயப்பித்தல் - விரும்புவித்தல் என்று அறிக.

(ப - உ.) என்பது.—என் உடம்பு நிலையாக என்றும் தாக: நம்மைக் காதலிப்பித்தவரும் நம்மைப்போலத் துன்பம் ராயின் என்றவாறு.

பசப்ப

உறுவ

நீ இவ்வாறு ஆற்றுய் ஆகின்றதனை நம் காதலர் கேட்பாராயின் செய்வினை முடித்தல் ஆற்ருது வருந்துவர் என்ற தோழிக்கு அவர் அத்தன்மையர் ஆகப் பெறின் என்றும் பசந்தால் தலைமகனது கொடுமை உட்கொண்டு கூறியது.

பரி. பா - ம். நந்நிலையர்.
ஆகாதோ என்று

கா. 2.
ப. 3.

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
ல்லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

(கா - உ.) என்பது.—தோழீ ! அவர் நம்மைப் பிரியாது உடன் வாழ்காலத்து ஒரு ஞான்று பெரிதும் இறுக இறுகத் தழுவிக் கிடந்தேன் ; அவ்விடத்து என் கண் சிறிது அயர்ந்தவாகப் புடைபெயர்ந்தேன் ; அவ்வளவில் என் மேனிமேல் கையினாலே வாரிக்கொள்வது போல வந்து பரந்தது பசப்பு ; எனவே இன்று என் ? என்பது பொருள் என்றவாறு.

இனி உரைப்பது

(ப - உ.) என்பது. —முயங்கிக்கொடு கிடந்தேன் புடைபெயர்ந்தேன் : அவ்வளவிலே அள்ளிக் கொள்ளலாம்படி செறிந்தது பசலை என்றவாறு.

இது தலைமகனால் சொல்லாது பிரியப்பட்ட தலைமகளைப் பிற்றை ஞான்று அவள் வேறுபாடு கண்டு இஃது எற்றினான் ஆயிற்று என்று நறித்து நோக்கிய தோழிக்குத் தலைமகள் கூறியது. (2)

கா. 3.

ப. 2. விளக்கற்றம் பார்க்கு

மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

(கா - உ.) என்பது.—உலகத்து விளக்கினது அற்றம் பார்க்கும் இருளே போலத் தானும் என் நிறம் கவர்தற்கு அவர் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பிதற்கு ; ஒரு தீர்வு இல்லையோ என்றவாறு.

(ப
போலக்

- உ.) என்பது.—விளக்கின் இறுதி பார்க்கும் இருளைப் கொண்கனது முயக்கத்தின் இறுதி பார்த்து நின்றது பசப்பு எனறவாறு.

இஃது அவர் பிரிந்தது இப்பொழுது ஆகலின் வந்தது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

பசப்பு யாங்ஙனம்

(3) கா. 4.

ப. 4.

உவக்காணெங் காதலர் செல்வா
ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

(கா - உ.) என்பது.—தோழீ! கேளாய் அவர் பிரிந்தது பெரிது கொல் என்று கருதவேண்டா; போய் அங்கே காண்: எம் காதலர் இப்பொழுது செல்வார் ஆயினர். மற்று அவ்வளவில் இங்குக் காண். என்மேனி ஓர் பசப்பு வந்து ஊர்வது என்றவாறு.

(ப - உ.) என்பது.—உங்கே பாராய் எம் காதலராய்ச் செல்கின் றூரை: இங்கே பாராய் என்மேனி மேலே பசப்புப் பரப்பதனை என்ற வாறு.

இஃது அவர் பிரிந்தது இப்பொழுதா யிருக்கப் பசலை பாவா நின்றது : வரும் அளவும் யாங்ஙனம் ஆற்றுதும் என்று தலைமகள் கூறியது.

(4) கா. 5.

ப. 5.

உள்ளுவன் மன்யா னுரைப்ப
தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

(கா - உ.) என்பது.—தோழீ ! யான் முதுகுரவர் ஆகிய பெரியோரையும் முகம் நோக்குதல் இன்றி எப்பொழுதும் மற்று அவரையே என் நெஞ்சினால் நினைத்திருப்பது பெரிது ; மற்று என் நாவினால் உரைப்பதும் எப்பொழும் அவர் தம் குணத்திறமே ; இங்ஙனம் அவரிடை அற்றம் இன்றி எனது உரையும் மனமும் ஒருங்கு கலந்திருப்பவும், இவ்விடத்து வருகின்றது அற்றம் பார்த்தல் செய்வது அல்லாமையும் மற்றிது ஓர் வஞ்சனையாம் இத்துணையே பசக்கின்ற பசப்பு என்றவாறு.

(ப - உ.) என்பது.—யான் எக்காலமும் நினைப்பேன் ; என்றுஞ் சொல்லுவது அவர் திறமே; இத்தன்மையேன் ஆகவும் பசலை பாவா நின்றது ; இதற்கு நினைவு யான் அறிகின்றிலேன் என்றவாறு.

முன்பு கள்வு காலத்து வேட்கையால் அவரது செயலைக் கூறவும் நினைக்கவும் ஆற்றுமை நீங்கும் : இப்போது அதுபோல் அன்றி ஆற்றுமை மிகாநின்றது என்று கூறியது. (5)

11. பசப்புறுபருவரல்

கா. 6. ப. 7.

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இவள் பசந்தாள் பசந்தாள் என்று எப்பொழுதும் என்னைக் குறை சொல்லுவது அல்லாமல், இவளைப் பிரிந்து நின்றார் அவர்: மற்று இது காரணமாகத் தன் மேனி பசந்தாள் இவள் என்று இங்ஙனம் சொல்லுவார் எமக்கு ஒருவரும் இல்லை என்றவாறு.

(ப - உ.) என்பது.—இவள் பசந்தாள் என்று எனக்குக் குற்றம் நாடுமது அல்லது இவளைத் துறந்தார் அவரென்று அவரது கொடுமை சொல்லுவா ரில்லை என்றவாறு.

இப்பசத்தல் ஆகாது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.(6) கா. 7.

ப. 8.

நயந்தவர் நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! முன் எம்மைப் பெரிதும் நயந்து அளித்தவர் தாமே பின் இடையறவு இன்றிக் கடைபோக நல்காமையைக் கண்டு நேர்ந்தேனாகி மேனி பசந்த என் பருவரலினை வேறு யார்க்குச் சொல்லி ஆற்றுவேனோ என்பதனால் இது தோழி கேட்பக் கூறிய கொடுமைக் கூற்று என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நம்மாற் காதலிக்கப் பட்டவர் அருளாமையை இசைந்தேனாகப் பசந்த எனது நிறத்தை மற்று யாவர்க்குச் சொல்லுவேன் என்றவாறு.

காதலர் பிரிந்துழி ஆற்றியிருத்தல் பெண் கடன் என்ற தோழிக்கு, யானும் ஆற்றுவேனாக இப்பசப்பை யாவரால் நீக்குவேன் என்று வெகுண்டு கூறியது. (7)

கா. 8

ப. 9.

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து.

(கா
போலும்

- உ.) என்பது.—தோழீ! மயில்போலும் சாயலும் உயிர் நாணமும் என் காதலராகியவர் கொண்டு ஏகினர்; தாம் அவை கொண்டு ஏகினர் அதற்குக் கைம்மாறாக எனக்கு இவ்வுறு துயரும் பசப்பும் என்னும் இவை இரண்டும் ஒருங்கு தந்து என்றவாறு.

## 12. தனிப்படர்மிகுதி.

(ப - உ.) என்பது.—தனிப்படர் மிகுதியாவது தனிமை யான் வந்த துன்ப மிகுதி கூறுதல். யாம் பசப்பு உற்று வருந்துகின்றாற் போல் அவரும் வருந்துவர் எனின் இப்புணர்ச்சி இடையறாமல் இனிது நடக்கும் என்று நினைத்துத் தனது துன்பத்தினைக் கூறுத லான் அதன்பின் இது கூறப்பட்டது.

கா. 1. ப. 5.

ஒருதலையா லின்னாது காமங்காப்
பிருதலை யானு மினிது.

போல

(கா - உ.) என்பது.—நெஞ்சே! இவர் மாட்டு ஒருவழிப்பட ஒத்து நிற்பது அன்றிக் காமம் ஒருதலைபற்றி நிற்பது இன்னாது; காவினது பாரம்போல இருதலையானும் ஒத்து நிற்பது உளதாயின் மிகவும் இனிது என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஒருதலை அன்பினால் உண்டாகிய இன்னாது: காவினது பாரம் போல இரண்டு தலையும் ஒத்த தான் உண்டாகிய காமமே இனிது ஆவது என்றவாறு.

காமம்
அன்பி

இது மேற்கூறிய சொற்கேட்ட பாங்கு ஆயினர் அன்பு செய்வாரைத் தலைவன் அருள் செய்வன் என்று நகைக் குறிப்பினாற் கூறிய சொற்கேட்டுக் கூடினாலும் பயன் இல்லை என்று தலைமகள் கூறியது. (1)

பரி. பா - ம். ' தலையான் '.

கா. 2.

ப. 2.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்திற் காழில் கனி.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! உலகத்துத் தாம் விரும்பிய தலைவர் தம்மையும் விரும்பித் தலையளி செய்யப்பெற்ற மகளிர் பெற்றாரே காமம் ஆகிய விரை இல்லாத கனியினை என்றவாறு.

(ப - உ.) என்பது.—தாம் காதலித்தாரால் தம்மைக் காதலிக்கப் பெற்றவர் பெற்றார் ஆவர்: காம நுகர்ச்சியின்கண் பரல் இல்லாததோர் பழம் என்றவாறு.

தடையின்றி நுகரலாம் என்றவாறு ஆயிற்று. புணர்வு வேட்ட நெஞ்சிற்கு யாம் நல்வினை செய்கிலேம்; செய்தேம் ஆயின் அவரும் காதலிப்பர்: அவர் மாட்டுக் காதல் இன்றாக வருந்த வேண்டா என்று தலைமகள் கூறியது. (2)

பரி. பா - ம். ' காமத்து '.

கா. 3. ப. 6.

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! வையத்து உயிர் வாழ்வார் அனைவர்க்கும் மழை பொழிந்த அத்தன்மைத்து: யாதோ எனின் விருப்புற்று வாழும் மகளிர்க்கு அங்ஙனம் விரும்பத் தக்கோர் ஆகிய தலைவர் அளிக்கும் தலையளி என்றவாறு.

(ப - உ.) என்பது.—உயிர் வாழ்வார்க்கு மழை பெய்தாற் போலும்: காதலித்தார்க்குக் காதலிக்கப்பட்டார் அருளும் அருள்: அஃது இல்லார்க்கு வாடுதலே உள்ளது என்றவாறு.

இது நின்மேனி பொலிவு அழிந்தது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (3)

கா. 4. ப. 7.

வீழுநர் வீழப் படுவார்க் கமைந்ததே
வாழுந மென்னுஞ் செருக்கு.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! தாம் வரால் தம்மை விரும்பப்படுவார் யாவர் சிலர்; தது யாது எனில் வையத்து வாழ்கின்றேம்

விரும்பினாாகிய தலை
மற்று அவர்க்கு அடுத்
யாம் என்னும் மனச்
செருக்கு என்றவாறு.

(ப - உ.) என்பது.—தாம் காதலித்தாராற் காதலிக்கப்படுவார்க்கு அமையும் : உலகின்கண் இருந்து உயிர் வாழ்வோம் என்னும் களிப்பு எனறவாறு.

இது தலைமகள் இருந்தாலும் பயன் அமையும் என்று வாழ்க்கையை என்று கூறியது.

இல்லை : அதில் சாதல்
முனிந்து தோழிக்குக்
(4)

பரி. பா - ம். 'கமையுமே'.

கா. 5.

ப. 4.

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

(கா - உ.) என்பது.—நாம் காதல் கொண்டிருக்கின்ற காதலர் தாமும் நம்மாட்டுக் காதல் கொள்ளாதபின் நமக்கு என்ன துணைமை செய்வரோ? யாதும் செய்யார் ; அதனால் யாம் இத்தனிப்படர் உறுதலே உளது என்றவாறு.

(ப - உ.)
னைச் செய்யும்

என்பது.—நாம் காதலித்தால் அக்காதல் நமக்கு
? அவர் தாம் காதலியாத விடத்து என்றவாறு.

யாத



புணர்வுவேட்ட நெஞ்சிற்கு நின் காதலினால் பயன் இல்லை என்று தலைமகன் கொடுமையை யுட்கொண்டு அவன் பாங்காயினார் கேட்பத் தலைமகள் கூறியது. (5)

பரி. பா - ம். 'கொண்டால்' 'செய்யவோ'.

கா. 6.

ப. 3.
உறுஅர்க் குறுநோ யுரைப்பாய்
கடலைச்
செறுஅஅய் வாழிய நெஞ்சு.

(கா - உ.) என்பது.—நெஞ்சினால் நம்மொடு சிறிதும் பரிவு உறுாகிய நம் காதலர்க்கு நாம் உறுநோய் கூடக்கூடச் சென்று சென்று கூறுவாயாக ; மற்று அல்லவாயின்

கடல் ஆகிய வெள்ளநீர் ஒலியைச்
நெஞ்சே! என்றவாறு.
நம்மை வருத்துகின்ற பெருங்
செறுத்து வாழ்வாயாக: என்

(ப - உ.) என்பது.—என் நெஞ்சமே! என் மாட்டு அன்பு உறு தவர்க்கு நீ உற்ற நோயைச் சொல்ல நினையா நின்றாய்: அதனினும் ஈன்று நம்மை உறங்காமல் வருத்துகின்ற கடலைத் தூர்ப்பாய் ஆயின் என்றவாறு.

இவை இரண்டும் முடியா என்றவாறு ஆயிற்று. தூதுவிடக் கருதிய நெஞ்சிற்குத் தூது விட்டாலும் பயனில்லை என்று தலைமகள் கூறியது. (6)

பரி. பா - ம். 'வாழியென்'.

கா. 7.

ப. 8.

வீழப் படுவார் கெழீயிலரே தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! நாம் விரும்பப்படுவார் தாமும் நம்மாட்டு விரும்பப்படுவார் ஆயின் முன்னமே நாம் பேறுடை மகளிர் ஆவோம் அல்லது, மற்று அவர் மாட்டு நாமே காதலை வைக் கப்பட்டோம் ஆயின் முன்னமே அவரோடு நட்புப் பூண்டிருப்பதற் குப் பேறு பெற்றிலேம் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நற்குணங்கள் பலவும் உடையார் என்று உலகத்தாரால் விரும்பப்பட்டாரும் விருப்பம் இல்லார் ஆவர்; தம் காதலரால் காதலிக்கப்படார் ஆயின் என்றவாறு.

இது வாழ்க்கையை முனிந்து கூறிய தலைமகனை இவ்வாறு கூறு வாய் ஆயின், நின்னைப் புகழ்கின்ற உலகத்தாரும் இகழ்வர் என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. கொண்டான் காயிற் கண்டார் காய்வர் என்பது உலகவழக்கம். (7)

பரி. பா - ம். 'கெழீஇயிலர்'.

8



கா. 8. ப. 1.

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
ணொருவர்க ணின்றொழுகு வான்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யாம் உறுதுயரமும் இதனால் உள்ளுறும் இரக்கமும் கண்டிலன் போலும்: இங்ஙனம் ஒருவர் கண்ணே நின்று இடர்செய்து ஒழுகுவான் ஆகிய இந்தக் காமன் என்கின்றவன்: எனவே இதனை அவன் கண்டானாகில் ஆண்டும் சென்று அடர்ப்பன் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நமது தடுமாற்றமும் நாம் உறுகின்ற துன்பமும் காணுதான் ஒருவர் பக்கமாக நின்று ஒழுகித் துன்பஞ் செய்கின்ற காமதேவன் காண்பானாயின் நம்மை வருத்தானே தெய்வம் ஆதலான் என்றவாறு.

செய்மைக்கண் பிரிதலே அன்றி அணுமைக்கண் பிரியும் பிரிவும் உள; அவையாவன அவைக்களனும் மாசவையும் அத்தாணியும் புகுதவும், நல்லிசை நயந்து வந்தோர் காணவும், பணைநிலைப் புரவி காணவும், வாரியுள் யானை காணவும், நாட்டகத்துப் பிரியும் பிரிவும்

அவற்றுள் யாதானும் ஒன்றனால் தலைமகன் பிரிந்துழி ஆற்றாள் ஆகிய தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. செய்மைக்கண் பிரிந்தான் ஆயின் பருவம் காணின் அல்லது இக்கூற்றினால் பயன் இல்லை. யாத்தையிற் பிரிவு ஆயின் புலவி தோன்றும். ஆதலான் அணுமைக்கண் பிரிந்தானைப்பற்றிக் கூறப்பட்டது என்று கொள்ளப்படும். இவ்வுரை மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். (8)

கா. 9.

ப. 10.

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நாம் ஆசை உற்றவர் நம்மை அளித்திலர் ஆயினும் அவர் திறத்து ஒரு வார்த்தை ஆயினும் கேட்கப் பெறின் அதுவும் நமது செவிக்குச் சால இனியதே என்றவாறு. எனவே அங்கு நின்றுள் ஒரு தூது வருதலினும் இங்கு நின்றும் தோழி தானொரு தூது விடுதல் செய்வதே இனிது என்றவாறு.

(ப - உ.) என்பது.—எம்மாற் காதலிக்கப் பட்டார் எமக்கு அருளார் ஆயினும், அவர் பக்கத்தனவாகிய சொற்கள் எங்களால் இகழப்படாது அதுவும் செவிக்கு இனிய ஆம் என்றவாறு.

எங்கள் பக்கத்தன ஆகிய சொற்கள் அவர்க்கு இன்னாது ஆகும் என்பது குறிப்பு. தலைமகன் பாங்கு ஆயினர் அவனைப் புகழ்ந்துழித் தனது வேட்கை மிகுதியால் தலைமகள் கூறியது; அன்றியும் தலைமக

னுழை நின்றும் வந்த தூதர் வாய்ச்சொல்
மலர்ச்சி கண்டு இஃது எற்றினுன் ஆயிற்று
குத் தலைமகள் கூறியது.

கேட்ட தலைமகளது முக
என்று வினவிய தோழிக்
(9)

கா. 10.*

ப. 9.

உரநசை யுள்ளந் துணையாகச் சென்ருர்
வரனசைஇப் பின்னு முளேன்.

(கா - உ.) என்பது.—அருங்கலை கற்றவர் அருகு சென்று பெருங்கலை ஞானம் பெறுதல் வேண்டித் தம் பண்பு அறிவுதான் ஒரு பருவம்செய்து எழுந்த உள்ளமே அதற்கு உறுதுணையாகக் கொண்டு ஓதற்குப் போனவரது வரவை நச்சி இது பற்றுக்கோடாக இன்னும் இறந்துபடாது உளேன் என் நெஞ்சமே: எனவே இதினுலும் இவளது தூது விடுதல் பயன் என்பது பொருள் என்றவாறு. உரம் என்பது அறிவு.

(ப - உ.) என்பது.—இன்பத்தை நச்சாது வலிமையையே நச்சிப்பேசி மனமே துணையாகச் சென்றவர் வருவார் என்கிற ஆசைப் பாட்டினுல் இன்னும் உளேன் ஆனேன் என்றவாறு.

பம்

பிரியப்பட்டார்க்கு இதனின்மேல் இறந்துபாடு அல்லது துன் நிகழாமையின் குறிப்பு அறிவுறுத்தல் பின் கூறினர் ஆயினர்.(10)

(கா - உ.) இவ்வாறு ஓதப்பிரிந்த தலைமகனை

நினைந்து பின்னும் இவள் புலம்புகின்றமை

அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 13. நினைந்தவர் புலம்பல்.

(ப - உ.) நினைந்தவர் புலம்பல் ஆவது சேய்மைக்கண் ஆயினும் அணுமைக்கண் ஆயினும் பிரிந்த தலைமகனை ஒழிவு இன்றி நினைந்த மகளிர் துன்பம் உறுதல். இது தலைமகள் கூற்று. நினைத்தவர் புலம்பல் என்று பாடம் ஆயின், அதற்கு அவரை நினைத்துப் புலம்பல் என்று பொருள் உரைப்பினும் ஒக்கும். தனிப்பட்டார் காதலரை எல்லாக் காலமும் ஒழிவின்றி நினைப்பர் ஆதலின் அதன்பின் கூறப் பட்டது.

---

*10.வது. 'ஊரனசை'—இதனைப் பரிமேலழகரும் மணக்குடவரும், பரிப்பெருமாளும், 'அவர்வயின் விதும்பல்' என்ற கற்பியல் 12-வது அதி காரத்தில் வைத்துள்ளனர். பரிமேலழகர் 3-வது, மணக்குடவர் 7-வது, பரிப் பெருமான் 10-வது

ஈண்டு " வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில் "

என்ற குறளை அம்மூவரும் கொண்டுள்ளனர்.

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! எவ்வாற்றானும் இனியது ஒன்றே காண் இக்காமம் ஆகின்றது: என்னை எனில் பண்டு எய்திய காலத்து இனிமை அன்றி இங்ஙனம் எய்தாக் காலத்தும் தாம் வீழ் வாரை இனி வந்து எய்துவர் என்று இங்ஙனம் நினைப்பவும் அதனா லும் வருவது ஓர் துன்பம் இன்மை என்றவாறு.

(ப - உ.) என்பது.—யாது ஒன்றினானும் இனியது ஒன்றே காமம்: தாம் விரும்பப்படுவாரை நினைக்க வருவது ஒரு துன்பம் இல்லை காண் என்றவாறு.

நீ இவ்வாறு ஆற்றாய் ஆகின்றது துன்பம் தோழியை மறுத்துத் தலைமகள் கூறியது.

பயக்கும் என்ற

(1) கா. 2.

ப. 9.

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

(கா - உ.) என்பது.—கண்டு எய்திய காலத்திலும் தமது இனிய குணங்களை நினைத்தலே அன்றிப் பின்பு நின்னிற் பிரியேன்: பிரியின் ஆற்றேன் என்று இங்ஙனம் தெளிந்து அளித்துப் பிரிதலும் மாற்ற லும் வல்லமையிற் படிறுடைமையும் பண்பின்மையும் உடையர் ஆயி னர் என்று இங்ஙனம் கொடுமை நினைப்பினும் காய்வது ஒன்று இலர்:

காதலித்து உள்ளுள்ளே உறைவர்: அதனால் நமக்கு நம் காதலர் செய்யும் பெருஞ்சிறப்பு அவ்வளவைத்து அன்றோ? எனவே கண்ணெதிர் நிற்பர்: இன்று கருத்து எதிர் நிற்பர்: இதுவன்றோ நம் மாட்டுத் தலைவர் செய்யும் தலையளி என்றவாறு.

(ப - உ.) என்பது.—யாம் அவரை எவ்வளவு நினைப்பினும் வெகுளார்: அவ்வளவு அன்றோ அன்புற்றார் செய்யும் அருள் என்றவாறு.

அருள் செய்தலாவது குற்றம் கண்டாலும் வெகுளாமை என்றது. தலைமகள் ஆற்றாமை கண்டு அருள் இலன் என்று இயற்பழித்த தோழிக்கு யாம் கொடியர் என்று நினைக்கவும் அதற்கு முனியாது நெஞ்சத்தே உறையா நின்றார்: ஆதலான் அருள் உடையர் என்று கொள்ளப்படும் என்று இயற்பட மொழிந்தது. (2)

கா. 3. ப. 5.

விளியுமெ னின்னுயிர் வேறல்ல வென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

(கா - உ.) என்பது.—தோழீ! யான் என்னை செய்வது? என் இன்னுயிரானது ஒரு காலைக்கு ஒரு காலைக் கழியும்; யாதனால் எனின் அன்று அருளுடன் அளித்து யாம் இருதலைப் புள்ளின் ஓர் உயிர் போல மெய் இரண்டு ஆயினும் உயிர் வேறு அல்ல என்பவர் மாட்டு அதற்கு எற்பப் பின்னொரு தண்ணளி யில்லாமையை மிகவும் நினைந்து நினைந்து என்றவாறு.

(ப - உ.) என்பது.—நம்முள் சொன்னவாறு அருள் இன்மையை

நாம் வேறு அல்லேம் என்று மிகவும் நினைந்து எனதாகிய இன் னுயிர் அழியா நின்றது என்றவாறு.

இது தலைமகன் நினையான் என்று யால் தோழிக்குக் கூறியது.

தேறிய தலைமகள் ஆற்றுமை

(3)

பரி. பா - ம். 'வேறல்லம்'.

கா. 4.

ப. 6.

மறப்பி னெவனுவன் மற்கொன்

னுள்ளினு முள்ளஞ் சுடும்.

மறப்பறியே

(கா - உ.) என்பது.—தோழீ! யான் அவர் திறம் ஒருக்கால் மறப்பேன் ஆயின் எவன் ஆவென் கொல்லோ? மறப்பு அறியேன்: ஆகலால் எப்பொழும் அகத்து உள்ளியக் கண்ணும் உள்ளுகின்ற உள்ளம் பின்னும் குளிர்தலின்றிச் சாலக் கொதிக்கும் என்றவாறு. மற்கொல் என்றது அசைச்சொல். யான் என் ஆவன் என்றதனுன் இறந்துபாடு உடையன் ஆவன் அன்றிப் பிறிது ஒன்று ஆவது இல்லை என்பது கருத்து என்று அறிக.

(ப - உ.) என்பது.—அவரை மறந்த பொழுது என் ஆவன் கொல்லோ: மறப்பு அறியேனுய் நினைக்கவும் இக்காமம் நெஞ்சத்தைச் சுடா நின்றது என்றவாறு.

சிறிய உள்ளிப் பெரிய மறக்க வேண்டும்
தலைமகள் கூறியது.
என்ற தோழிக்குத் கா. 5.
(4)

ப. 8.
மற்றியா னென்னுள்ளேன் மன்னோ
னுற்றநா ளுள்ள வுளேன்.
வவரொடியா

(கா - உ.)
யான் வவரோடு

என்பது.—தோழீ! அங்ஙனம் நெஞ்சு சுடினும் இன்புற்ற நாள்களை நினைய நினைய மற்று அது பற் றுக்கோடு ஆக ஆற்றியுள்ளேன் ஆகின்றேன் அல்லது வேறு யான் என் பற்றி உள்ளேன் ஆகின்றேன்? எனவே இவள் தூது விடுதல் பயன் என்றவாறு.



(ப - உ.)
நினைத்தவானே
என்பது.—யான் அவரோடு புணர்ந்த நாட்களை உயிர் வாழ்கின்றேன் அல்லது யாதனான் உளேனாய் வாழ்கின்றேன்? என்றவாறு.

இது தலைமகன் தலையளியை நினைத்து ஆற்றாள் ஆயின தலைமகளை இவ்வாறு நினைத்து இரங்கல் உயிர்க்கு இறுதியாகும் என்ற தோழிக்கு அவள் கூறியது. (5)
பரி. பா - ம். 'னென்னுளேன்'.

கா. 6. ப. 3.

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

(கா - உ.) என்பது.—தோழீ! அவர் நம்மை இப்பொழுது சிறிது நினைப்பவர் போன்று எடுத்துப் பின்னும் நினையார் ஆயினர்

போலும்; என்னை காரணம் எனின், தும்மலானது என் முகத்திற்கு ஆகாதது வருமது போலத் தோன்றிப் பின் உள்ளடங்கி விடும் என்ற

வாறு.

(ப - உ.) என்பது.—அவர் நம்மை நினைப்பார்

போன்று நினை யார் கொல்லோ : தோன்றுவது
போன்று கெடா நின்றது தும்மல் என்றவாறு.

தலைமகள் உலகத்துப் பெண்டிராய் உள்ளார் கூறுவது ஒன்றை
ரண்டுக் கூறினள். தும்மல் இவ்வாறு செய்தலான் நினைப்பாரைப்
போன்று நினையாராக வேண்டுமென்று தோழிக்குக் கூறியது. (6)

கா. 7.

ப. 2.

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.
தென்னெஞ்சத்

(கா - உ.) என்பது.—தோழீ! இக்காலம் அவர் நெஞ்சகத்து
யாமும் உளேம் போலும்: என்னெனின் என் நெஞ்சத்து எப்பொழு
தும் அவர் உளரா யிருக்கின்றனர்; இஃது என்ன வியப்போ என்ற
வாறு.

(ப - உ.) என்பது.—அவர் நெஞ்சத்து யாமும் உளேம்
கொல்லோ; எம்முடைய நெஞ்சின்கண் எப்பொழுதும் தாம் உள
ராகா நின்றார் என்றவாறு.

ஓஒ என்பது மிகுதிப் பொருளின்கண் வந்தது ஆதலான், எப்
பொழுதும் என்று பொருள் ஆயிற்று. அவரும் முன்பு நம்மோடு
ஒத்த அன்பினர் ஆதலானே எம்மைப்போல அவரும் நினைப்பரோ
என்று தோழியொடு சொல்லியது (7)

கா. 8. ப. 1.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

(கா-உ.) என்பது.—தோழீ! யான் அவரோடு கழிய நுகர்ந்து களியாது இங்ஙனம் உள்ளிச் செல்லினும் செல்லாப் பெருங்களி செய்தலால் உண்டாற் களிதா லின்றி உள்ளினுற் கள்ளினும் இக்காமம் பெரிதும் இனிது என்றவாறு.

களிதா - வில்லாத

(ப-உ.) என்பது.—தம்மால் காதலிக்கப்பட்டாரை நினைத்தாலும் நீங்காத பெருங்களிப்பைத் தருதலால் கள்ளினும் மிக்க காமம் இனிது என்றவாறு.

நினைவு மகிழ்ச்சியைத் தாரா நின்றமையால் என் மனம் காதலை ஒழிவு இன்றி நினையா நின்றது என்று தோழிக்குக் கூறியது. (8) கா. 9.

ப. 4.

தந்நெஞ்சத் தென்னைக் கடிகொண்டார்
லென்னெஞ்ச தோவா வரல்.

நாணுர்கொ

(கா - உ.) என்பது.—தமது நெஞ்சத்து யான் வாராமல் காவல் கொண்டு போனவர், மற்று என் நெஞ்சத்து ஒழிவிலராய் வருகின்ற

இதனை நமக்கு இது தகாது என நாணுரோ தான்! என்றவாறு. கொண்டார் என்பது காந்து போனுரென்றது. கடிந்து போனுர்

கடி
என்
றும் ஆம்.

(ப - உ.) என்பது.—தமது நெஞ்சின்கண் யாம் செல்லாமல் காவல் கொண்டவர், எமது நெஞ்சின்கண் ஒழியாதே வருதலை நாணுரோ! என்றவாறு.

இது நினையாரோ? நினைப்பாரோ?
நினையார் என்று தெளிந்து கூறியது.

என்று ஐயப்பட்ட தலைமகள்
(9)

பரி.
பா - ம். ' எம்மைக்கடி '. ' எந்நெஞ்சத் தோவார் '.

கா. 10.*

ப. 10.

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

---

*இக்குறளை மணக்குடவர், பரிப்பெருமாள், பரிமேலழகர் ஆகிய
மூவுரைகாரரும் தனிப்படர்மிகுதி என்ற அதிகாரத்தில் சேர்த்துள்ளனர்.

மூன் ஈண்டு

“விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி” என்ற குறளை அம்மூவரும்

கொண்டுள்ளனர்.



(கா - உ.) என்பது.—தோழீ! தாம் எப்பொழுதும் நினைந்து விரும்புபவர் ஆகிய தலைவரைப் பெருக்காலம் மற்று அவரிடத்து இன்று ஓர் இன்சொல் பெறுதலும் இன்றி வையத்து உயிர் வாழ்வார் ஆகிய மகளிர் போல இவ்வுலகத்து வன்கண்மை யுடையார் மற்று யாரும் இல்லை என்றவாறு.

(ப - உ.) என்பது.—தம் காதலரிடத்து நின்றுவரும் இனிய சொற்களைக் கேளாது உயிர் வாழ்வாரைப்போல வன்கண்மை உடை யார் இவ்வுலகத்து இல்லை என்றவாறு.

தூது விடுதல் குறிப்பினால் தோழிக்குச் சொல்லியது. (10)

(கா - உ.) இங்ஙனம் தலைமகனை உடைய தலைமகளது கனவு நிலை உரைக்கின்றது மேலை அதிகாரம்.

## 14. கனவு நிலையுரைத்தல்.

(ப - உ.) கனவுநிலை உரைத்தலாவது கனவினது நிலைமையைச் சொல்லுதல். காதலன் நினைவினாலே வருத்தமுற்ற துன்பம் கூறி னாள் அந்நினைவினால் இக்கனவு நிலையுரைத்தல் கூறுகின்றமையின் இது பின் கூறப்பட்டது. ஒழிவின்றி நினைப்பார்க்கு உறக்க மில்லை யாகும் ; உறங்கிலர் ஆயின் அவரது செய்தியை மறவாது நினைப்பர் ஆதலான் அதன்பின் கூறப்பட்டது. தலைமகனை நினைத்தல் கனவின் நிலைமை என்னும் இரண்டினுள்ளும் இவட்குக் கனவு நிலையாகிய உறக் கம் இல்லையென்று கொள்க.

கா. 1.

ப. 3.
கனவினு னுண்டாகுங் காமம்
னல்காரை நாடித் தரற்கு

நனவினு

(கா - உ.) என்பது.—நெஞ்சே ! கனவினிடத்து நல்காது பிரிந்த நம் காதலரைத் தேடிக் கொணர்ந்து தருதற்குக் கனவின் கண் ணும் எனக்கு உண்டாகா நின்றது ஓர் ஆசை என்றவாறு.

(ப - உ.) என்பது.—கனவின்கண் நமக்கு அருளாதவரைக் கனவு தேடித் தருதலாற் காமம் அதன் கண்ணே உண்டாம் என்றவாறு.

இது கண்டாற் பயன் என்னை ?
தோழிக்குத் தலைமகள் கூறியது.

காம நுகர்ச்சி இல்லை என்ற
(1)

14. கனவு நிலையுரைத்தல்

கா. 2.
ப. 1.

கயலுண்கண் யாமிரப்பத் துஞ்சிற் கரந்தார்க்
குயலுண்மை சாற்றுவென் மன்.

(கா - உ.) என்பது.—நீரோடு வாழும் கயல்போல நீந்தும் எம் சுழும் கண்ணிணை ஒருகால் எம் பொருட்டாகவே நீர் துஞ்ச வேண்டும் என்று யாம் இரந்துகொள்ள அருளித் துஞ்சுமாயின், சொல்லாது இகந்த நம் காதலர்க்கு யாம் உய்தலுடைமைக்கு வேண்டும் உபாயத்தைச் சொல்லிக் கொள்வம் இனி நெஞ்சே! என்றவாறு.

(ப - உ.) என்பது.—என்னுடைய கயல்போலும் உண் கண் பான் வேண்டிக்கொள்ள உறங்குமாயின், நம்மோடு கலந்தார்க்கு நாம் உய்தலுண்மையைச் சொல்லுவேம்; உறங்குகின்றது இல்லை என்றவாறு.

மன் - ஒழியிசையின்கண் வந்தது. கயலுண்கண் - பிறழ்ச்சியுடைய கண். ஈண்டு எப்பொழுதும் காதலர் வரவு பார்த்திருக்கின்ற தடுமாற்றத்தை உடைத்தாகிய கண் என்றவாறு ஆயிற்று. உறங்க வேணும் என்ற தோழிக்குக் கண்கள் நீயும் யானும் வேண்டிக் கொள்ள உறங்குமாயின் இத்துணை நாள் சாவாது இருந்தோம் என்று நம் காதலர்க்கு உரைக்கலாயிற்று என்று தலைமகள் கூறியது. (2)

பரி. பா - ம். 'கலந்தார்க்'.

கா. 3.
ப. 5.

துஞ்சுங்காற் றோண்மேல ராகி
னெஞ்சத்தா ராவர் விரைந்து.

விழிக்குங்கா

(கா - உ.) என்பது.—தோழி! ஒருகால் இங்ஙனம் கண் துஞ்சப் பெற்றேனாயின் மற்று அப்பொழுது என் தோள்மேலவராய், இனி விழிக்குங் காலத்து அப்பொழுது என் நெஞ்சத்தார் ஆவர் விரைந்து எனவே.................................

(ப - உ.) என்பது.—உறங்கும் காலத்துத் தோளின் மேலாகி, விழித்த காலத்து விரைந்து மனத்தின் கண்ணே புகுதுவர் காதலர் என்றவாறு.

நீ உறக்கம் நீங்கினால் யாண்டுப் போவர் என்றால் கூறிய தோழிக்குத் தலைமகள் கூறியது.

நகைக் குறிப்பி
(3)

கா. 4. ப. 2.

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலு முண்டென் னுயிர்.

9

(கா - உ.) என்பது,—தோழீ! நனவின்கண் நல்காது பிரிந்தவரைக் கனவின்கண் ஒரு காலத்துக் காணப் பெறுதலுமேயாக உளதாயிருக்கின்றது எனது உயிர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நனவின்கண் நமக்கு அருளாதவரைக் கனவின்கண் காண்டலானே உண்டாகா நின்றது என் உயிர்; இல்லையாகில் உயிர் உண்டாதற்குக் காரணம் உண்டோ? என்றது உறங்கினுற் காணலாகுமோ என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (4)

பரி. பா - ம். 'காண்டலின்'.

கா. 5.

ப. 4.

நனவினுற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

(கா - உ.) என்பது.—தோழீ! நம் காதலரை நனவிடத்துக் கண்டால் மற்று அதுவும் அவ்விடத்தே இனிது ஆகும்; இனி இக்கனவுதானும் அவ்விடத்து அவரைக் கண்டபொழுதே பெரிதும் இனிது ஆகும் என்றதனல் இங்ஙனம் ஆயினும் எய்தப்பெறின் யாதும் வேற்றுமை இன்றியாமாறு அறிதற்கு அரிது என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நனவின்கண் கண்ட இன்பமும் அப்பொழுதிற்கு இன்பம் ஆவதுபோலக் கனவின்கட் கண்ட இன்பமும் அப்பொழுதைக்கு இன்பம் ஆம் என்றவாறு. கனவிற் புணர்ச்சி இன்பம் தருமோ என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (5)

நனவினு னல்காக் கொடியார் கனவினு
னென்னெம்மைப் பீழிப் பது.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நனவின்கண் நம்மை நன்கு அளித்தருளாத கொடியவர் வருந்தி யாம் கண் துயிலப்பெற்றுத் துயிலிற் கனவு எய்தியும் மற்று அவ்விடத்தும் கலந்து இன்புறாது எம்மை இடர் உறுவிக்கின்றது என்னே? எனவே அவ்விடத்துக் கண்ட மாத்திரமே அல்லது கலந்து இன்புறாத கடுந்துயர்
ளுள் என்பது பொருள் என்றவாறு.

நினைந்து ஆற்றுள் ஆயி (ப -
உடையார்

உ.) என்பது.—நனவின்கண்
கனவின்கண் வந்து எம்மைத்

அருளாத கொடுமையை
துன்பம் உறுத்துவது எற்
றுகரு என்றவாறு.

இது தலைமகனைக் கனவகத்துக் கண்டு
நினைத்து ஊடல் உற்றுழி அதனை உணர்த்திக்

முன்பு நல்காமையை
கூடுவதன் முன்னம்.

## 14. கனவு நிலையுரைத்தல்

67

விழித்த
என்றது

தலைமகள் ஆற்றாமையால் தோழிக்குக் கூறியது.
அவன் கூந்தலும் அல்குலும் பற்றி நலிந்ததனை.

பிழை
(6)

கா. 7.

ப. 10.

காதலர் தூதொடு வந்த கனவிற்கி
ங்
யாதுகொல் செய்வென் விருந்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நெருநலொடு கனவு என்கண் வருகின்றபொழுது எம் காதலர் வாவிட்ட தூதொடும் வந்து தோன்றியது: அதனால் மற்று இப்பேருதவி செய்த கனவிற்கு யான் விருந்து உபசாரம் செய்யும் இடத்து யாது ஒன்று யாது ஒன்று செய்தால் தணிவது அறிகிலேன்? என்றவாறு.

(ப - உ.) என்பது.—நம் காதலர் வாவிட்ட தூதரோடே வந்த கனவினுக்கு யாது செய்வேம் விருந்து? என்றவாறு.

இது தலைமகள் ஆற்றுதற் பொருட்டுக் காதலர் வாரா நின்றார் என்று தூதர்வரக் கனாக்கண்டேன் என்று தோழி சொல்லியது. (7)

பரி. பா - ம். 'யாதுசெய் வேன்கொல்'.

கா. 8.

ப. 8.

நனவினா னந்நீத்தா ரென்ப கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நம்
யகன்றனர் என்று நனவின்கண் அவரைக்

காதலர் நம்மைக் கை

கொடுமை கூறுநிற்பர் ;
இதற்கு என்னை காரணம்? கனவிடத்து யான் என் காதலரைக் காண்பென் என்பதனால் அப்பொழுது தாமும் அவரைக் கண்டு கொள்ளாரோ இவ்வூரவர் ஆகிய மகளிர் : எனவே இனி அவரைக் கொடுமை கூறுகின்றது என்னை என்றவாறு.

(ப - உ.) என்பது.—இவ்வூரார் நனவின் கண்ணே நம்மை நீங்கி அகன்றார் என்று அவரைக் கொடுமை கூறுநிற்பர். அவரைக் கனவின்கண் காணார்களோ? என்றவாறு.

இவ்வேறுபாடு அலர் ஆயிற்று என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (8)

கா. 9.

ப. 7.

நனவினா னல்காமை நோவர்
கனவினாற்
காதலர்க் காணா தவர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நம்
காதலர் நம்மை நன
விடத்து வந்து நல்காமையைக் குறித்து இவள்
மாட்டு அருளும் அன

பும் இலர் என்று அங்ஙனம் கொந்து உரைப்பர்மார் எனின், இங்ஙனம் கனவிடைப் பிரிந்த தத்தம் காதலரைக் கனவிடைக் கண்டு இன்புறுதவர்: எனவே அங்ஙனம் கூறிய அயலார் கேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லுவாளாய்ச் சொல்லினாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—கனவின்கண் வந்து நல்காத காதலரை நோவா நிற்பர், அவரைக் கனவின்கண் காணாதவர்; நோவார் என்றவாறு.

காண்பார் ஆயின்

இது

தோழிக்கு,

தலைமகள் ஆற்றாமை கண்டு தலைமகனை இயற்பழித்த அயலார்மேல் வைத்துத் தலைமகள் கூறியது. (9)

பரி. பா - ம். 'நல்காரை'.

கா. 10.

ப. 9.

நனவென வொன்றில்லை
காதலர் நீங்கலர் மன்.

யாயிற் கனவினாற்

(கா - உ.) என்பது—தோழீ! கனவெனப் பெயர்பெற்றது ஒரு காலம் வேறு ஒன்று இல்லையாயின், இக்கனவிடை நம் காதலர் ஒரு பொழுதும் நம்மை நீங்குவது இலர் மிகவும்: எனவே கனவின்கண் தனது பிரிவாற்றுமை தோன்றக் கூறினள்

என்றவாறு.

(ப - உ.)
வின்கண் வந்த

என்பது.—கனவு என்று ஒன்று இல்லைஆயின்,
காதலர் பிரிதல் இல்லை என்றவாறு.

கன

வைப்

யாங்கள் எல்லாம் காணுது ஒழியவும் நீ கண்டாய் ஆயின்,
பிரியவிட்டது என்னை என்ற தோழிக்குத் தலைமகள்

அவ
கூறி
யது.
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் காவற்குப் பிரிந்த தலைமகன் தூது கண்டாயினும் தானே யாயினும் வந்து எய்தித் தலையளித்துடன் வாழும் தன்மை காட்டி மற்று இதன் பின்னரே இவ்வாறு அன்றித் தலைமகன் பொருள்வயிற் பிரிந்த இடத்துத் தலைமகளது ஆற்றுமை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 15. பொழுது கண்டிரங்கல்.

(ப - உ) பொழுதுகண்டு இரங்கல் ஆவது மாலைப்பொழுது கண்டு தலைமகள் வருந்துதல். ஏனைப்பொழுது வருத்தம் இலவோ எனின், பிரியப்பட்டார்க்கு எல்லாக் காலமும் வருத்தம் உள ஆயினும் விடியலும் நன்பகலும் போலாது மாலைப்பொழுது வருத்தம் மிகுதலான் இது கூறப்பட்டது. என்னை வருத்தம் மிகுமாறு எனின் புள்ளும் மாவும் விடியலும் நன்பகலும் தந்தம் சேக்கையினின்று நீங்கி அந்திக்காலம் வந்துசேரும் : அவையிற்றைக் கண்டும் காதலர்

## 15. பொழுது கண்டிரங்கல்

69

நம்மை உள்ளுகின்றிலர் என்றும் மைந்தரும் மகளிரும் விடியலும் நன்பகலும் அறத்திலும் பொருளினும் முயன்று அந்திக் காலத்தில் தம்மிற் கூடி இன்பம் நுகர்வது கண்டு யாம் இவ்வாறு நுகரப் பெறுகிலோம் என்றும் நினைத்தலான் வருத்தம் மிகும் என்க. நடுநாள் யாமத்தும் துன்பம் உறும் அன்றே; அதுவும் கூறவேண்டாவோ எனின், அக்காலத்து வரும் துன்பமும் இதனின் மிகுதியின்மையின் வேறு கூறாராயினர். இது நினைந்தவர் புலம்பலின் பின் கூறற்பாலது. கனவுநிலையும் சோச்சொல்ல வேண்டுதலின் இரண்டு சொல்லும் அவாரகக் கொண்டு முன் கூறவேண்டும் என்பதனால் நினைவொடு கூடிய கனவை முற்கூறி அதன்பின் கூறினார் என்று கொள்ளப்படும்.

கா. 1. ப. 5.

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யாம்

உறுகின்ற இக்காம
நோயானது காலை வந்து அரும்பிப் பகல்பொழுது ஆகிய அளவு இறந்த நாழிகை எல்லாம் பூ வடிவுகொண்டு விம்மி மணம் பொதிந்து மற்று இம்மாலைப் பொழுதின்கண் வந்து மலர் ஆகிற்கும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—இக்காமநோய் ஆகிய பூ விடியற்காலத்தே அரும்பிப் பகற்பொழுது எல்லாம் முகிழ்த்து மாலைக்காலத்தே மலரா நின்றது என்றவாறு

மாலையால் வருத்தம் உற்ற தலைமகள் வேறுபாடு கண்டு விடியலும் நன்பகலும் ஆற்றி இப்பொழுது வேறுபட்டாய்; இதற்குக் காரணம் என் என்ற தோழிக்குத் தலைமகள் காரணம் கூறியது. (1)

கா. 2 .

ப. 2.

மாலைநீ யல்லை மணந்தா
ருயிருண் ணும்
வேலைநீ வாழி பொழுது.

(கா - உ.) என்பது.—இக்காலத்து எம்வயின் வந்துற்ற மாலைப் பொழுதே! நீ பண்டுபோலக் காலை கழிந்தால் வரும் மாலையாய் வந்தாய் அல்லை; மற்று நின்னோடு கூடினர் ஆகிய எம்மைப் போலத் தனித்து இருந்தாரை உயிர் பருகுவது ஒரு கூற்று நீ என்று கூறினாள் என்றவாறு.

(ப-உ.) என்பது —பொழுதே! நீ தட்பம் உடையை அன்மையான் மாலை அல்லை. முன்பு கூடிப் பிரியப்பட்டார் உயிரை உண்பது ஒருவேல் ஆகுவை என்றவாறு.

கெடுவாயாக என்னுதல் குறிப்புமொழி.
கண்டு தலைமகள் ஆற்றாமையால் கூறியது.

இது மாலைப்பொழுது
(2)



கா. 3.
ப. 2.

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நம் காதலர் இன்றி முன்னமே தனித்துயர் உறுகின்ற இடத்தே பின்னரும் இப் மாலையானது அடுகளத்து உற்ற பகைவரைப்போல வாராநின்றது: எனவே இதற்கு யாம் உய்யுமாறு என்னை? என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—காதலர் இல்லாத விடத்து இம்மாலைப் போது கொலைக்களத்துப் பகைவரைப்போல வரும் என்றவாறு.

இது மாலைக் காலத்து நோய்மிகுதல் என்னை காரணம் கூறப்பட்டது.

என்ற தோழிக்குக்
(3) கா. 4.

ப. 10.

பனியரும்பிப் பைதல்கொண் மாலை

துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

(கா - உ.) என்பது.—தன் மேனிமேல் நுண்பனி அரும்பி மயங்கு உருவாகிய பைத்தன்மைகொண்டு மற்று இம்மாலையானது யாங்கும் ஈண்டு அடிக்கொண்டு பின்னும் இத்துன்பம் நமக்கு யாமம் எல்லாம் வளர்ந்து எடுப்பதற்கு வந்து எய்தா நின்றது; மற்று என்னை செய்வது? என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெருநல் எனக்கு நடுக்கத்தை உண்டாக்கித் தானும் புன்மைகொண்டிருந்த மாலைப்பொழுது இன்றும் எனக்கு வெறுப்புத் தோற்றி வருத்தம் மிகும்படியாக வாராநின்றது என்றவாறு.

இது முன்னை ஞான்று மாலையால் அடர்ப்புண்ட பிற்றை ஞான்று மாலை வருவது கண்டு கூறியது.

தலைமகள்

(4)

கா. 5.

ப. 4.

காலைக்குச் செய்தநன் றென்கொ

லெவன்கொல்யா

மாலைக்குச் செய்த பகை.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! மற்று யாம் காலைக்குச் செய்த நன்மைதான் என் கொலோ? அஃது அன்றி மற்று இம்மாலைக்கு யாம் செய்த பகைதான் என் கொலோ? எனத் தன் மாட்டு ஒரு பிழை செய்யாதவை பேரிடர் செய்கின்ற இது பெரும்பாவி என்றவாறு.

(ப - உ.) என்பது.—அவர் பிரிவதன் முன்னம் பிரிவர் என்னும் அச்சத்தைத் தந்த காலைப்பொழுது பிரிந்த பின்பு வருத்தாது ஒழி



தற்கு யான் செய்த நன்மை யாதோ? அவரோடு இன்பம் நுகர்தற்கு உட்பாகி யிருந்த மாலைப்பொழுது வருத்துதற்கு யான் செய்த பகைமை யாதோ? என்றவாறு.

இது மாலையது பண்பின்மையை உட்கொண்டு

யது.

தலைமகள் கூறி

(5)

கா. 6. ப. 9.

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

(கா - உ.) என்பது.—தோழீ! பெரும்பகல் எல்லாம் வருந்தி ஆற்றிய என் மனமானது வெண்மையும் கருமையும் வேற்றுமை செய்யும் பகலும் இரவும்போல் அன்றி நிறம் மயங்கு உருபிற்று ஆகிய மாலையானது இன்னணம் வந்து ஆர்க்கும் நோக்குத் தன் பதியினுள் தணிந்து நில்லாது தடுமாறிச் சாலத் துயர் உழக்கும் என் நெஞ்சான்து; மற்று அதனை அறியாது நீ ஆற்றுகில்லை என்று என்னை இடித்துச் சொல்லுவது என்னை? என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—என் மனன் நிலைகலங்கித் துன்பம் உறுநிற்கும், மயக்கத்தை உடைத்தாகி மாலைப்பொழுது வருங்காலம் இப் பதி எல்லாம் மயங்கித் துன்பம் உறுநிற்கும்.

மதி என்பதனை முன்னே கூட்டுக. மதி - மனம். அறிவில்லாதாரைப்போல மயங்குதல் தக்கது அன்று; நமக்கு ஆற்றியிருத்தல் கடன் என்ற தோழிக்குத் தன் குறிப்பு இன்றியும் இம்மாலையைக் கண்டபொழுதே என் மனம் மயங்கும் என்று தலைமகள் கூறியது.(6)

கா. 7. ப. 6.

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

(கா - உ.) என்பது.—மாலாய்! நீ புன்கண்மையை உடையையாய் அறப்பொலிவு அழிந்து இராநின்றாய்; மருண்மாலாய் நீ! வாழ்வாயாக; நீ செய்கின்றது எம் உறுகேள்போல அருட்கண் இன்றி வன்கண்மை உடையது ஒன்று ஆகின்றது நின் துணையும்; எனவே தன்மேனி பொலிவு அழிந்திட்ட புல்லிமை எல்லாம் புலப்படச் சொல்லினள் தன் மேலிட்டு என்றவாறு. உலகத்து மாலை என்று இங்ஙனம் பெண்மைப்பெயர் வழக்கம் உண்டாகலானும் சந்தியாதேவி என்று வடசொல் இலக்கணம் உண்டாகலானும் இதனைப் பெண்பெயர் கொடுத்துக் கூறினர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—மயங்கின மாலைப்பொழுதே! நீ வாழ்வாயாக: நீ புன்கண்மை யுடையையாய் இருந்தாய்: எம்முடைய கேளிரைப்போல வன்கண்மையை உடைத்தோ நின் துணையும் என்றவாறு.

இது தன்னுட்கையாறு எய்திடு கிளவி.

(1)

கா. 8.

ப. 2.

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

(கா - உ.) என்பது.—தோழீ! மாலைப்பொழுது ஆனது எம்மை இப்படி இடர்செய்தலை எம்மைக் கைகலந்த காதலர் கையகலாது உடன்வாழ் காலத்துச் சிறிதும் யான் அறிந்ததோ இல்லேன் என்றாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—மாலைப்பொழுது நோய் செய்தலை என்னோடு கூடினவர் பிரியாத காலத்தே அறியப் பெற்றிலேன்; அறிந்தேனாயின் அது நோய் செய்யும் என்று கூறலாம் என்றவாறு.

இது மாலையாலே வருத்தம் உற்ற தலைமகள் தலைமகனை நினைந்து கூறியது.

(௨)

கா. 9.

ப. 3.

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

(கா - உ.) என்பது.—இனி இவ்விடத்து வரப்புகுகின்ற வடவைத் தீப்போலும் மாலைப்பொழுதுக்குத் தூதாகி வந்து நம்மைக் கொல்லுங் கருவியானது அம்மாலை தன் வரவு அறிந்தும் சூழாது வரும் ஆயன் விளிக்குங் குழற்கருவிபோலும்: எனவே இனி அக் குழல்விளி கேட்பினும் ஆற்றமாட்டேன்; அதனால் அம்மாலைப் பொழுது வரில் என் செய்வல் என்று இங்ஙனம் கூறினாள் தலைமகள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெருப்பை ஒத்த இம்மாலைப் பொழுதுக்கு முன்பு தூதும் ஆகி வந்து இப்பொழுது கொல்லுதற்குப் படையும் ஆகி வரவல்லது ஆயன் ஊதும் குழலோ? என்றவாறு.

அவர் பிரிவதன்முன் இன்பம் நுகர்தற்குக் காலம் பார்த்து இருக்குழி மாலை வருகின்றது என்று தூதாய் வருதலின் தூது என்றாள். இப்பொழுது வருத்துதலின் படை என்றாள். அழல்போலும் மாலை என்றது பிரிந்த காலத்துக் கொடுமை செய்தலான் அதற்குக் குணம் ஆகக் கூறினாள்: இது மாலையொடு வந்த குழலும் கொடிது என்று கூறியது. (9)

16. உறுப்பு நலனழிதல்:

73 கா. 10.

ப. 5.

பொருண்மாலை யாளரை யுள்ளி
மாயுமென் மாயா வுயிர்.

மருண்மாலை

(கா - உ.) என்பது.—தோழீ! நம்மை இனிது ஆளும் முறைமை அன்றித் தான் தெளித்த சொல் தேராது பொருள் வளர்த்தலை ஓர் இயல்பாக ஆண்டு அகன்றவரை நினைந்து நினைந்து இம்மருண் மாலைப்

பொழுதுடனே இனி மாய்வதுபோலும் என் மாயாத உயிர் : எனவே முன்னமும் மாயாதிருந்து வருந்தும் உயிர் வாழ்க்கை தன்னைப் பெரிது முனிந்து உரைத்தாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—பொருள் தேடுதலைச் செய்தலே தமக்கு இயல்பாக உடையவரை நினைத்து மயங்கின மாலைப் பொழுதிலே என தாய்ச் சாவ மாட்டாத உயிர் மெலியா நின்றது என்றவாறு.

மாலையால் அடர்ப்புண்ட தலைமகள் தலைமகன் அன்பும் இலன் என்று நினைத்துத் தன்னுள்ளே சொல்லியது.

அறனும் (கா - உ.) இன்னணம்
(10) தான் அடைந்த வேந்தர்க்கு

ஒருவாற்றான் வந்து எய்திய தலைமகன்
ஒரு பகைவந்து உற்ற இடத்து, மற்று

அதற்குப் பிரியும் அன்றே : அவ்விடத்துத்

ருமை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

தலைமகள் பிரிவு ஆற்

## 16. உறுப்பு நலனழிதல்.

(ப - உ.) உறுப்பு நலன் அழிதலாவது தலைமகளது உறுப்புக்கள் நலன் அழிந்தமை கூறியது. காதல் மிக்கு இரங்குவார் அக்காதலை அயலார் அறியாமல் அடக்கின காலத்து வெம்மையுற்ற கொடி போல அவரது உறுப்பு வாடுதலான் இது பொழுதுகண்டு இரங்கலின் பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 5.

கொடியார் கொடுமை யுரைக்குந்
தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

(கா - உ.) என்பது.—தோழீ! நின்னிற்
பிரியேன்: பிரியின்
ஆற்றேன் என்று தாம் முன்னம் உரைத்து மற்று அதனைத் தெரியா
ராய் என்னின் நீங்கிப் பிரிந்தவர் சாலக்கொடியர்
அன்றே; மற்று
அவர் கொடுமையை யான் மறைப்பவும், இவை பிறர்க்கு இன்னர்
என்று உரைக்கும்; எவை எனின் (நிலை யெய்தாது ஆடும்) தொடியும்,

தொல்லை அழகு பொலிவு அழிய வாடிய தோளும்; எனவே யான் வருந்தி ஆற்றவும் இவை சாற்றுமாயின் என்னை செய்வது? என்ற வாறு.





(ப - உ.) என்பது.—கொடியாரது கொடுமையைச் சொல்லா நின்றன, வளையோடு கூடப் பழையவாகிய அழகினை இழந்த தோள் களும் என்றவாறு.

தலைமகள் கூறிய சொற்கேட்டு யான் முன்பே தோள் கண்டு அறிந்தேன் அவர் கொடியர் ஆதலை என்று தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தலைமகனை இயற்பழித்துத் தோழி கூறியது. (1)

கா. 2: ப. 9.

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! அவர் இவளைப் பிரிவதன் முன்னமே தமது அன்பினான் அருளி முயங்குமிடத்து அதற்கு எதிர் முயங்கிய கைகளைப் புலந்தார்போல் நயந்து ஊக்கினாராகப் பசந்தது இப்பைந்தொடிப் பேதையாளது நுதல்; எனவே இன்று இவள் ஆற்றாமல் தளர்தற்குச் சொல்லவேண்டுமோ என்று இவள்தான் ஆற்றாளாயினள் என்று தோழி தன் நெஞ்சிற்குச் சொல்லுவாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—யான் பிரிவதாக நினைத்து, அவளை முயங்கிய கைகளை நீக்கினேன் : அதனை அறிந்து பசுத்த தொடியினையுடைய பேதையது நுதல் பசந்தது என்றவாறு. (2)

கா. 3. ப. 1.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

(கா - உ.) என்பது.—கேளாய் நாயகி! இன்பம் அனைத்தும் நீங்கித் துன்பம் ஒன்றும் நமக்கு நிலை நிற்பதாகத் துணிந்து, அருள் நீங்கிச் சேணிடைச் சென்றவரை நினைந்து வருந்திச் சேறலான், இன்று நறுவிய குவளைச் செவ்விய மலரினை நின் கண்ணிணை தாம் பெரிதும் நாணிற்று ; எனவே பண்டு அவை நாணிக் கழியுமாறு கொழுவிய நின் சேயரிக்கண் இங்ஙனம் பொலிவு அழியப் போயினார் கொடியர் என்று இயற்பழித்தனள் தோழி என்றவாறு.

(ப - உ.) என்பது.—நமக்குத் துன்பம் ஒழிய வேண்டி நெடு நெறிக்கண் சென்றாரை நினைத்து நறுவிய பூக்களைக் கண்டு நாணு நின்ற கண்கள் என்றவாறு.

பலகால் அழுதலின் நிறம் கெட்டது என்றவாறு ஆயிற்று. வரைந்து கோடற்குப் பொருள் தேடி வருகின்றேன் என்று பிரிந்த தலைமகனை நினைந்து ஆற்றாளாய்த் தலைமகள் தனது கண் பொலிவு அழிந்தது என்று கூறியது. (3)

16. உறுப்பு நலனழிதல் 75

கா. 4.

ப. 8.

முயக்கிடைத் தண்வளி போழ்ப்பப்
பேதை பெருமழைக் கண்.

பசப்புற்ற

(கா - உ.) என்பது.—தோழீ ! அவர் என்றும் எமக்கு இனியர் ஆகலின், தாம் என்னை இறுக முயங்கிய முயக்கத்திடையே இடம் பார்த்துத் தண்ணென்றதோர் சிறுதென்றல் கொழுந்து ஊடுபோகப் பசப்பு உற்றன ; எனது அழுது ஒழியாக் கண் எதும் அறியாத வெறும் பேதை. எனவே அவரும் அன்புடையார் : யானும் ஆற்றுவல் : இவை அன்றும் இன்றும் தமது அறியாமையின் பசந்து அழும் என்றவாறு.

(ப . உ.) என்பது.—யான் பிரிவதாக நினைத்து முயக்கத்தின் கண்ணே எனது உடம்பை அகற்ற அவ்விடைச் சிறுகாற்று ஊடு அறுத்தலானே எனது நீக்கத்தை அறிந்து பேதையுடைய பெருத்த குளிர்ந்த கண்கள் பசப்பு உற்றன என்றவாறு.

இது முதலாக மூன்று குறள் தலைமகன் கூற்று. இவையிற் றின் கருத்துப் போக்கிச் சொல்லுதும். (4)

பரி. பா - ம். ‘ போழப் ’.

கா. 5.

ப. 2.

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

(கா - உ.) என்பது.—தோழீ ! நம்வயின்

நயம்பெரிது உடைய
வரை நல்காமை படைத்துச் சொல்லுவன போலும்: இங்ஙனம் பசந்து பண்டை நலன் அழிந்து கலுழ்ந்து நீர் சோரும் என் கண்; எனவே அவரைத் தான் இயற்பட மொழிந்தமை பொருள் ஆயிற்று என்றவாறு.

(ப - உ.) என்பது.—முன்பு நம்மை விரும்பினவர் நமக்கு அருளாமையைப் பிறர்க்குச் சொல்லுவன போலாநின்றன, பசப்பு உற்று நீர் சொரிகின்ற கண்கள் என்றவாறு.

இது தலைமகள் ஆற்றாமை கண்டு இக்கண்ணின் நீர் அலர் கின்றது என்று தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தோழி

ஆகா
கூறி
யது.

(5) கா. 6.

ப. 3.

தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

(கா - உ.) என்பது.—தோழீ! நம்மை அவர் இன்று நாளிடையிட்டு நின்ற பிரிவை யாம் அதனை மறைப்பவும் தாம் அது பெரிதும் அறிவிப்ப போலும்: யாவை எனில் இன்றுபோல் என்றும் இராதே அவர் மணந்த நாள் வீங்கிய தோள்களானவை. எனவே இதனுலும் இயற்பட மொழிந்தமை பொருள் ஆயிற்று என்றவாறு.

(ப - உ.) என்பது.—அவர் நீங்கினமையை மிகவும் பிறர்க்கு அறிவிப்பன போலாகின்றன அவர் கூடின நாள்களில் பூரித்த தோள்கள் என்றவாறு.

கருவியைக் கருத்தாவாகக் கூறினுள். பிரிவிடை ஆற்ருள் ஆகிய தலைமகள் தனது தோள் வாட்டம் உறக் கண்டு தோழிக்குச் சொல்லியது.

(6) கா. 7.

ப. 4.

பணை நீங்கப் பைந்தொடி சோருந்
தொல்கவின் வாடிய தோள்.

துணை நீங்கத்

(கா - உ.) என்பது.—பண்டு போல் இணை ஒத்து நில்லாது இன்று பசும்பணையானது வேறுபட்டு நிற்ப, மற்று இப்பசும்பொற் றொடிகளும் நட்பு ஒழிந்து நழுவுகின்றன என் காதல் துணை சிறிது கையகல இதனைத் தூற்றுவேம் அல்லம் என்றது தொல்லைக்கவின் வாடிய தோள்களானவை; எனவே இது செய்யத் தாமும் தமக்கு அடுத்த வினையும் திருவும் இழந்தமை கண்டு இன்புற்றாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—துணைவர் நீங்குதலானே பழைய அழகு இழந்த தோள்கள், பெருமை நீங்குதலானே பசுத்த வளைகளைக் கழல விடா நின்றன என்றவாறு.

பசுத்த வளை - மாகதத்தினால் செய்த வளை. வாடுதலே அன்றி மெலிவதுஞ் செய்யா நின்றது என்று தோழிக்குத் தலைமகள் கூறி ய து.

(7)

பரி. பா - ம். 'நீங்கி'.

கா. 8.

ப. 6.

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற ணொந்து.

(கா - உ.) என்பது.—தோழீ! இங்ஙனம் தொடியுடனே தோளும் கூட நெகிழ அதற்கு யான் உடம்பட்டிருப்பது என் எனின் என் மாட்டு அன்பு உடையவரைக் கொடியர் என்று இவை பிறர்க்கு உரைத்தலை உள்ளுள்ளே பெரிதும் நொந்து என்றவாறு.

(ப - உ.) என்பது. —வளையோடே தோள்கள்

பண்டு போல்

77

இறுகாது செகிழவும் நினக்குச் சொல்லாது
ரைக் கொடியர் என்று சொல்லுகின்றதற்கு

யானே நோவேன், அவ
நொந்து என்றவாறு.

இஃது ஆற்றுள் எனக் கவன்ற தோழிக்கு
படச் சொல்லியது

ஆற்றுவல் என்பது

(8)

பரி. பா - ம். 'நோவல்'.

. கா. 9.

ப. 7. பாடு பெறுதியோ நெஞ்சே
கொடியோர்க்கென்

வாடுதோட் பூச லுரைத்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! என் வாடுதோள் வருத்தம் கண்டு பலரும் அலேக்கின்ற வார்த்தை முன்னம் நமக்குக் கூறியரு ளாக் கொடியவர்க்கு நீ சென்று சொல்லி உற்றவிடத்து உதவும் நட் பாவது இது என்னும் பெருமையைப் பெறுதியோ? பெறுதி எனின் நமக்குப் பெரியதோர் புகழ் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெஞ்சே! இக்கொடுமை செய்தவர்க்கு எனது தோள் வாடுதலானே ஊரில் எழுந்த அலரைச் சென்று சொல்லி நீயும் நினது வாட்டம் நீங்கி அழகு பெறுவாயோ என்ற வாறு.

இது நீ அவர்பால் போகவேண்டும் என்று நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. நெஞ்சின் வலியழிதலும் கூறியவாறு ஆயிற்று (9)

கா. 10.

ப. 10.

கண்ணின் பசப்போ பருவர
லெய்தின்றே
யொண்ணுதல் செய்தன கண்டு.

(கா - உ.)
பசந்த பசப்புத்

என்பது.—தோழீ! அவர் பிரிவின்கண் என் கண் தான் பெரிதும் இடர் உறுகின்றதே காண்: அஃது

என்னே எனில், என்னது ஒள்ளிய
இழந்து ஒருங்கு பசப்பு ஊர்ந்தமை

என்றவாறு.
நுதலானது தனது ஒண்மை
கண்டு பொறுக்கல் ஆற்றாது

(ப - உ.) என்பது.—கண்ணில் உண்டாகிய
ஒள்ளிய நுதல் பசந்தது கண்டு என்றவாறு.

பசலை கலங்கிற்று,

இவை மூன்றினும் சொல்லியது யான் பிரிவதாக நினைத்து முயக்கத்தின் கண்ணே உடம்பை அகற்ற அதனை அறிந்து கண் பசந்தது: அதன்பின் முயங்கிக்கொண்டு கிடந்த கைகளை விடுவிக்க நுதல் பசந்தது. அவ்வளவே அன்றி நுதல் பசந்தபின்பு கண்ணின் பசலை போய் மற்றொன்று ஆம்படி ஆயிற்று ஆதலான் யான் செல்லும் அள



வும் ஆற்றுங்கொல்லோ என்று வினைமுற்றி மீண்ட பாகன் கேட்பச் சொல்லியவாறு.
தலைமகன் தேர்ப்

இவை அவர்வயின் விரும்பலின் பின்

கூறற்பாலது உறப்புலன் அழிந்தமை கூறிய
பருந்து விழுக்காடு.

ஆகலான் ஈண்டுச்சேரக் கூறப்பட்டன என்க.
(10)

பரி. பா - ம். 'செய்தது'.

(கா - உ.) இங்ஙனம் பிரிந்த தலைமகனை நினைந்து ஆற்றாள் ஆகிய தலைமகள் இன்னும் தன்னுறு துயரம் தோழிக்கு இவ்வாறு எடுத்து

உரைப்பின் இவள் தானும் பெரிது ஆற்றாள் ஆம் என்பதனால் தன் நெஞ்சொடு கிளக்கின்றமையின் அதன் பின்னரே இதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 17. நெஞ்சொடு கிளத்தல்

(ப - உ.) நெஞ்சொடு கிளத்தலாவது நெஞ்சு முன்னிலையாகத் தலைமகள் கூறியது. காதல் அடக்க மாட்டாதார் பிறர்க்குச் சொல்லுதற்கு நாணித் தம் நெஞ்சிற்குச் சொல்லி ஆற்றுதலான் அதன்பின் இது கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

யாம்
(கா - உ.) என்பது.—நல்வழி அறியும் நெஞ்சமே! ஒன்றோ அவர்வயின் உற்ற காமநோய்ப் பாரத்தைக் கைவிடுவாயாக; இனி ஒன்றோ இதனால் வரூஉம் அலர் நாணுகின்ற நாண் பாரத்தைக் கைவிடுவாயாதல்: அல்லது மற்று யான் இவ்விரண்டு பாரமும் கூடப் பொறுக்கல் ஆற்றேன் என்கண் என்றவாறு; எனவே கண

வன் மாட்டுக் காதலும் பிறர் மாட்டு நாணமும் பெண்டிர்க்கு இயல்பு ஆகலால் ஒழித்தற்கு அருமையின் உறுகின்ற உள்ளுறு துயரம் உணர்த்தியவாறு ஆயிற்று என அறிக.

(ப-உ.) என்பது.—எனக்கு நல்ல நெஞ்சே! ஒன்று காமத்தை விடுதல் வேண்டும்; ஒன்று நாணத்தை விடுதல் வேண்டும்: என்னால் அவ்விரண்டும் கூடப் பொறுத்தல் அரிது என்றவாறு.

இது பிரிவிடை ஆற்றாளாய்த் தலைமகன் இருந்துழிச் கருதிய தலைமகள் நாணம் தடுத்தமை கண்டு கூறியது.

செல்லக்
(1)

கா. 2.

ப. 2.

துன்னார் துறந்தாரை நெஞ்சே யுடையமா
லின்னு மிழத்துங் கவின்.

17. நெஞ்சோடு கிளத்தல் 79

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நமக்கு இன்றியமையாமை அறிந்தும் நம்மோடு கூடி வாழாருமாய்ப் பின்னை நினைந்து அருளலும் இன்றிப் பெரிதும் துறந்தே ஒழிந்தாரை நாம் மறவு உடையோம்; ஆதலால் முன்பு இழந்த கவினே அன்றி மற்று இன்னமும் கவின் இழப்பேம் எனவே இறந்துபாடும் இயையும் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—மேன்மேல் நம்மோடு செறியாராய்த் துறந்து போனவரை நெஞ்சத்தே உடையேம் ஆயின் முன்னம் இழந்த கவின் ஒழிய இன்னமும் உள்ள கவினை இழப்போம் ஆதலான் மறத்தலே கருமம் என்றவாறு.

ஈண்டு நெஞ்சம் என்றது மனத்தினுடைய தானத்தை. நினைக்கின்றதனாற் பயனில்லை என்று கூறியது.

(2)

பரி. பா - ம். 'நெஞ்சத்து'.

கா. 3.

ப. 3.

காத லவரில ராயினீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

(கா - உ.) என்பது.—கேளாய் என்னுடைய நெஞ்சமே! நம்மைப் பிரிந்தார் ஒருகால் நினைந்து வந்து அருளுவதோர் காதல் என்பது ஒன்று அவர் இலார்: விருப்பாயின் இனி நீ நோவது நின் அறியாமை அல்லது பிறிது ஒன்று இல்லை என்பது. வாழி என்பது அசைச்சொல் என்று அறிக.

(ப - உ.) என்பது.—அவர் நம்மேல் காதல் இலராக, என் நெஞ்சே! நீ கூட்டத்தைக் கருதி வருந்துகின்றது பேதைமை என்றவாறு. இஃது அன்பு இல்லாதார் மாட்டு வருந்தினும் பயன் இல்லை என்றது. (3)

பரி. பா - ம். "ராகநீ".

கா. 4.
ப. 10.

நினைத்தொன்று சொல்லாயோ
நெஞ்சே யெனைத்
மெவ்வநோய் தீர்க்கு மருந்து.
[தொன்று

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யாதானும் ஒன்று நினைத்தலும் மறத்தலும் நினக்கு இயல்பு அன்றே: யான் துணைவர் (பின் பயந்து) துன்புறும் நோயைத் தீர்க்கும் மருந்து எத்தன்மைத்தாக இயையும்? மற்று அத்தன்மையை நினைத்து ஒன்று எனக்குச் சொல்லாயோ? எனவே சொல்லுவையாயின் உய்குவேன் என்பது பொருள் என்றவாறு.



(ப - உ.) என்பது.—எனக்கு
கும் மருந்து யாது ஒன்று ஆயினும்
நெஞ்சே என்றவாறு.

உற்ற இன்னாத நோயைத் தீர்க்
இன்றே விசாரித்துச் சொல்லாய்

இஃது ஆற்றுதல் அரிது என்று கூறியது. தனித்தனி சில கூற்று என்று கொள்ளப்படும்.

இவை எல்லாம்
(4)

கா. 5.
ப. 6.

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேநா
முற்றா லுறாஅ தவர்.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! நாம் இங்ஙனம் பிரிவு துயர் உற்ற இடத்துத் தாமும் அஃது உறாதவர் இங்ஙனம் நம்மைச் செறுத்தனர் எனக்கொண்டு நாமும் கைவிடுதற் கடன் உண்டோ? எனவே கணவர் பிரிவின் கற்புடை யாட்டியர் கடுந்துயர் உறினும் கருத்து ஒழியார் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது —நெஞ்சே! யாம் உற்ற பின்பு உறாது போனவர் செறுத்தார் என்று கைவிடுதல் இயல்போ? என்றவாறு.

உறுதல் - விரைந்துறுதல். நாம் உறுவதன் முன்பு தாம் உற்று வருத்தினார்: நாம் உற்ற பின்பு தாம் உறார் ஆயினார்; யாம் செய்த தனையே அவரும் செய்தார் ஆயின் அவரை விடுதல் ஆகுமோ? என்று தலைமகன் கொடுமையை உட்கொண்டு நெஞ்சிற்குச் சொல்லியது.

பரி. பா - ம். " நெஞ்சேயா ".

கா. 6.

ப. 8.

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையெம்மைத்
தின்னு மவர்க்காண லுற்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! தும் செல்கின்றாய்; எம் கண்ணிணையும்

அவரிடத்து நீயே எப்பொழு கூடக்கொண்டு செல்வாயாக: என்னெனில் மற்று இவை அவரைக் காண்டல் விருப்புற்று எம்மை ஒறுக்கும் ஒறுப்பு யாம் ஆற்றேம்: எனவே இன்று எம் கண் எதிர வரின் உய்வம் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெஞ்சே! நீ அவர் மாட்டுச் செல்லுவை யாயின், இக்கண்களும் அவரைக் காணுமாறு கொண்டு செல்வாயாக. அவரைக் காணல் உற்று இவை என்னைத் தின்பனபோல நலியா நின்றன என்றவாறு.

கொள என்றது பார்க்க என்றவாறு.

காட்சிப் பொருண்மேல்

l

வருகவிற் காட்சியாயிற்று. இது காண்டல் வேட்கையால் கூறி

யது.

(6)

பரி. பா - ம். 'யிவையென்னை'.

கா. 7.

ப. 7.

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

(கா - உ.) என்பது.—நாம் இவரைப் பாதுகாக்க வேண்டும் என்று உள்ளத்தாற் பரிந்து நம்மை அவர் நல்குகின்றிலர்: என்னை என்று ஏங்கியே பின்னும் பிரிந்தவர் பின் சென்று நிற்பாய்: நீ சாலப் பேதை காண்: என்னுடைய நெஞ்சே! என்றவாறு.

(ப - உ.) என்பது.—என் நெஞ்சே! நீ வருத்தம் உற்றவர் அருளுகின்றிலர் என்று ஏங்கி நம்மை விட்டுப்போனவர் பின்பே போகா நின்றாய் பேதையாய் இருந்தாய் என்றவாறு.

இது தலைமகன் இருந்த தேசத்தைக் குத் தலைமகள் சொல்லியது.

நினைந்து கவன்ற நெஞ்சிற்
(7)

பரி. பா - ம். 'சென்றாய்'.

கா. 8

ப. 9.

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! நீ புறத்து அவரைத் தேடிச் சென்றாலும் அப்பொழுதும் என் அகத்தவராய் இருப்பர்; இங்ஙனம் அகத்து உள்ளார் ஆகவும் புறத்து யாண்டு உள்ளாரோ என்று கருதி ஓடிச் செல்வாய்: நீ யார் மாட்டுச் செல்கின்றனை சொல்: எனவே அகத்தும் புறத்தும் அவன் அன்றி அறிவது பிறிது இல்லை என்ற

வாறு.

(ப - உ.) என்பது.—நின்னுல்
ளத்திலே இருக்க, நீ நினைத்து
நெஞ்சே! என்றவாறு.
காதலிக்கப்பட்டவர் நினது உள்
யாவர் மாட்டுச் செல்கின்றாய்

இது வாளாதே போயினாய்: இங்கே
காணலாம் என்றது. (8)

கா. 9.

ப. 4.

இருந்துள்ளி யென்பரிதி நெஞ்சே
வைதனேய் செய்தார்க ணில்.

பரிந்துள்ளல்

(கா
நினைந்து

- உ.) என்பது.—நெஞ்சே! நீ அவர் தம்மை எப்பொழுதும்
இருந்து ஏதுக்கு மற்று இங்ஙனம் பரிகின்றனை? தாம்
11



பரிந்து ஒருகால் நம்மை உள்ளுதல் இத்துயர் தரும் நோயைச் செய்
தவர் மாட்டுச் சிறிதும் இல்லை என்று யான் தேறினேன் என்றவாறு.

என் என்பினை யீர்தி என்றும் ஆம்.

(ப - உ.) என்பது.—நெஞ்சே! நீ இறந்துபடாது இருந்து
அவரை நினைத்து வருந்துகின்றது யாதினுக்கு? வருத்தம் உற்று
நினைத்தல், நமக்குச் சிறுமை செய்யும் நோயைத் தந்தார் மாட்டு
இல்லை ஆயின் என்றவாறு.

இது வாளாது வருந்துகின்றாய் என்று கூறியது.

பரி. பா - ம். "யென்பரித னெஞ்சே".

கா. 10.

ப. 5.

கலந்துணர்ந்துங் காதலரைக் கண்டாற்
புலந்

பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு.

[துணராய்

(கா - உ.) கேளாய் என் நெஞ்சமே! நம்
விதிவாய்ப்பாய் நீங்கும் காதலரைக் காணப்பெற்றால்
உட்கலந்து உணர்ந்து வைத்தும்
புறத்து உடன்று ஊடிப் பின்னும் ஆவம் என்று கருதாய் வறிதே ஒரு
பொய்க்காய்வு காயக்கடவை அவர் புடைப்பு அறிய என்றவாறு.

(ப - உ.) என்பது.—காதலர் கொடுமையை உள்பட்டு அறிந்து
வைத்தும், அவரைக் கண்டால் புலந்து கலக்கமாட்டாது முன்பே
கலப்பை; இப்பொழுது பொய்யே காயா நின்றாய் நெஞ்சே! என்ற
வாறு

றது
இது கண்டால் புலக்க மாட்டாத நீ காணுவிடத்து வெறுக்கின்
எற்றுக்கு? என்று கூறியது. காட்சி - கனவின்கண் கண்ட

காட்சிபோலும். முன்பு ஒரு காலத்துப்
காட்சி எனினும் அமையும்.

பிரிந்த தலைமகனைக் கண்ட
(10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் அவள் அலமருகின்ற இடத்து எய்திய தலைவனோடு இனிது வாழ்ந்து இயலும் இடத்து ஒரு ஞான்று தன் பகை தணிவினைக்குச் சேறலும் கூடும் அன்றே அக்காலத்து இவள் ஆற்றாமையை அறிவிக்கின்றது மேலே அதிகாரம்.

## 18. நிறையழிதல்.

(ப - உ.) நிறை அழிதல் ஆவது வேட்கை மிகுதியால் தன் நிலைமை அழிந்து தலைமகள் கூறுதல். நெஞ்சின் மிக்கது புலப்படும் ஆதலால் அதன்பின் கூறப்பட்டது.

## 18. நிறையழிதல்

83

கா. 1.
காமக் கணிச்சி யுடைக்கு மறிவென்னு
ப. 4.

நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

(கா - உ.) என்பது.—தோழீ! அவர் பிரிவின்கண் யான் உறு கின்ற காம நோயாகிய கனத்த கோடாலியானது உடைத்து விடுமே; யாதினை எனில், நாணம் என்கிற அகத் தாழினைத் தன்மீதே விழ விட்டு அடைத்த எனது அறிவென்னும் அக்கதவினை: எனவே இங் ஙனம் என் நெஞ்சினை யான் ஆற்றி நிறுப்பவும் நிறை அழிந்து செல் லின் என் செய்வேன் என்றவாறு.

(ப - உ.) என்பது.—காமம் ஆகிய மழு உடையா நின்றது, நாணம் ஆகிய தாழினாலே அடைக்கப்பட்ட அறிவாகிய கதவினை என்றவாறு.

இஃது அறிவும் நாணமும் உடையார் இவ்வாறு தோழிக்குத் தலைமகள் கூறியது.

செய்யார் என்ற கா. 2.

(1)

ப. 7.

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

(கா - உ.) என்பது.—தோழீ! நின் மாட்டு அன்பு பெரிது உடையேன்: அருளும் நீங்கேன்: நின்னிற் பிரியேன்: பிரியினும் ஆற்றேன்: புறத்து உடம்பு இரண்டு அல்லது அகத்து உயிர் ஒன் றென வஞ்சனை பலவும் வகுத்து உடன்படுத்து எம் கவின் திறம் முழுதும் கவர்ந்த கள்வன் பண்புற மொழிந்த பணிமொழி அன்றோ நம் பெண்மையை உடைக்கும் கருவி என்றவாறு.

(ப - உ.) என்பது.—பல பொய்களையும் வல்ல கள்வனது தாழ்ந்த மொழி அல்லவோ நமது பெண்மையை அழிக்கும் கருவி என்றவாறு.

இஃது அன்பில்லாதானை நினைத்து யான் சொன்ன மாற்றத்திற்கு மாறுபடக் கூறுதல் பெண்மையல்ல என்ற தோழிக்கு அவன் என்னோடு கலந்த நாளிற் சொன்ன சொற்கள் காண் நம் பெண்மையைக் கெடுக்கின்றது; அல்லது கெடாது என்று கூறியது. (2)

கா. 3. ப. 3.

*நிறையுடையே னென்பேன்மன்*
*மறையிறந்து மன்று படும்.*
*யானோவென் காம*

(கா - உ.) என்பது.—தோழீ! என்னுள்ளே யான் பெரிதும் நாணுக் குறைபடாமை நிறைவேற்றிக் கொண்டு ஒழுகும் நிறை உடையேன் என்று இருப்பேன் யான் மிகவும்; மற்று இங்ஙனம்



இருப்பவும் அவர் பிரிவின்கண் யாம் உற்ற காம நோயானது யான் பிறர் அறியாமல் மறைத்து ஒழுகும் மறை வரம்பைக் கடந்து மன்றத்துச் சென்று உளது ஆம்; இஃது என்ன வியப்போ? என்றவாறு.

(ப - உ.) என்பது.—நிறையுடையேன் என்று இருப்பேன் யானோ? இப்படி இருக்கவும் என் காமம் ஆனது மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படா நின்றது என்றவாறு.
*யார்*

இது தலைமகள் ஆற்றாமையால் கூறிய சொல்கேட்டு நிறையுடை இவ்வாறு செய்யார் என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (3)

கா. 4.

ப. 2.

நிறுப்பென்மன் காமத்தை யானோ
தும்மல்போற் றோன்றி விடும்.

குறிப்பின்றித்

(கா - உ.) என்பது.—தோழீ ! அங்ஙனம்

உற்ற எம் காமத்தை
யானோ மற்று ஆம் துணையும் புலப்படாமை அகத்துள் நிறுத்து அமைப்பனுயினும், தும்மலானது ஒருவர் குறிப்பு இன்றிப் புறத்து எழுந்து புறம் தோன்றுமாப்போலே மற்று இதுவும் என் குறிப்பு இன்றித் தானே புறத்து எங்கும் புலப்படும்; ஆயின் என் செய் வேன் ? என்றவாறு.

(ப - உ.) என்பது.—காமத்தை யான் அடக்கக் கருதுவேன்: அவ்வாறு செய்யவும் தும்மல் தோன்றுமாறு போல என் குறிப்பு இன்றியும் தோன்று நின்றது என்றவாறு

இது தலைமகள் நிறை அழிந்து கூறிய சொல்கேட்டு இவ்வாறு செய்யாது இதனை மறைத்தல் வேண்டும் என்ற தோழிக்கு அவள் கூறியது. (4)

பரி. பா - ம். 'மறைப்பேன்மற்'.

கா. 5.

ப. 5.

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை
யுற்றா ரறிவதொன் றன்று.

காமநோ

(கா - உ.) என்பது.—தோழீ! "அன்பிலாதார் பின்பு செல்லேன்" என்னும் முதுசொல் படியே நம்மைச் செற்றார் பின் சென்று நில்லாமை யாகின்ற பெரிய தகைமைப்பாடு ஆகின்றது, காமநோய் உற்றவர் அறியும் கடப்பாடு உடையது ஒன்று அன்று என்றவாறு.

(ப - உ.) என்பது.—தம்மை இகழ்ந்தார் பின் செல்லாத பெரிய தகைமை காமநோய் உற்றால் அறியப்படுவது ஒன்று அன்று எனறவாறு.

## 18. நிறையழிதல்

85

இது தம்மை இகழ்ந்து
பெரியோர்க்குத் தகாது என்ற
போனவர் பின் சென்று இரங்குதல்
தோழிக்குத் தலைமகள் கூறியது. (5)

கா. 6.

ப. 6.

செற்றவர் பின்செல்ல வேண்டி
யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

(கா-உ.) என்பது.—தோழீ! இங்ஙனம் அறிந்து இருந்தும் பெருந்தன்மை பேணுதேதான் நம்மைச் செற்றவர் பின் செல்லு தலையே விரும்பி மற்று யான் உற்ற காமத் துயரம் தணிக்கத் தக்கது எத்தன்மைத்து ஆகின்றது: எனவே அவர் மாட்டு அன்புகொள் நெஞ்சம் எனப்படுகின்றது என்றவாறு.

(ப-உ.) என்பது.—செறுத்தார் பின்பே யான் சேறலை வேண்டி இத்துயர் உற்றது என்று கொள்ளப்படும்: அளித்து; அதற்கு மற்றுப் பயன் என்னை? என்றவாறு.

இது தனித்திருந்து துயர் உறுதல் காமத்து இயற்கை எனக் கூறிய தலைமகளை நோக்கி நின்போல்வார்க்கு இது தகாது என்ற தோழிக்கு அவள் கூறியது. (6)

கா. 7. ப. 1.

காம மெனவொன்றோ கண்ணின்றென்
னெஞ்
யாமத்து மாளுந் தொழில்.

[சத்தை

(கா - உ.) என்பது.—தோழீ! காதலர் பிரிவில் பெருகும் காம நோய் என்கின்ற இது சாலக் கண்ணின்றே: என் எனில் யான் உறு துயர் யாதும் காணாது இடையிருள் யாமத்தும் என்னைத் தன் தொழிற் கண்ணே யாளும்; எனவே தன் தொழிலாவது ஆற்றலும் உலற்றலும் அலமாலும் பிறவும் அன்றே? அவை அனைத்தும் யான் உறப்பண்ணும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—காமம் என்று ஒன்று கண்ணோட்டம் உடைத்து அன்று: என் நெஞ்சத்தை நடுநாள் யாமத்திலும் தொழில் கொள்ளா நின்றது என்றவாறு.

தொழில் கொள்ளல் ஆவது போக விடுதல். இது நெஞ்சின் யால் தோழிக்குக் கூறியது.

அப்பொழுதினல் அவர் மாட்டுப் மிக்கது வாய் சோர்ந்து ஆற்றாமை

(7)

பரி. பா - ம். 'வொன்று'.

கா. 8.

ப. 10.

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்பச் செயின்.

(கா - உ.) என்பது.—தோழீ ! முன் நம்மை விரும்பார் ஆகிய காதலர் யாம் விரும்பவே தாம் வருவர் ஆயின் அவ்விடத்து ஒப்பு இறந்த நாணினையும் ஒரு பெரிதும் அறியலம்: எனவே அவரிடத்தில் அவாப்பெறில் வந்தாங்கே எமது ஆவல் தீரும்படி அவரைப் "பணிந்தும் எழுந்தும் பரிவுற மகிழ்ந்தும் நோக்கி யூடியும் நுணுக நகைத்தும் நீக்கிய நாணொடு நிற்பேன்" என்றவாறு.

(ப - உ.) என்பது.—நாண் என்பது ஒன்றும் அறியார்கள் மகளிர் ; காமம் காரணமாக விரும்பப்பட்டவர் தாம் விரும்புமாறு செய்வார் ஆயின் என்றவாறு.

அவர் விரும்புமாறு செய்தமையாலே நாணம் உண்டாகாது என்றவாறு ஆயிற்று. விரும்பும் ஆறு செய்தல் ஆவது தலைமகன் தனது அன்பு தோன்ற நிற்றலும் தலைமகள் வேட்டன செய்தல் வன்மையும். பிரிந்து வந்தவனோடு புலவாது கூடுதல் நாணம் ஆகாதோ என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. (8)

பரி. பா - ம். 'வறியலர்'.

கா. 9 .

ப. 9.

புலப்ப லெனச்சென்றேன் புல்லினே
னெஞ்சங்
கலக்க லுறுவது கண்டு.

(கா - உ.) என்பது.—தோழீ ! யான் அவரோடு புலப்பே னெனச் சென்று புக்கேன் : விரைவொடு புல்லிக் கொண்டேன் :
என்னை காரணம் எனில், முன்னம் என்னொடு
ஆகிய நெஞ்சம் அவரைக் கண்டபொழுதே
குறிக்கொண்டு என்றவாறு.

நிற்பது போன்றது
கூடல் உறுவதனைக்

(ப - உ.) என்பது.—புலப்பல் எனச்சென்ற யான் முயங்கி னேன் : நெஞ்சு முற்படப் பொருந்துதல் உறுவதனைக் கண்டு என்றவாறு.

இஃது ஊடுதல் அருமை என்னை என்ற தோழிக்கு முன் ஒரு கால் அவன் பிரிந்து கூடிய வழி என்மனம் செய்தது இது என்று தலைமகள் கூறியது. (9)

பரி. பா - ம். ' கலத்தல் '.

கா. 10.

ப. 8.

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க்
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

குண்டோ

(கா -
பொழுதே

உ.) என்பது.—கேளாய் தோழீ! சென்று உற்ற உருகுவது ஆகிய நிணத்தைத் தீயிலிட்டால் எத்தன்மை



மற்று அத்தன்மை போல் அவரைக் கண்ட இடத்தே நிலை நெகிழ்ந்து உருகும் நெஞ்சினை உடையார்க்கும் உளதோ அவரோடு அணுகி நின்று வைத்து ஊடி அகல்கிற்பேம் என்று இருத்தல்? எனவே அந் நிணம் இறுகி நிற்கும் ஆயின் என் நெஞ்சம் இறுகி நிற்கும் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—தீயின் கண்ணே நிணத்தை இட்டால் ஒக்க உருகும் நெஞ்சினை உடையார்க்கு உளது ஆகுமோ? காதலரை எதிர்ப்பட்டு வைத்து ஊடி நிற்பேம் என்று நினைத்தல் என்றவாறு.

இது நிறை யழிந்து கூறிய தலைமகள் ஆற்றுதற் பொருட்டு நம் காதலர் வந்தால் ஊடுவையோ என்று நகைக் குறிப்பினாற் கூறிய தோழிக்கு ஊடுதல் அரிது என்று தலைமகள் கூறியது. (10)

(கா - உ.) இங்ஙனம் தலைமகட்கு அவ்வாறு பிரிந்தவரிடத்து விருப்பம் மேன்மேலும் மிக்குச் சேறலான் அதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 19. (கா.) அவர்வயின் விரும்பல். (பரி.)

அவர்வயின் விதும்பல்.

(ப - உ.) அவர்வயின் விதும்பல் ஆவது அவர் வரவின்கண் துக்

கம் உறுதல்: என்றது காதலர் வரவு வேட்டு இருத்தல் என்றது. இவை எல்லாம் தோழிக்குக் கூறியவாகக் கொள்க. நிறையழிந்தார் எப்பொழுதும் காதலர் வரவுக்கு ஆசை உற்று இருப்பர் ஆகலான் அதன்பின் கூறப்பட்டது.

கா. 1.

ப. 2.

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து

மாலை யயர்கம் விருந்து.

(கா - உ.) என்பது.—காலைப் பகையோடு எதிர்மயங்கிப் பொருது

வெல்வோன் ஆக நம் வேந்தனவன்: என்னெனில் யாமும் இற்றை மாலை எல்லைக்கு இம்மனைக்கண் விருந்து இயற்றுவம் ஆக அவரோடு வரூஉம் விருந்தினர் அனைவர்க்கும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நம் வேந்தன் போரின் கண்ணே பொருந்தி வெல்வானாக: யாம் மனையிலே பொருந்தி இம்மாலைப்பொழுதிலே நம் காதலர்க்கு விருந்து செய்வோம் ஆக என்றவாறு.

வருதற்கு இடையீடு

அவனை வெல்க என்றாள்.

மாறு நினைந்து கூறியது.

அரசன் வினை முடியாமை என்று நினைத்து
மனை = அட்டில். வந்தால் விருந்து இடு
(1)



கா. 2.
ப. 1.

வருகமற் கொண்க னொருநாள்
பைதனோ யெல்லாங் கெட.

பருகுவென்

(கா - உ.) என்பது.—தோழீ! இங்ஙனம் இற்றை நாள் அன்றேனும் மற்று ஒரு நாள் ஆயினும் கடிதின் வருவார்: அவ்வாறு வந்த பொழுதே யான் நெஞ்சு இரக்கத்தோடு உழந்த தனித்துயர் எல்லாம் கெடுமாறு மெய் வாய் கண் மூக்குச் செவி என்கின்ற ஐம்புலன்களும் அவரிடத்து அவாவிச் செல்கின்ற வேட்கை மிகுதி நோக்கிப் பருகிக் கொள்வேன் என்றவாறு. தோழீ! மற்று அவர் வருக: வந்தால் பருகுவல் என்றது என்னையோ எனில்,

(ப - உ.) என்பது.—கொண்கன் ஒருநாள் வருவான் ஆக வேண்டும்: வந்தான் ஆகில் என் பசலை நோய் எல்லாம் கெடப் பருகுவன்

என்றவாறு.

இது வரவு வேட்கையாற் கூறியது.

(2) கா. 3.

ப. 6.

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

(கா - உ.) என்பது.—கேளாய் தோழீ! நம்மைப் பிரிந்து சேணிடைச் சென்ற நம் காதலர் வருநாள் வருதற்கு நெஞ்சினுள் வைத்து வைத்து ஏங்கி இருப்பவர்க்கு ஒருநாள் எழுநாள் போலத் தோன்றும்; எனவே ஒருநாள் தானே அநேக நாளில் காலம் நீட்டம் கொண்டு கடுந்துயர் உறுவார் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெடுநெறிக்கண் சென்றார் வருநாளைக் குறித்து இருந்து இரங்கும் அவர்களுக்கு ஒரு நாளைப்பொழுது தானே எழுநாளைப் பொழுது போலச் செல்லா நின்றது என்றவாறு.

இது தலைமகன் குறித்த நாள் வருவதன் கின்றது என்னை என்ற தோழிக்கு அதுதானும் இல்லை என்று தலைமகள் சொல்லியது.

அறத் தேய்ந்தன நகமும் என்றவாறு.

தோற்றி

(ப - உ.) என்பது.—கண்களும் அவர் வரவைப்
லானே ஒளி இழந்து புல்லென்றன ; விரல்களும் அவர்

பார்த்திருத்த
போன நாளை
எண்ணி முடகருதலால மதயாநதன எனறவாறு.

இது வரவு காணாமையால் தலைமகள் கூறியது.

(4) பரி. பா - ம். (1) "வாளற்று".
(2) "தேய்ந்த விரல்".

கா. 5.

ப. 8.

பெறினென்னும் பெற்றக்கா லென்னு
முறிலென்னு

முள்ள முடைந்துக்கக் கால்.

(கா - உ.)
காலங்களினும்

என்பது.—தோழீ! காலை பகலை மாலை என்னும் முக்
யாம் அவரை எய்தப் பெறுவோம் ஆயினும் என்?

மற்றும் பெற்றேம் ஆயினும் என் ஆம்?........மற்று அதன்
னமே உள்ளமானது உடைந்து உக்க காலத்து என்றவாறு.

முன்
உறி
லென்பது இன்புறுதல் என்றது.

(ப - உ.) என்பது.—பின்பு அவரைப் பெறுவேம் என்றதனுல் பயன் என் உண்டாம்? முன்பே பெற்றேம் ஆனேம் அதனுல் பயன் என் உண்டாம்? இப்பொழுது உற்றேம் ஆயின் அதனுல் பயன் என் உண்டாம்? எனது உள்ளம் உடைந்து போயினதாயின் என்றவாறு.

இது வருவார் என்ற தோழிக்குத் தலைமகள்
கூறியது. (5) கா. 6.

ப. 10. விடாஅது
சென்றுரைக் கண்ணினுற் காணப்
படாஅதி வாழி மதி.

(கா
புறத்துப்

- உ.) என்பது.—அகத்து ஒருகாலும் விட்டுப் பிரியாது பிரிந்த எம் காதலர் இன்று இவ்விடத்தில் சேய்த்தின்க

ணின்று வருவாராயின் என் கண்ணினுல்
வேளுக நீ நின்று ஒளிவிட்டு விளங்குவாய்

அவரைக் கண்டு இன்புறு
: மறைவாய் அல்லே : மதி
யமே ! என்றவாறு.

(ப - உ.) என்பது.—என்
நெஞ்சை விடாதே போனவரைக் கண்ணினல்
காணுமாறு படுகின்றது இல்லே இம்மதி என்றவாறு.

பட்டது ஆயின் என்கண் உறங்கும்; உறங்கினல் அவரைக் காணலாம் என்பது கருத்து. இது மதியுடன் புலந்து கூறியது. (6)

பரி. பா - ம். " பட்அது ".

12



கா. 7.
ப. 3.

காண்கமற் கொண்கனேக் கண்ணாரக்
கண்டபி
னீங்குமென் மென்ருேட் பசப்பு.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே! யான் அங்ஙனம் நோக்கு கின்ற இடத்து மற்று எம் கண்ணார யாம் அவரைக் காணப்பெறு வேம் ஆக: மற்று அவரைக் கண்டபொழுதே எம்தோள் பசப்பு அனைத்தும் விட்டு நீங்கும் என்றவாறு. மன் என்பது அசைச்சொல்.

(ப - உ.) என்பது.—என் கண்கள் கொண்கனேக் காண்பனவாக: அவை நிறையக் கண்ட பின்பு எனது

தோளில் உண்டாகிய பசலை நீங்கும் என்றவாறு.

இது காண்டல் வேட்கையால் கூறியது. (7)

கா. 8.

ப. 9.

இலங்கிழா யின்று மறப்பினென்
கலங்கழியுங் காரிகை நீத்து.

மென்றோட்

(கா - உ) என்பது.—இனி மற்று இக்கருத்து எப்பொழுதுங் கொண்டு நீ இரங்குகின்றது என்னை? என்று இடித்து உரைக்கின்றனை யாயின் மற்று அப்பொழுதே என் மென்றோளிடத்து அணிந்த அணிகலம் ஆகிய வளையும் கணவனது உயிர் வாழ்க்கைய ஆதலால் இவை இன்றியமையா என்பதனால் இலங்கிழையாயின்; மறப்பின் என் மென்றோள் கலம் கழியும் காரிகை நீத்து என்று கைவளை ஒன்றுமே காட்டினள் என்று அறிக.

(ப - உ.) என்பது.—இலங்கின வளையை உடையவளே! யான் இன்று அவரை மறப்பேன் ஆயின் பண்டே மெல்லிய என்னுடைய தோள்கள் தம் அழகினை நீக்கி வளை முதலான அணிகலம் அதனையும் கழல விடும் என்றவாறு.

இலங்கிழை என்றதனால்
தாள் ஆகக் கொள்ளப்படும்.

வருத்தம் இல்லாதவளே! என்று விளித்
தன் அணிகலங்கள் விலங்காமை யிருப்
பச் சிறிய வுள்ளிப் பெரிய மறக்க வேண்டு மென்று வற்புறுத்திய
தோழிக்கு வன்புறை எதிர் அழிந்து கூறியது. (8)

கா. 9. ப. 7.

கூடிய காலம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமெ னெஞ்சு.

(கா-உ.) என்பது.—தோழீ! நம்மைப் பிரிந்த
எம்மோடு கலந்த காலையினும் இன்னும் இங்ஙனம்

காதலர் பண்டு
வரும் என்று 19. அவர்வயின் விரும்பல்

கொண்ட அவ்வாவை நினைத்து மற்று இது பற்றுக் கோடாக முன்னம் போலுக்குச் செல்லாது பணைத்து ஏறுகின்றது காண் நெஞ்சமானது : எனவே இதுவும் அவர் வருதற்கு ஒரு குறி யாகும் என்று இன்புற்றாள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—கூடுதற்கு அரிய காமத்தைக் கூடப்பெற் றுப் பிரிந்தவர் வருவாராக நினைத்து என் நெஞ்சம் மரம் ஏறிப் பாரா நின்றது என்றவாறு.

உயர்ந்ததன் மேல் ஏறினுல் சேய்த்தாய் வருவாரைக் காணலாம் என்று நினைத்து அதனை ஏறிற்று ஆகக் கூறி வருவர் என்கின்ற ஆசைப்பாடு இன்னும் உடையேன் என்றவாறு. அவர் வாரார் என்று கூறியது. (9)

பரி. பா - ம். ' கூடிய காமம் '.

'கா. 10.

ப. 4. புலப்பென்கொல் புல்லுவென் கொல்லோ கலப்
பென்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

(கா - உ.) என்பது.—தோழீ ! நம் கண் அன்ன கேளிர் ஆகிய எம் காதலர் மடித்து வருவர் ஆயின் அப்பொழுது சிறிது புலந்து கொள்வேனோ ? அல்லது புல்லிக் கொள்வேனோ ? இரண்டும் ஒருகாலே கலந்து கொள்வேனோ ? யாது செய்வேன் இக்குறி மெய்க் குறி யாயின் நினது நினைவினைச் சொல்வாயாக என்றவாறு.

(ப - உ.) என்பது.—என் கண்போன்ற காதலர் வருவர் ஆயின் நம்மை நினையாமையை நினைத்துப் புலந்து நிற்பேனோ? கெட்டாறு நீந்தி வருகின்றார் ஆதலின் எதிர் சென்று புல்லிக் கொள்வேனோ? இவை இரண்டும் செய்யாதே வேட்கை தீரக் கலப்பேனோ? இவை மூன்றினும் யாது செய்வேன்? என்றவாறு.

இது கண்டாற் செய்வன இவை ஆதலின் இவை மூன்றும் செய்யவேண்டா நின்றது என்று ஆராமை கூறியது. (10)

## இருபாற்கிளவி வருமாறு.

(கா - உ.) இனி இவ்வாறு ஓதற் பிரிதல் முதலாகிய பலவகைப் பிரிவுகளையும் உணர்த்துவான் எடுத்துக் கொண்டார், அவற்றுள் இருவர் உள்ளத்துக் குறித்தது ஒன்று தெரித்து நோக்க மெய்க்குறியான் விளங்கும் அன்றே: அதனால் மற்று இதன் பின்னரே அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.



## 20. குறிப்பு அறிவுறுத்தல்.

(ப - உ.) குறிப்பு அறிவு உறுத்தல் ஆவது குறிப்பினை அறிவுறுத்துதல். மேல் தலைமகள் குறிப்புத் தலைமகன் அறிந்தான் என்றது அல்லது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கின தலைமகள் குறிப்புத் தோழி யறிதலும், இரந்துபின் நின்ற தலைமகன் தோழி குறிப்பு அறிதலும், குறை நயப்பித்த வழித் தலைமகள் குறிப்புத் தோழி அறிதலும், கொதுமலர் வரைய வந்துழி வேறுபட்ட தலைமகள் குறிப்புச் செவிலி அறிதலும், பிரிதல் உற்ற தலைமகன் குறிப்புத் தலைமகள் அறிதலும், பிரிவு உணர்த்தச் சென்ற தோழி குறிப்புத் தலைமகன் அறிதலும், அவ்வழித் தலையகள் குறிப்புத் தோழி அறிதலும் இவை எல்லாம் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்பு இத்துணையும் பிரிந்துழி நிகழ்பவை கூறினர் ஆதலாலும் இனிப் புணர்ச்சி விதும்பல் கூறுகின்றார் ஆதலாலும் ஈண்டுக் கூறப்பட்டது.

கா . 1.

ப. 6. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த
லரிதாற்றி
யன்பின்மை சூழ்வதொன் றுண்டு.

(கா - உ.) என்பது.—தோழீ! மிகவும் என் ஊடலைத் தீர்த்து யான் விரும்ப இப்பொழுது புணர்ந்த புணர்ச்சியானது நாம் பின்பு அரிதாக ஆற்ற அன்பின்மையால் வரும் பிரிவினைச் செய்வது ஒன்று உண்டு என்றவாறு. அன்பின்மை என்றது அவர் பிரிவினைக் குறித்தது என்றது.

(ப - உ.) என்பது.—ஊடின காலத்து அளவு அன்றி மிகவும் ஆற்றிப் புணரும் காலத்து முன்பு போலாது மேன்மேலும் விரும்புமாறு புணர்தல் யான் அரிதாக ஆற்றியிருந்து தம் அன்பின்மை எண்ணுவது ஒரு பிரிவை உடைத்து என்றவாறு.

இது பிரியலுற்ற தலைமகன் குறிப்பு
தோழிக்குச் சொல்லியது.

அறிந்தமை : தலைமகள்

(1)

பரி. பா - ம். 'சூழ்வ துடைத்து'.

கா. 2.

ப. 10.

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

(கா - உ.) என்பது.—தோழீ ! யான் குறித்து உரைத்தேன் ஒன்று முதல் நாள்

உனக்கு அங்ஙனம் அதற்கு ஒப்ப நெருநற்றுச் இரவின்கண்; மற்று என் மேனி பசப்பு உற்று

சென்றார் நம் காதலர்: அஃது அறிந்து இன்று எழுநாள் உடையேம்; எனவே

20. குறிப்பு அறிவுறுத்தல்.

அன்று முதலாகக் காணும் நீ முன்னமேமாடு
அறிந்து மெய்யுற்ற பசப்பு என்பது பொருள்
இயையாமை உற்றது
என்றவாறு.

(ப - உ.) என்பது எமது காதலர் பிரிந்து நெருநற்றுச் சென்றார்: யாமும் மேனி பசந்து எழுநாள் உடையம் ஆயினேம் என்ற வாறு.

இது பிரியப்பட்ட தலைமகனை இத்துணைக் காலமும் இன்பம் துய்த்தாட்கு இன்றே இவ்வேறுபாடு வந்தது என்று தோழி நோக்கிய குறிப்புக் கண்டு, அவர் பிரிவதன் முன்னும் பிரிவர் என்று ஏங்கி இன்புற்றிலேம் என்று தலைமகள் கூறியது. (2)

கா. 3. ப. 7.

தண்ணந் துறைவன் றுறந்தமை
நம்மினு
முன்ன முணர்ந்த வளை

(கா - உ.) என்பது.—தோழி! நம் தண்ணந் துறைவன் நம்மை
இடையிட்டமை நம்மினும் முன்னமே தாம் அறிந்த நம்கைக்கு அணி ஆகிய வளை; எனவே யாம் அவர் இடையீடு இன்று அறிந்தனம்: இவை அவர் பெரிது அணிந்த அன்றே அறிந்தனகாண்: எனவே யான் அவர் குணம் அயிர்க்க, அன்று தொட்டு மெலிந்தன என் தோள்இணை என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது —குளிர்ந்த துறையை உடையவன் நம்மை நீங்கினமை நாம் அறிவதன் முன்னே வளைகள் அறிந்தன என்றவாறு.

தலைமகன் சொல்லாது பிரிந்துழி அதனை அறிந்த தோழி இதனை அறிவித்தால் இவள் ஆற்றுங்கொல்லோ ஆற்றாள் கொல்லோ என்று உட்கொண்டு பிரிவுணர்த்தச் சென்ற குறிப்பு நோக்கி, இதனை இப்பொழுது சொல்லுமாறு என்னை என்று பரியல் வேண்டா ; யான் முன்பே அறிந்தேன் என்று தோழிக்குத் தலைமகள் சொல்லியது (3)

பரி. பா - ம். ' றணந்தமை '.

கா. 4.

ப. 2.

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

(கா - உ.) என்பது.—நெஞ்சமே ! முன் அரும்புகின்ற முகை யானது பின் புடைபெயரா அங்ஙனம் மொக்குளித்து நின்ற மொக்குளின் அகத்து ஒரு நாற்றம் உள்ளதுபோல, இப்பேதையாளது நகைமொக்குள் அகத்துப் புறப்படாது பொதிந்திருப்பதோர் குறிப்பு உண்டு காண்: எனவே, யான் தன்னைப் பெரிது அளித்தமை பிறிது ஒன்றிற்கு உரித்து என்று இங்ஙனம் குறித்தனள் போலும் என்றவாறு.



(ப - உ.)
நாற்றம்போல்
என்பது.—மொட்டின் முகிழ்ப்பின்கண் உளது ஆகிய அப்பேதையுடைய நகை முகிழ்ப்பின் கண்ணே உள்ளது ஓர் இன்பம் உண்டு என்றவாறு.

இஃது இரந்துபின் நின்ற தலைமகனைத் தோழி நகைசெய்து சேட்படுத்த இடத்து இவள் குறிப்பினுள் நமக்கு இன்பம் பயக்கும் என்று தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. (4)

கா. 5.
ப. 3.

செறிதொ டி செய்திறந்த கள்ள
முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! யான் அவள் தன்னைப் பெரிது அளிக்கவும் அவள் முன்கைச் செறிந்த வளையானது பின்பு செய்து போன கள்ளம் யான் அறிந்தேன்: பிரிவு அஞ்சி இவள் தன் உள்

ளத்து நின்ற துயரத்தைத் தான் தணிக்கும் உபாயம் ஒன்று உடைத்து: உனவே அவ்வளையானது இவள் தன் நெஞ்சிற் குறிப்பினை நமக்கு அறிவுறுத்திய அதனானும் செலவு ஒழிவதே பொருள் என்றவாறு.

(ப - உ.) செறிந்த வளையினை உடையாள் செய்து அகன்ற களவு, நீ உற்ற துன்பம் தீர்ப்பது ஒரு மருந்து ஆதலை உடைத்து என்றவாறு.

தோழி மெலிதாய்ச் சொல்லிக்
தாரைப்போலத் தலைமகள் அகன்ற

குறை நயப்பித்தவழிக் கேளா
செவ்வியுள் எதிர்ப்பட்ட தலை
மகற்கு நின் குறை முடிய நீ அவ்விடைச் செல்

கூறியது.
என்று தோழி
(5)

கா. 6.
ப. 1.
கரப்பினுங் கையிகந் தொல்லா நி
ஞெண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

(கா - உ.) என்பது.—கேளாய்! நின் நெஞ்சிற் குறித்தது நீ எம்மைக் கரப்பினும் தாம் எமக்கு நல்ல ஆகலான் நின் நிலைமையைக் கடந்து மற்று அதனைக் காத்தல் ஒல்லாவாய் நினது ஒண்கண்ணானவை எனக்குச் சொல்லல் உறுவது ஒரு நீர்மை உண்டு: எனவே இங்ஙனம் இவள் தலைவற்குக் கண்ணினால் தன் குறிப்பு அறிவுறுத்தச் செலவு அழுங்கியமை பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நீ மறைக்கவும் நின்னைக் கைகடந்து மறைத்தற்கு இசையாவாய் நின்கண்கள் சொல்லுவது ஓர் அருள் உண்டு என்றவாறு.

20. குறிப்பு அறிவுறுத்தல்

95·

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகளை இவ்வேறுபாடு எற்றி ஞன் ஆயிற்று என்று வினவிய தோழிக்குச் சுனை ஆடினேன் என்று தலைமகள் மறைத்த இடத்து அவள் நாணம் நீங்குதல் பொருட்டுப் புணர்ச்சி உண்மை அறிந்தமை குறிப்பினல் தோழி சொல்லியது. இவ்வாறு ஒருபுறம் தோன்றச் சொல்லாக்கால் நாணத்தாலே இறந்து படும். (6)

பரி. பா - ம். 'மின்னுண்க.'

கா. 7.
ப. 4.

மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

(கா - உ.) என்பது.—பளிங்கினுள் கிடந்தே புறத்தில் திகழ் தரும் நூல் போல இம்மடந்தையாளது வடிவு அழகினுள் கிடந்தே அவ்வழகின் மீதே வந்து தோன்றுவது ஒரு மயக்கம் உண்டு என்றவாறு.

(ப - உ.) கோவைப்பட்ட நீல மணியின்கண்ணே தோற்று கின்ற நூல் போல இம்மடந்தை உடைய அழகின் உள்ளே இவள் மறைக்கவும் தோன்றுகின்ற ஒரு துன்பம் உண்டு என்றவாறு.

அழகு - புணர்ச்சியால்
உண்டு என்பது, அதனுள்

வந்த அழகுபோலும் குறிப்பு ஒன்று
தோன்றுகின்றதனால் வந்தது ஒன்றை
யுற்ற குறிப்பு. நொதுமலர் வரைய வந்துழி வேறுபட்ட தலைமகள் குறிப்புக் கண்டு அதற்குக் காரணம் என்னை என்று தோழியைச் செவிலி வினவியது. (7)

கா. 8. ப. 9.

தொடிநோக்கி மென்றோளு நோக்கி
யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! தன் வளையை நோக்கி மற்று அவ்வளை அணிந்த மென்தோளினையும் நோக்கிப் பின் தன் சீறடியையும் நோக்கி விட்டு அத்துணையே அவ்விடத்து அவள் செய்த கருமம் என்றவாறு: எனவே இற்றை நாள் நம்மோடு செறிந்திருந்த வளையே! இவர் எம்மைவிட்டு நீங்க நீயும் நீங்குவை: பணைத்து நிறத்தது ஓர் தோளே! நீயும் இவர்விடப் பசக்குவை: இறுதிக்கண் கைவிடும் நம்மை நம்புவதனினும் அவர் தம்மோடு சேறலே தலைமை: இதற்கு இனி இவ்வடியிணை செய்வது என்னை என்று அறிகிலேன் என்று இவை அவை நோக்கி நம் குறிப்பு அறிந்து அலமரல் உற்ற அத்துணையே: நெஞ்சே! யாம் ஒன்று குறித்து இடத்து அவள் செய்த



கருமம் இவை என்று எண்ணிச் செலவு
னென அறிக.
அழுங்குவன் ஆவது பய

(ப - உ.) என்பது.—தொடியையும் நோக்கி மெலிய தோளையும் நோக்கி அடியையும் நோக்கி அவள் அவ்விடத்துச் செய்த குறிப்பு அதுவாய் இருந்தது என்றவாறு.

இஃது யான் பிரிவு உணர்த்தியவழி, இருப்பேம் ஆயின் தோள் மெலிந்து வளை கழலும் என்று நினைத்துப் போவாள் ஆகக் கருதி நடக்க வல்ல ஆகவேண்டும் என்று அடியைப் பார்த்தாள்; ஆதலால் உடன்போதல் கருத்தினள் என்று தோழி தலைமகற்குக் கூறியது

(8) கா. 9.

ப, 5.

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.
பேதைக்குப்

(கா - உ.) என்பது.—பசும்பணை யொத்த பெருந்தோள் பேதையாட்குப் பண்டை நிறக்கவின் அன்றி இன்று தன்கண் எங்கும் புகுந்து நிறைந்த நிற அழகானது தனக்கு இயல்பாகிய நாணும் குடிகொண்ட தன்மை மிகப் பெரிதாய் இருந்தது காண்: எனவே தன் உள்ளத்துக் குறிப்பு எதிர்கின்... றுரைத்தலை ந...ற காட்டின தலைமகன் செலவு அழுங்கினான் என்றவாறு. கண்ணிறைந்த காரிகை என்பது பண்டை நலன் ஒழியத் தன்னிடம் எங்கும் புகுந்து நிறைந்து நிற்கின்ற புத்தழகு என்பது.

(ப - உ.) என்பது.—காண்பார் கண்நிறைந்த அழகினையும் காம்பை ஒத்த தோளினையும் உடைய பேதைக்குப் பெண்மை நிறைந்த நீர்மை பெரிது என்றவாறு.

இஃது இவள் வேறுபாடு எற்றினான் ஆயிற்று என்று வினவிய செவிலிக்கு இவள் வடிவுக்குத் தக்க பெண்மை நிரப்பம் உடையவள் ஆயதனானே வந்தது போலும் என்று தலைமகள் குறிப்பைக் கூறியது.

பெண்மை நிரப்பம் கற்பு. பூக்கரு புணர்ச்சியானும் புனற்றரு புணர்ச்சியானும் ஒன்றைச் சொல்லுவதாகக் குறித்துக் கூறினாள். இத்துணையும் களவு. (9)

கா. 10. ப. 8.

பெண்ணினாற் பெண்மையுடைத்தென்ப கண்ணினாற் காமநோய் சொல்லி யிரவு.

(கா - உ.) என்பது.—தோழீ! நீ யான் அழுங்குவித்தல் என்? அவர் செலவு அழுங்கியவாறு என்னை? என்கின்றனை யாயின்; என் நெஞ்சில் துயரக் குறிப்பினைக் கண்ணினால் கண்டு தாமே அருளச் செலவு அழுங்கினர்: அஃதேல் கற்புடை மகளிர் காதலாகும் ஒழுக்கம் உடைமை உடைத்து என்று சொல்வர் பெண்டிரின் அறிவு உடையோர் என்றவாறு.

(ப - உ.) என்பது.—வாயால் சொல்லாது கண்ணாலே காம நோயைச் சொல்லி வேண்டிக் கோடல் தமது இயல்பாகிய பெண்மை

யோடே பின்னையும் ஒரு பெண்மை உடைத்து என்று சொல்லுவர் அறிவோர் என்றவாறு.

இதனைப் பிரிவுக்கு இடையீடாகக் கொள்ளாது சொல் வழங்க வேண்டும் என்பது கருத்து. பிரிவு உணர்த்திய வழித் தலைமகள் குறிப்புக் கண்டு தோழி சொல்லியது. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் செலவு அழுங்கித் ளோடு இனிது உறைகாலத்து நிகழும் புணர்ச்சியினது உரைக்கின்றமையான் மற்று இதன் பின்னரே அதனை

தலை மக
விருப்பம்
அறிவிக்
கின்றது மேலை அதிகாரம்.

## 21. புணர்ச்சி விதும்பல்.

னும்

(ப - உ.) புணர்ச்சி விதும்பல் ஆவது பிரிந்து கூடிய தலைமகளும் புணர்தல் வேண்டி ஒருவரின் ஒருவர்

தலைமக
முந்துற

விரைதல்.

கா. 1.

ப. 8.

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற்
பழிகாணேன் கண்ட விடத்து. [கொண்கன்

(கா - உ.) என்பது.—தோழீ! முன்னம் எல்லாம் அவன் பழி நின்னினும் மற்று யான் கருதி இருப்பேன்: பின்பு அஞ்சனம் எழுதுங் காலத்து அவ்வெழுது கோலினை முன்னம் கண்டாங்குக் காண மாட்டாக் கண்ணே போல் நம் துணைவன் செய்யும் பழி சிறிதும் காணேன்: மற்று அவனைக் கண்ட இடத்து; எனவே மற்றப் பொழுது பிறிது நினையாது கலவி நினையும் பேதமை உடையேன் என்றவாறு.

(ப - உ.) கண் எழுதும் காலத்துத் தன் இமையகத்துப் புகுந்த கோலைக் காணாக் கண்ணே போலக் கொண்கனது குற்றத்தினையும் அவனைக் கண்ட இடத்துக் கண்டிலேன் என்றவாறு.

லாம்
இது மேற்கூறிய சொற்கேட்டு நீ அவனைக் கூறிய குற்றம் எல்
யாண்டுப் போயிற்று என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.(1)

13



கா. 2.

பா. 3.

தினைத்துணையு மூடாமை வேண்டும்
காம நிறைய வரின்.

பனைத்துணையுங்

(கா - உ.) என்பது.—தோழி! ஒரு தினை அளவு ஆயினும் காதலரோடு ஊடாமை வேண்டும்: எவ்விடத்து எனின் பனை அளவு நிறைந்த காம இன்பம் வரும் இடத்து என்றவாறு.

(ப - உ.) என்பது —நெஞ்சே! தினை அளவும்

ஊடாதொழிதல்

வேண்டும்: பனை அளவினும் மிக்க காம நுகர்ச்சி

வரும் ஆயின் என்ற

வாறு.

இஃது ஊட நினைத்த நெஞ்சிற்குத் தலைமகள்

கூறியது: இதுவும்

ஒரு கூற்று.

(அ)

கா. 3.

ப. 7.

ஊடற்கட் சென்றேன்மற் றோழீ யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

(கா - உ.) என்பது —கேளாய் தோழீ! யான் அப்பொழுதே ஊடற்கண் ஒருப்பட்டுச் சென்றேன்: முன்னம் என்னோடு இதற்கு உடம்பட்டு நின்ற நெஞ்சானது அவரைக் கண்ட பொழுதே அதனை மறந்து கூடற்கண் சென்றது என் என்றவாறு.

(ப - உ.) என்பது.—தோழீ! யான் ஊடலைக் குறித்துச் சென்றேன்: அவனைக் கண்டபொழுதே அதனை மறந்து கூடலைக் கருதிற்று என் நெஞ்சு என்றவாறு.

இது நீ அவனொடு புலவாது கூடியது
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

என்னை என்று நகையாடிய
(3)

கா. 4,

ப. 4.
உய்த்த லறிந்து புனல்பாய்
பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

(கா - உ) என்பது.—ஈர்த்துக் கொண்டு போதலை அறிந்து வைத்துப் பின்னும் புனலுள் பாய்வம் என்னும் அறிவு கேடர் போல் புலவியின்கண் நில்லாமை அறிந்து வைத்து ஊடுவது என் செய்ய என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஈர்ப்பதனை அறிந்து வைத்தும் புனல்பாய்பவரைப் போல நெஞ்சு பொய்ப்படுவதனை அறிந்து வைத்தும் புலக்கின்றது எற்றுக்கு என்றவாறு.

இது புலவிக் குறிப்பு நீங்குவாள் தன்னுள்ளே சொல்லியது. (4)



கா. 5.

ப. 2.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

(கா - உ.) என்பது.—தம்மால் காதலிக்கப்பட்டாரை நினைக்கவே களித்தலும், காணவே மகிழ்தலும் கள்ளுக்கு இல்லை காமத்திற்கு உண்டு என்று பலவாற்றானும் கள்ளோடு காமம் மகிழ்ந்து உரைக்கின்றமையின், ஒருவர்க்கு இரண்டன் திறத்தினும் துறந்த விடத்து இன்பமே இன்பம் என்பது துணிந்த பொருள் என்றவாறு.

(ப - உ,) என்பது.—காதலரை நினைத்த அளவிலே களிப்பு உறுதலும் கண்ட அளவிலே மகிழ்ச்சி பெறுதலும், களித்தலையும், மகிழ்தலையும் தனக்கு இயல்பாக உடைய கள்ளிற்கு இல்லை : காமத்திற்கு உண்டு என்றவாறு.

இது தலைமகனைக் கண்ணுற்ற இடத்துப் புலவியைக் கருதின தலைமகள் புணர்வு வேட்கையால் சென்ற நெஞ்சினைக் கண்டு தன்னுள்ளே வியந்து கூறியது. (5)

கா. 6. ப. 1.

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்

செவ்வி தலைப்படு வார்.

(கா - உ.) என்பது.—கேளாய் தோழீ ! உலகத்து வண்டானது மலர் சிதையாமல் மதுவை யருந்துவது போல மற்று அதன் செவ்வி அறிந்து கைக்கொள்ளும் மக்களும் உலகத்துப் பலர் உளர் எனினும் மற்று அக்காமம் ஆகின்ற அதன் செவ்வி சிதையாமல் சென்று தலைப்படுவார் அதனினும் சிலர் காண் : நீ என்னை முனிய வேண்டா என்றவாறு.

(ப - உ.) என்பது.—எல்லாவற்றினும் மெல்லிது ஆகிய பூவி னும் மெல்லிதாய் இருக்கும் காமம் ; அதனது செவ்வியைப் பெறு வார் உலகத்துச் சிலர் என்றவாறு.

இது தலைமகள் புலவிக் குறிப்புக் கண்டு இன்பம் கூடிக்கொள்ள லாம். இப்பொழுது ஊடுவையாயின் இக்காமம் செவ்வி தப்பும் என்று புணர்ச்சி வேட்கையால் தலைமகன் கூறியது. (6)

கா. 7.

ப. 6.

இளித்தக்க
கள்ளற்றே

வின்னு செயினுங் களித்தார்க்குக்
கள்வநின் மார்பு.

(கா - உ.) என்பது.—நீ எமக்கு இளிவு ஆவதற்குத் தக்க இன்னாதனவற்றைச் செய்யினும் நின்னைப் பிழைத்து ஒழுகேன்

யான்: நினது சூளுறவு எடுத்து உரைக்கும் வஞ்சனையை உணர்ந்து பின்னும் நின்மார்பு எமக்கு எத்தன்மைத்தோ எனின், சிலகாலம் கள்ளுண்டு களித்தவர்க்குப் பின்னும் அக்கள் அவர்க்கு எத்தன் மைத்து மற்று அத்தன்மைத்து: எனவே இது அவன் தவறியது நோக்காதது பொருள் என்றவாறு.

(ப • உ.) என்பது.—பிறரால் இகழத் தக்க இன்னாமையை நீ
எமக்குச் செய்யவும் அது கண்டு, களித்தார்க்கு அதனால் உள்ள குற்றத்தினைக் கண்டு வைத்தும் அதனை உண்டல் வேட்கை நிகழுமாறு போலப் புணர்வு வேட்கையைத் தாரா நின்றது வஞ்சக! நின் மார்பு என்றவாறு.

நின்தொழில் மார்பும் உடைத்தாயிற்று என்றது. இது புலவிக் குறிப்பு நீங்கின தலைமகள் தலைமகற்குச் சொல்லியது. (7) கா. 8.

ப. 10.

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண்.

(கா
புறத்துத்

- உ.) என்பது.—தோழீ! இங்கு நம்மை விரும்பாது தனக்கு விரும்புவன செய்து வரினும் கொண்கனை அப்படி

அதற்கு உரியன் என்று அறிந்தும் ஒருபொழுது
மாட்டா மற்று இக்கண்கள் ஆனவை : வறிதே நீ

காணாது அமைய
என்னை முனிவது
எவன் என்றவாறு.

(ப
வணவே

- உ:) என்பது.—நம்மை விரும்பாது தன் மனம் விரும்பு
செய்தானாயினும் கொண்கனைக் காணாது அமைய மாட்டா
என் கண்கள் என்றவாறு.

இது மேற்கூறிய சொற்கேட்டு ஊடல்
வேண்டுவார் தலைமகற் காணத்தொழிதலே உளது
என்று நகையாடிய தோழிக்குத் தலைமகள் கூறியது.

(8)

இவை எல்லாம் ஊடல் பகுதியானமையும்
யானமையும் கண்டு கொள்க.
மூன்னுறு புணர்ச்சி

பிரிந்து கூடல் முடிந்தது.

கா. 9.

ப. 5.

கண்ணிற் றுனித்தே கலங்கினுள் புல்லுத
லெம்மினுந் தான்விதுப் புற்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சே! கண்ணினுல் துனிசெய்து ஊடி நெஞ்சினுல் கலக்கம் உற்ருள் : நம்மினும் சாலத் தான் முயங்குதல் விருப்பம் உற்ருள் : அது என்ன பேருே தான் என்றவாறு.

## 22. நெஞ்சோடு புலத்தல்.

101

(ப - உ.) என்பது.—கண்ணுலே புலந்து அதனையும் முடிய நிறுத்தாது கலக்கம் உற்ருள் : புணர்தலை என்னினும், மிகத்தான் விரைதலானே என்றவாறு.

இது தலைமகள் ஊடற் குறிப்பு நீங்கிப் புணா தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

விரைவது கண்டு

(9)

பரி. பா - ம். 'லென்னினுங்'.

கா. 10.

ப. 9.

காணுங்காற் காணேன் தவருய
காணேன் தவறல் லவை.

(கா - உ.) என்பது:—கேளாய் தோழீ ! பல சொல்லி என்? யான் அவரைக் காணும் காலத்துக் காணேன் தன் தவறு ஆவன ; மற்று இனி யான் அவரைக் காணுக் காலும் காணேன் மற்று அவர் செய்யும் தவறல்லன ; எனவே நாள்தோறும் காணுக்கால் ஆற்றுமையும், கண்ட இடத்து வழிபாடும் கற்புடை மகளிர்தம் கடன் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ.) என்பது—அவனைக் கண்ட பொழுது அவன் குற்றம் ஆயின யாவும் காணேன் : அவனைக் காணுத காலத்து அவன் குற்றம் அல்லாதன யாவும் காணேன் என்றவாறு.

இது மேற்கூறிய சொற்கேட்டுக் கண்டகாலத்து மறக்குமாறு போலக் காணுத காலத்தினும் மறப்பது நன்று என்று நகைக் குறிப் பிறல் கூறிய தோழிக்குச் சொல்லியது. (10)

(கா - உ.) இனி மற்று இங்ஙனம் அவன் புறத்து எகினும் தான் புணர்ச்சி விதுப்பத் தன்மையள் அல்லாத தலைமகள் தன் நெஞ்சொடு புலந்தமை நிகழ்ந்து நின்றமையின்
பின்னரே அதனை அறிவிக்கின்றது

நெஞ்சொடு புலத்தல் மற்று இதன்
மேலே அதிகாரம்.

## 22. நெஞ்சொடு புலத்தல்

(ப - உ.) நெஞ்சொடு புலத்தலாவது

தலைமகன் பாத்தையிற்
பிரிந்துழி அவனொடு புலக்கக் கருதிய தலைமகள் முற்பட அவனொடு கூட்டம் வேண்டிய நெஞ்சொடு புலந்து கூறுதல். இனி ஊடிக் கூடல் கூறுகின்றார் ஆதலின் அவ்வூடுதலின் முற்பட இது தோற்றும் ஆதலின் முன் கூறப்பட்டது.

கா. 1.

ப. 1.

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு
நீயெமக் காகா தது.

மெவனெஞ்சே



(கா - உ.) என்பது.—நம் காதல ராகியவர் நெஞ்சம் அவர்க்கு உரித்து ஆதல் கண்டு வைத்தும் அங்ஙனம் நீ எமக்கு உரியை ஆகாது எம்மோடு எதிர்மலைவது எவனோ? நெஞ்சே; இது தகாது உனக்கு என்றவாறு.

(ப - உ.) என்பது.—அவருடைய நெஞ்சு அவர் வழி நின்று நம்மை நினையாமை கண்டு வைத்தும், நெஞ்சே! நீ எம் வழி நில்லாது அவரை நினைத்தல் யாதினைக் கருதியோ என்றவாறு.

இது தலைமகள் வருங்காலத்து வாராத நெஞ்சொடு புலந்து கூறியது.

தலைமகனை உள்ளிய

(1)

கா. 2.

ப. 2.

தஞ்சந் தமரல்லா ரேதிலார்
நெஞ்சந் தமரல் வழி.

தம்முடைய

(கா - உ.) என்பது.—தோழீ! இவ் வுலகத்தில் உரிமையாக நெஞ்சம் கூடத் தமக்குத்துணை இல்லாத

தாம் தமக்கு
இடத்தினில்

மற்று அயலார் தமக்குத் தஞ்சமும் அல்லார் துணி என்றவாறு. தஞ்சம் என்பது எளுமைப் பொருட்டு இடுக்கண் உற்றவிடத்து எய்துதல் என்பது

(ப - உ.) என்பது.—தாம் உடைய நெஞ்சம் தமக்குச் சுற்றம் அல்ல ஆகும் காலத்து ஏதிலார் சுற்றம் அல்லர் ஆகுதல் எளிது என்ற வாறு.

தலைமகன் யாண்டு உளன் என்று குற்றேவல் மகளிரை அறிய விட, அவர் பரத்தையர் சேரியுளான் என்று கூறியவழி அவர் வந்த காலத்தில் நெஞ்சு நம்வழி ஒழுகாது அவர் வழி ஒழுகினல் அவர் ஏதிலர் ஆகுவது எளிது அன்றோ என்று நெஞ்சொடு புலந்து கூறியது. ஏதிலார் என்றுள் பிறர் மனையிற் செல்லுதலான். (2)

உறாஅ தவர்க்கண்ட கண்ணு

மவரைச்

செறாஅ ரெனச்சேறி நெஞ்சு

(கா - உ.) என்பது.—நீ நம்மோடு இடத்து மற்று அன்பில்லாதவரைக் கண்ட இவர் நம்மைச்

அப்பொழுதே அவர் குணம் அறிந்து வைத்தும், செறுப்பார் அல்லர்: உவப்பார் போலும் என்று

உட்கொண்டு மேன் மேல் செல்லுகின்ற நெஞ்சமே தன் நெஞ்சொடு புலந்தாள் என்றவாறு.

என்று இங்ஙனம்

(ப - உ.) என்பது.—என் நெஞ்சே! அன்பு உறாதாரைக் கண்ட இடத்திலும் அவர் செற்றம் நீங்குவாரெனச் செல்லா நின்றாய் என்னே என்றவாறு.

22. நெஞ்சோடு புலத்தல் 1

03

இஃது உணர்ப்புவயின் வாரா ஊடற்கண்

தலைமகன் புலந்த வழி இன்னும் ஒருகால்
புலந்து கூறியது.

உணர்த்துவோம் என்று கருதின நெஞ்சொடு

இவை மூன்றும் புலவியின் கண் நிகழ்வதே ஆயினும் சொடு புலத்தல் சொல்கின்றா ராதலின் ஈண்டுக் கூறப்பட்டன.

நெஞ்
(3)

கா. 4.

ப. 8.

*கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ
பெட்டாங் கவர்பின் செலல்.

நெஞ்சே நீ

(கா - உ.) என்பது.—நெஞ்சே! அவர்க்கு நம்மோடு அன்பு இல்லை ஆயினும், பின்னும் நீ அவரைக் காதலித்து அவர் பின் செல்லுதல் உலகில் கெட்டார்க்கு நட்டார் இல் என்று சொல்லும் *முதுசொல் வழக்கோ தான்? எனவே யாம் இங்ஙனம் எம்மை விரும் பாதவர் தம்மேல் விழுதல் முறைமையோ தான் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நெஞ்சே! நீ என்வரை யில்லாது வேண்டின வண்ணமே அவர் பின்செல்கின்றது இல்லை என்பதனானேயோ என்றவாறு.

கெட்டார்க்கு நட்டார்

இது வாயில் மறுத்த தலைமகள் அவனோடு கூட்டம் வேண்டிய நெஞ்சோடு புலந்து கூறியது.

(4) கா. 5.

ப. 4.

நாணு மறந்தே னவர்மறக்
கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு.

(கா - உ.) என்பது —தோழீ! முன்னம் போல நம்மை அருளாதவர் தம்மை நாம் இனி நெருங்குதல் தீது என்று நாணுதல் நமக்குக் கடன் அன்றே? மற்று அந்நாணினையும் மறந்தேன்: அக்கொடியார் தம்மை ஒரு பொழுதும் மறக்கவல்லாத என்
அகப்பட்டு என்றவாறு.
தீய நெஞ்சின்கண்

(ப - உ.) என்பது.—எனக்கு
இன்றியமையாத நாணினையும் கடைப்பிடிக்கிலேன்: அவரை மறக்க மாட்டாத நன்மை இல்லாத பேதை நெஞ்சோடு கூடப்பட்டு என்றவாறு.

இது தலைமகள் யான் நாணாது தூது விட்டதும் மறவாமையாலே என்று அதனோடு புலந்து கூறியது.

என் நெஞ்சு
(5)

---

* முட்டின் றொருவ ருடைய பொழுதின்க
ணட்டிற்றுத் தின்பவ ராயிரவ ராபவே:
கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக்
கெட்டார்க்கு நட்டாரோ இல். —பழமொழி-59.



கா. 6.
ப. 3.

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

(கா - உ.) என்பது.—தோழீ ! அவர் நம்மாட்டுக் செய்து அகன்றனர் ஆயினும் அவர்திறம் பிறர்க்கு யாம்
குற்றம் உரைப்பின் பெரிதும் இளிவாம்
இகழ்ந்து பெர்ழுதும் சிந்தியா நிற்குங்காண்,
நெஞ்சு ஆனது என்றவாறு.

என்று எண்ணி அவர் திறமே எப்
அவரோடு உயிர்க்காதல் உற்ற என்

(ப - உ.) என்பது.—அவர் திறத்தைத் தானும் இகழ்ந்தால், அதனனே தனக்கு இளிவரவு உளவாகக் கருதி நினையா நின்றது சாவமாட்டாத நெஞ்சு என்றவாறு

இது தலைமகள் நெஞ்சு அவரைப்போலத்தானும் இகழலாயிருக்க இகழ்கின்றதும் இல்லை ; அவர் செயலைக் கேளாது சாவவும் வல்லு சின்றது இல்லை ; என்று அதனோடு புலந்து கூறியது. (6)

பரி. பா - ம். 'மூயிர்க்காக'.

கா. 7 .
ப. 5.

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார்
நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

(கா - உ.) என்பது.—நெஞ்சே ! மற்று அவரிடத்து வந்த காலத்து நாம் அவர் தம்மை எதிர் ஏற்றுக் கொள்ளாது சிறிது வலித்து நின்று மற்று அவரோடு முன்னம் துனி செய்து பின்னர்க் கூடி நுகர்கம். அத்துணையும் அவர்வயின் சென்று மண்டாது நிற்

பாய் ஆக என இவை இவை நினக்கு யான் சொல்ல இயைந்தனை போன்று இருந்து மற்று அவரைக் கண்டபொழுதே எதிர் ஏற்று அவை மறந்து ஆனி கருதாது துய்த்தலைப் பேணினை ஆதலால் இனி அன்னவை நின்னொடு சூழ்வார் யார் என்பது பொருள் என்றவாறு.

(ப - உ) என்பது.—நெஞ்சே! நீ புலவியை நீளச் செய்து பின்னை நுகாமாட்டாய்: ஆதலான் இனி அப்பெற்றிப்பட்டனம் நின்னோடு எண்ணுவார் யார்? இல்லை என்றவாறு,

எண்

தலைமகனோடு புலக்க நினைத்த நெஞ்சினை முன்பும் ஒருநாள் புலந்து முடிய நில்லாயாயினை: இன்னும் புலப்பேன் ஆயின் அறை போகுவை: ஆகலான் தனியே எண்ணிக்கொள்கின்றேன்; நின்னோடு எண்ணேன் என்று அதனோடு தலைமகள் புலந்து கூறியது. (7)



கா. 8.

ப. 9.

துன்பத்திற் கியாரே துணையாவார்
நெஞ்சந் தமரல் வழி.

தாமுடைய

(கா - உ.) என்பது.—தோழீ!
இடத்து உதவும் உறுதுணை யாவார்

உலகத்து ஒருவர்க்கு உற்ற
யாரோ தான்? நாம் நமக்கு

உள்ளூறு துணையா உடைய நெஞ்சமே கூட
உதவும் தமர் அல்லாத இடத்து என்றவாறு.

ஒன்று உற்ற இடத்து

(ப - உ.) என்பது.—துன்பம் உற்றால் துணை

யாவார் உண்டோ? தம்முடைய நெஞ்சும் தமக்குத்
துணை யல்லாத காலத்து என்றவாறு.

துணை யாவார் யார் என்றது தோழியைக் குறித்து; தலைமகள் வாயில் மறுத்த இடத்துத் தோழி நெருங்கிக் கூறிய வழி உடன்பட்ட நெஞ்சொடு புலந்து வாயில் நேர்வாள் சொல்லியது. (8)

பரி. பா - ம். " துணையல் வழி ".

கா. 9.

ப. 7.

பெரூஉ அமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மரூஉ அ விடும்பைத்தென் னெஞ்சு.

(ப - உ.) என்பது.—தோழீ! என் நெஞ்சம் ஆனது அவரைப் பெறுமையைக் கொண்டு அஞ்சும்: பெறுவது என்று கொல் என்று; இனிப் பெற்ற காலத்துப் பிரிவினை நினைந்து அஞ்சும்: பின் நுகர்ச்சி இன்பம் இழப்பேம் என்று; அதனால் இருவாற்றானும் இடையறாத இடும்பையினை உடைத்து: இனி எங்ஙனம் யாம் உய்வது என்றவாறு.

(ப - உ.) என்பது.—காதலரைப் பெறாத காலத்துப் புணர்வு இல்லையோ என்று அஞ்சும்; பெற்றோம் ஆயின் பிரிவரோ என்று அஞ்சும்: அதனால் இடைவிடாத துன்பத்தை யுடைத்து என் நெஞ்சு என்றவாறு.

இது தலைமகள் ஆற்றாமை கண்டு தூது விடக் அவர் வந்தாலும் இதற்கு உள்ளது துன்பமே புலந்து கூறியது.

கருதிய தோழிக்கு
என்று அதனோடு கா. 10.
(9)

ப. 6.

தனியே யிருந்து நினைந்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

(கா - உ.) என்பது.—தோழீ! இப்பொழுது எனக்கு இனியது போன்று இருந்து மற்று அவர் பிரிந்த இடத்து விடாது நினைந்து கொண்ட காலத்து என்னைத் தின்னற்கு இருந்தது என் நெஞ்சு.

எனவே இப்பொழுது உறவு போன்றது என்று
பொருள் ஆயிற்று
எனறவாறு.
(ப
பார்த்து

- உ.) என்பது.—தனிப்பட்டிருந்து நினைத்தால்
என்னை நலிவதாக இருந்தது என் நெஞ்சு என்றவாறு

இடம்

இஃது அவர் செய்கின்ற கொடுமையை உட்கொண்டு உள்ள துயரம் யான் தனிப்பட்டால் நலிவதாக இருந்தது; நீ வருதலானே இப்பொழுது தப்பினேன் என்று (தலைமகள்) நெஞ்சொடு புலந்து தோழிக்குக் கூறியது. (10)

(கா - உ.) புலவியாவது, தலைமகனொடு
தலைமகள் புலந்து
கூறுதல்: இது வெளிப்பட நிகழ்தலின் அதன்
பின் கூறப்பட்டது
மேலை அதிகாரம்.

## 23. புலவி

(ப-உ.) புலவியாவது - தலைமகனோடு

தலைமகள் புலந்து கூறு
தல். இது வெளிப்பட நிகழ்தலின் அதன்பின்
கூறப்பட்டது.

கா. 1.

ப. 1. புல்லா திராஅப் புலத்த

லவருறூஉ
மல்லனோய் காண்கஞ் சிறிது.

(கா-உ.) என்பது.—நம் காதலர் வந்தால் புல்லாது இருந்து புலத்தல் வேண்டும்; அவ்விடத்து அவர் உறும் கலக்கம் யாம் சிறிது காண்போம் ஆக என்றவாறு.

(ப-உ.) என்பது.—நாம் காதலர் வந்தால் புல்லாது இருந்து புலக்க வேண்டும்: அவ்விடத்து அவர் உறும் கலக்கம் யாம் சிறிது பொழுது காண்போம் ஆக என்றவாறு.

இதுவாயில் வேண்டிச் சென்ற தோழி தலைமகள் குறிப்புக் கண்டு முகம் கோடற்பொருட்டு இனிமை கூறியது.

புலவிக்
(1)

பரி. பா-ம். "புலத்தி". "மல்லல் யாங்".

கா. 2.

ப. 2.

நலத்தகை நல்லவர்க் கேளர்

புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

(கா - உ.) என்பது.—பரத்தையரொடு புலந்து கூறிய தலைமகட்குத் தோழி சொல்லுமாறு. நலத்தகையினானே நல்ல கற்புடைய மகளிர்கள் மாட்டுப் புலத்தல் தீது எனவே மற்றுப் பரத்தையர்க்கு அழகாம் பூவன்ன கண்ணார் மாட்டுப் புலத்தல் என்றவாறு.



(ப - உ.) என்பது.—நலத்தகையினானே நல்லாரான பரத்தையர்க்கு அழகாம் பூ அன்ன கண்ணார் மாட்டு, புலத்தல் என்றவாறு. இது
நமக்கு அவர் மாட்டுப் புலத்தல் தீது என்றவாறு ஆயிற்று. பரத்தையரோடு புலந்து கூறிய தலைமகட்குத் தோழி கூறியது.(2)

கா. 3.

ப. 3.
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

(கா - உ.) என்பது.—நுகர்வனவற்றிற்கு உப்பு அமைத்தாற் போல இனிமை உண்டாம் புலவி: அதனை நீள விடில் அவ்வுப்பு மிக்காற் போல இன்னாது ஆம் என்றவாறு.

(ப • உ.) என்பது.—நுகர்வனவற்றிற்கு உப்பு அமைந்தாற் போல இனிமை உண்டாக்கும் புலவி : அதனை நீள விடில், அவ்வுப்பு மிக்காற் போல இன்னாது ஆம் என்றவாறு.

இது வாயில் வேண்டிய தோழிக்குத் தலைமகள் இடத்து, இப்புலவியை நீள விடுதல் தக்கது அன்று என்று

மறுத்த
தோழி
கூறியது.

(3)

கா. 4.

ப. 4.

ஊடலி னுண்டாங்கோர் துன்பம்
புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

(கா - உ.) என்பது.—ஊடற் செவ்வி
அதன் கண்ணும்
இன்பம் உண்டாயினும் கொல்லோ நீடாது

ஒரு துன்பம் உண்டு : புணருங்கால் நீடுவது கொல்லோ என்னுதல் என்றவாறு.

(ப - உ.) என்பது,—ஊடற் செவ்வி இன்பம் உண்டாயினும் அதன் கண்ணும் ஒரு துன்பம் உண்டு புணருங்கால் நீடும்கொல்லோ நீடாது கொல்லோ என்று ஐயுறுதலால். என்றவாறு.

இது தலைமகள் ஆற்றாமை வாயிலாகப் புலக்க, கண்டு தலைமகன் சொல்லியது.

தலைமகள் புலவி

(4) கா. 5.

ப. 5.

நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

(கா - உ.) என்பது.—குளிர்ச்சியைத் தனக்கு இயல்பாக உடைய நீரும் நிழலின் கண்ணே இனிது ஆம். அது போலப் புலவியும் அன்புடையார் மாட்டே ஆயின் இனிது ஆம் என்றவாறு.



(ப - உ.) என்பது.— குளிர்ச்சியைத் தனக்கு இயல்பாக உடைய நீரும் நிழலின் கண்ணது ஆயின் இனிது ஆம்; அதுபோலப் புலவியும் யும் அன்புடையார் மாட்டே ஆயின் இனிது ஆம் என்றவாறு.

மேல் புலவியின் கண் ஒரு துன்பம் உண்டு என்று தலைமகன் கூறிய சொற்கேட்டு அஃது இன்பம் ஆவது அன்பு உடையார்க்கு: நமக்கு அன்பின்மையால் துன்பம் உண்டாயிற்று என்று தலைமகள் கூறியது.

(5)

கா. 6.

ப. 6.

துனியும் புலவியும் இல்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

(கா - உ.) என்பது.—தலைமகள் நீட்டித்த பெரும் பிணக்கு ஆகிய துன்பம் இல்லை ஆயின் கனிந்த பழம் போல இனிமை தரும்: மற்றுச் சிறுபிணக்கு ஆகிய புலவி இல்லை ஆயின் காமம் பசுங்காய் போலத் துவர்க்கும் ஆதலால் என்றவாறு.

(ப . உ.) என்பது.—உணராது நீட்டிக்கின்ற துனியும் உணர்த்த மீளுகின்ற புலவியும் இல்லையாயின் காமமானது பழத்தையும் முற்றாத காயையும் ஒக்கும் என்றவாறு

இது தலைமகள் புலவி நீட்டித்தவழித் துனி இல்லை யாயின் பழம் போல இனிமை தரும்: புலவி இல்லை யாயின் காய் போலத் துவர்க்கும் ஆதலான் இஃது உணர்தற்கு நல்லளவு என்று கூறியது. (6)

கா. 7.

ப. 7.

ஊடி யவரை யுணராமை வாடிய
, வள்ளி முதலரிந் தற்று.

(கா - உ.) என்பது.—தம்மோடு ஊடினவரை ஊடல் தீராது வருத்துவது முன்பே வாடிய கொடியை வேர் முதலோடும் அரிந் தாற் போலும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—நம்மொடு ஊடினவரை ஊடல் தீராது வருதல் முன்பே வாடின கொடியைத் தூரிலே அரிந்தாற் போலும் என்றவாறு.

இது தலைமகன் தன்னை ஊடல் தீர்ப்பச் செய்தவற்றைக் கண்டு, இவையிற்றால் ஈண்டுப் பயன் இல்லை: நின்னொடு காமக் கிழத்தியை ஊடல் தீராது பெயர்ந்தாய்; அது நெருநல் ஊடிய தக்கது அன்று: ஆண்டுப்போ என்று தலைமகள் கூறியது. எமக்கு மக்களை வளர்த்து அறம் நோக்குமது அல்லது காமத்தால் பயன் இல்லை என்றவாறு ஆயிற்று. (7)



கா. 8.
ப. 8.

நோத லெவன்மற்று நொந்தாரென்
காதலவ ரில்லா வழி.
றஃதறியுங்

(கா - உ.) என்பது.—யான் நோகின்ற

அதனால் பயன் என்னை? நொந்தார் என்று நினைந்து அதனை அறிந்து தீர்க்கும் அன்பு அவர் இலர் ஆகிய இடத்து என்றவாறு.

(ப - உ.) என்பது.—யான் நோகின்றதனால் பயன் என்னை; இவர் நொந்தார் என்று நினைத்து அதனை அறிந்து தீர்க்கும் அன்பு அவர் இலர் ஆகிய இடத்து என்றவாறு.

இஃது உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் கூறியது.

தலைமகன் புலந்து
(8)

பரி. பா - ம். "காத லவரில் வழி."

கா. 9.

ப. 9.

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற்
புலந்தாரைப் புல்லார் விடல்.

றம்மைப்

(கா - உ.) என்பது.—முன்பு கலக்கம் உற்று அதன் மேலும் அல்லல் நோயைச் செய்தாற் போலும் புலந்தாரை முயங்காது விடுதல் என்றவாறு.

அழிந்தாரை
காமத்திறல்

(ப - உ.) என்பது.—முன்பே கலக்கம் உற்று அழிந்தாரை அதன் மேலும் அல்லல் செய்யும் நோயைச் செய்தாற் போலும் : காமத்தில் புலந்தாரை முயங்காது விடுதல் என்றவாறு.

இஃது உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் புலந்துழி அதனை அறிந்து அகப்புக்க தோழி தலைமகற்குச் சொல்லியது. (9)

பரி. பா - ம். 'செய்தற்றாற் காமம்'.

கா. 10.

ப. 10.

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

(கா - உ.) என்பது.—எமது புலவியைச் சாக உலத்தி விட்டவரோடு என் நெஞ்சம் கூடுவேன் என நினைக்கின்றது எனது ஆசைப்பாடு என்றவாறு.

(ப - உ.) எமது புலவியைச் சாக விட்டவரோடே என் நெஞ்சு கூடுவேன் என்று நினைக்கின்றது ஆசைப் பாடு என்றவாறு.



இஃது உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் புலந்தது கண்டு புலவி நீங்க வேண்டும் சொல்லியது.

என்ற தோழிக்குப் புலவி தீர்வான்,

(10)

(கா - உ.) புலவியின் நுண்ணிய புலவி என்று கூறினமையால் வேறு பகுத்து அதன் பின் கூறப்பட்டது மேலே அதிகாரம்.

## 24. புலவி நுணுக்கம்.

(ப - உ.) புலவி நுணுக்கமாவது தலைமகன் மாட்டுத் தவறு இன்று ஆயினும் தனது காதல் மிகுதியால் சொல்லெச்சத்தினும் பலவற்றினும் வேறுபடப் பொருள் கொண்டு தலைமகள் புலந்து கூறுதல். இது செவ்வையில் தோன்றுமையின் உள்ளுறை ஆயிற்று. புலவியினும் நுண்ணிய புலவி என்று கூறினமையால் வேறுபடுத்து அதன்பின் கூறப்பட்டது.

கா. 1. ப. 1.

யாரினுங் காதல மென்றேமா வூடினள்
யாரினும் யாரினு மென்று.

(கா - உ.) என்பது.—ஒருவனும் ஒருத்தியும் ஆகிய அன்பினல் புணர்ந்தார் யாவரினும் யாம் காதலுடையேம் என்று சொன்னேமாக அதனை அவ்வாறு கொள்ளாது நீர் அன்புறப் பட்ட பலருள்ளும் யாரினும் யாரினும் என்மேல் அன்புடையீர் என்று சொல்லி ஊடினள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஒருவனும் ஒருத்தியும் ஆகி அன்று அன்பினல் புணர்ந்தார் யாவரினும் யாம் காதல் உடையேம் என்று சொன்னேம் ஆக, அதனை அவ்வாறு கொள்ளாது நீர் அன்பு பட்டார் பலருள்ளும் யாரினும் யாரினும் அன்புடையீர் ஆயினீர் என்று சொல்லி ஊடினள் என்றவாறு.

காதலுடையேம் என்று உளப்பாட்டுத் தன்மையாகக் கூறிய அதனை உயர்ச்சியாகக் கூறினன் ஆகக் கருதினள். தலைமகன் வாயில் வேண்டின இடத்து நின் குற்றத்தினலே ஊடல் மிக்கிருந்தாள் என்று கூறிய தோழிக்கு அவள் ஊடுதற்கு யான் குற்றம் செய்ய வேண்டா: யான் சொல்லுவனவும் செய்வனவும் எல்லாம் குற்றமா யிருக்கும்: அவள் குற்றம் ஆகக் கொண்டவற்றைக் கேள் என்று சொல்லுவான் முற்பட அன்புடையேன் என்று சொல்லியது குற்றம் ஆயிற்று என்று கூறியது. (1)

16. புலவி நுணுக்கம்

111

கா. 2.

ப. 2.

இம்மைப் பிறப்போ பிரியல
மென்றேனுக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

(கா - உ.) என்பது.—இப் பிறவியில் யான் பிரியேன் என்று சொன்னேன் : அதனுனே மறு பிறப்பின்கண் பிரிவு உண்டு என்று கருதிக் கண் நிறைய நீர் கொண்டனள் என்றவாறு.

(ப - உ.) என்பது.—இப்பிறப்பில் யாம் பிரியேம் என்று சொன் னேன் : அதனுனே மறுபிறப்பின் கண் பிரிவு உண்டு என்று கருதிக் கண் நிறைய நீர் கொண்டாள் என்றவாறு.

இது பிரியேன் எனினும் குற்றம் ஆம் என்று கூறியது. (2)

கா. 3.

ப. 3.

உள்ளினே மென்றீர்மற் றெம்மறந்தீ
ரென்றெம்மைப்
புல்லாள் புலத்தக்க னள்.

(கா - உ.) என்பது.—நீர் பிரிந்த இடத்து

எம்மை நினைந்தோம் என்றீர் : மற்று எம்மை மறந்தீர் என்று முயங்காளாய்ப் புலவித் தகுதியாள் ஆயினாள் என்றவாறு.

(ப - உ.) என்பது நீர் துறந்த இடத்து எம்மை நினைந்தேன் என்றீர் ; மறந்தார் அன்றே நினைப்பார் : ஆதலான் எங்களை மறந்தீர் என்று முயங்காளாய்ப் புலவித் தகுதியள் ஆயினாள் என்றவாறு.

இது நினைத்தேன் எனினும் குற்றம் ஆம் எனக் கூறியது. (3)

பரி. பா - ம். 'உள்ளினேன்'.

கா. 4.

ப. 4.

வழுத்தினாள் தும்மினேனாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

(கா - உ.) என்பது—யாம் தும்மினேம் அதற்கு அவள் வாழ்த்தினாள் ; விட்டு அழுதாள் உம்மையார் நினைக்கத் தும்மினீர் என்று சொல்லி என்றவாறு.

(ப - உ.) யாம் தும்மினேம் : அதற்காக வாழ்த்தினாள் : மீட்டு அழுதாள் : நும்மையார் நினைக்கத் தும்மினீர் என்று சொல்லி என்றவாறு.

இது தும்மினும் குற்றம் ஆம்
என்று கூறியது. (4) பரி. பா - ம்.
' டும்மினே ளுக ".



கா. 5.

ப. 5.

தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

(கா - உ.) என்பது.—தும்மல் தோன்ற அதனை அடக்கினேன்;
அதற்கு அழுதாள்.- நீர் நுமர் உள்ளினமையை
திரோ என்று சொல்லி என்றவாறு.

எம்மை மறைத்

தும்மாது ஒழியினும் குற்றம் ஆம் என்று
கூறிற்று.

(ப - உ.) என்பது.—தும்மல் தோற்ற அதனை அடக்கினேன். அதற்கு அழுதாள். நுமர் உள்ளினமையை எம்மை மறைக்கின்றீரோ என்று சொல்லி என்றவாறு.

இது தும்மாது ஒழியினும் குற்றம் ஆம் என்று

கூறியது. (5) கா. 6.

ப. 6.

நினைத்திருந்து நோக்கினுங் காயு
யாருள்ளி நோக்கினீ ரென்று.

மனைத்துநீர்

(கா
உவமிக்க

- உ.) என்பது.—தனது உறுப்புக்களோடு வேறு ஒன்றை ஒண்ணுமையை நினைத்து நோக்கினும் வெகுளும், என்

உறுப்பு எல்லாம் நீர் காதலித்தவர்களில் யார் உறுப்பை என்று நினைத்து நோக்கினீர் என்று சொல்லி என்றவாறு.

ஒக்கும்

பார்க்கிலும் குற்றம் ஆம் என்று கூறியது.

(ப - உ.) என்பது.—தனது உறுப்புக்களோடு வேறு ஒன்றை உவமிக்க ஒண்ணுமையை நினைந்து நோக்கி யிருப்பினும் வெகுளும். என் உறுப்பு எல்லாம் நீர் காதலித்தவர்களில் யார் உறுப்பை ஒக்கும் என்று நினைத்து நோக்கினீரென்று சொல்லி என்றவாறு.

இது பார்க்கினும் குற்றம் என்று கூறியது.

(6)

கா. 7.

ப. 7.

கோட்டுப்பூச் சூடினுங் காயு
காட்டிய சூடினீ ரென்று.

மொருத்தியைக்

(கா - உ.) என்பது.—பக்கப்பூச் சூடினும்
காட்டுதற்காகச் சூட்டினீர் என்றவாறு.

காயும் ஒருத்தியைக்

பக்கப் பூ—ஒப்பனைக்குச் சூடிய பூ—வளையப் பூச் சூடினும்
என்றும் ஆம். அன்றியும், கோட்டுப் பூச் சூடினேன் ஆயின் இப்
பூ இந்நிலத்து உள்ளது ஒன்று அல்ல: பிற நிலத்து உள்ளது என்று
மிக வெகுளும்: இதனை நீர் சூடியது அந்நிலத்து உள்ளாள் ஒருத்தியை



எனக்கு அறிவித்தற் பொருட்டு என்று சொல்லி என்றும் ஆம்.
கோட்டுப் பூ—மருத நிலம் அல்லா நிலத்துப் பூ. தாளிப்பூ என்பாரும்
உளர். கோலம் செய்யினும் குற்றம் ஆம் என்று கூறிற்று.

(ப - உ.) என்பது.—பக்கப் பூச்சூடினும் காயும்
காட்டுதற்குச் சூடினீரென்று சொல்லி என்றவாறு.

ஒருத்திக்குக்

பக்கப் பூ—ஒப்பனைப் பூ. வளையப்பூச் சூடினும் என்றும் ஆம். அன்றியும் கோட்டுப் பூச்சூடினேன் ஆயின் இப்பூ இந்நிலத்தில் உள்ளது ஒன்றல்ல: பிறர் நிலத்தில் உள்ளது என்று ஐயுற்று வெகுளும். இதனை நீர் சூடியதும் அந்நிலத்தில் உள்ளாள் ஒருத்தியை எனக்கு அறிவித்தற் பொருட்டு என்று சொல்லி என்றும் ஆம்.

கோட்டுப்பூ - மருதநிலம் அல்லாத நிலத்தில் உள்ள பூ.

இது கோலம் செய்யினும் குற்றம் ஆம் என்று கூறியது.

(7) கா. 8.

ப. 8.

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

(கா - உ.) என்பது.—தன்னை ஊடல் வெகுளும் பிறர்க்கும் இவ்வாறு செய்வீரே தீர்க்கும் பொழுதும் என்று சொல்லி என்றவாறு.

தன்னைப் போற்றினும் குற்றம் ஆம் என்று கூறியது.

(ப - உ.) என்பது.—தன்னை ஊடல் தீர்க்கும் பொழுதும் வெகுளும்; பிறர்க்கும் இவ்வாறு செய்வீரோ என்று சொல்லி என்றவாறு.

இது தன்னைப் போற்றினும் குற்றம் ஆம் என்று கூறியது.

இவை எட்டும் தலைமகன் கூற்று. இவை நெஞ்சொடு புலத்தலின் பின் கூறற் பாலது ஆயினும், புலவி நுணுக்கம் சொச் சொல்ல வேண்டும் ஆதலானும் இறந்தது காட்டல் என்னும் தந்திர வுத்தியானும் ஈண்டுக் கூறப்பட்டது. (8)

கா. 9.

ப. 9.
பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

பொதுவுண்பர்

(கா - உ.) என்பது.—பரத்தையரால் விரும்பப்பட்ட பரத்தைமையை யுடையாய்! நின் மார்பு பெண்ணின் தகைமையை உடையார் எல்லாரும் பொதுவாக நினைத்துக் கண்ணினாலே நுகரா நிற்பர்; அதனால் யான் அதனைத் தீண்டேன் என்றவாறு.

15

(ப - உ.) என்பது.—பாத்தமையை உடையாய்! நின்மார்பை பெண்தன்மை உடையார் எல்லாரும் தமக்குப் பொதுவாக நினைத்துக் கண்ணினாலே நுகரா நிற்பார்: ஆதலான் யான் அதனைத் தீண்டேன் என்றவாறு.

இது தலைமகள் புலவி கண்டு என்மாட்டுக் கூறிய தலைமகற்குத் தலைமகள் கூறியது.

பரி. பா - ம். 'பரத்த'.
குற்றம் யாது என்று
(9)

கா. 10.

ப. 10.

ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

(கா - உ.) என்பது.—தம்மோடு புலந்து உரையாடாது இருந்தேம்: அவ்விடத்துத் தும்மினார்: யாம் தம்மை நெடிது வாழ்வீர் என்று சொல்லுவேம் என்பதனை அறிந்து என்றவாறு.

(ப - உ.) தம்மொடு புலந்து உரையாடாது இருந்தேன்: அவ்விடத்துத் தும்மினர்: யாம் தம்மை நெடிது வாழ்வீர் என்று சொல்லுவேன் என்பதனை அறிந்து என்றவாறு.

இஃது ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் புணர்ந்து நீங்கிய பின் அகட் புக்க தோழிக்கு அவர் செய்த களவு இது என்று தலைமகள் கூறியது. (10)

(கா - உ.) புலவி நீக்கிப் புணர்ந்த தலைமகன் மற்றுள்ள நாள்களில் இப்புணர்ச்சி பெரியதோர் இன்பம் உடைத்து என்றற்குக் காரணம் ஆகிய ஊடல் உவகை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

## 25. ஊடலுவகை.

(ப - உ.) என்பது—ஊடல் உவகையாவது ஊடலை உவந்து கூறியது. அஃது ஆவது புலவி நீக்கிப் புணர்ந்த தலைமகன் மற்றுள்ள நாள்கள்போல் அன்றி இப்புணர்ச்சி பெரியது ஓர் இன்பம் உடைத்து என்றற்குக் காரணம் ஆகிய ஊடலே உவந்து கூறுதலும் இவ்வண்ணமே தலைமகள் கூறுதலும். மேவதனோடு இயைபும் அது.

கா. 1.

ப. 1.

ஊடுக மன்னோ வொளியிழை
நீடுக மன்னோ விரா.

யாமிரப்ப

(கா - உ.)என்பது.—ஒள்ளிய இழையினை யுடையாள் ஊடுவாள் ஆக வேண்டும்: யாம் இவளை இரந்து ஊடல் தீர்க்கும் அளவும் இராப்பொழுது நெடிது ஆக என்றவாறு.

(ப - உ.) என்பது.—விளங்கின இழையினை உடையாள் என்றும் ஊடுவாள் ஆக வேணும்: யாம் இவளை இரந்து ஊடல் தீர்க்கும் அளவும் இராப்பொழுது நெடிது ஆவது ஆக வேணும் என்றவாறு.

இது மன ஆக்கத்தின் கண் வந்தது; என்றும் உளது வேண்டும் என்றதனால் கூடலினும் ஊடல் நன்று என்றது.

ஆக
(1)

கா. 2.
ப. 2.
ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

(கா - உ.) என்பது.—ஊடலின் கண் எதிராது சாய்ந்தவர் வென்றார்: அவ்வெற்றியை நிலை பெறுநின்ற கூடலின் கண்ணே காணலாம் என்றவாறு.

(ப - உ.) என்பது.—ஊடலின் கண் எதிராது சாய்ந்தவர் வென்றார். அவ்வெற்றியை நிலைபெறுநின்ற கூடலின் கண்ணே காணலாகும் என்றவாறு.

யான் சாய்ந்தேன் ஆயின் இப்பொழுது வாறு ஆயிற்று.

என்னது வெற்றி என்ற

இது தலைமகள் ஆராமை கண்டு கூறியது.

(2)

**கா. 3.**

**ப, 3.**

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

(கா - உ.) என்பது.—உண்டலினும் உண்டது அறுதல் உடற்கு இன்பம் ஆவது: அது போலக் காமத்திற்குப் புணர்தலினும் ஊடுதல் இன்பம் ஆம் என்றவாறு.

பசித்து உண்டான் உண்ணும் உணவு இன்பம் தருவது போல ஊடினல் கூட்டல் இன்பம் தரும் என்றவாறு.

(ப - உ.) என்பது.—உண்டலினும் உண்டது பிற்கு இன்பம் ஆம் என்றவாறு.

அறுதல் உடம்

பசியினால் உண்ணும் உணவு இன்பம் தரும்; அதுபோல ஊடி னால் கூடல் இன்பம் தரும் என்றது. (3)

கா. 4. ப. 4.

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.



(கா - உ.) என்பது.—காமத்திற்கு
ஆம். அவ்வூடுதற்கு இன்பம் ஆவது
பெற்றால் என்றவாறு.

ஊடுதலே மிகவும் இன்பம்
அதன் பின் கூடிக் கலக்கப்

(ப - உ.) என்பது.—காமத்திற்கு ஊடுதல்
ஊடுதற்கு இன்பம் ஆம் அதன்பின்கூடிக்

இன்பம் ஆம்: அவ்
கலக்கப் பெற்றால்
எனறவாறு.

இது யாம் பெற்றேம். பிறர் அதன்

செவ்வி யறியாமையால்
பெறுதல் அரிது என்று கூறியது.
(4)

கா. 5.

ப. 5.

ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

(கா - உ.) என்பது.—ஊடலின் கண் தோன்றுகின்ற சிறிய
பிணக்கு அருளப் பெறாது ஒழியினும் அழகு உடைத்து.

புணர்தலும் இன்பம் ஆம்: புணராது ஒழியினும் இன்பம் ஆம்.

(ப - உ.) என்பது.—ஊடலின்கண் தோன்றுகின்ற சிறிய துனி
மிக்க அருள் பெறாது ஒழியினும் அழகு உடைத்து என்றவாறு.

புணர்தல் இன்பம் என்றார்: இது என்று கூறப்பட்டது.

புணராது ஒழியினும் ஆம்
(5)

கா. 6.

ப. 6.

ஊடிப் பெறுகுவங் கொல்லோ
நுதல்வியர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

(கா - உ.) என்பது.—இன்னம்
கொல்லோ யாம்? நுதல் வியர்ப்பக்

ஒருகால் ஊடிப் பெறுவோம்
கூடின கூடலாலே உண்டாகிய
இன்பம் என்றவாறு. உப்பு என்பது இனிமை.

(ப - உ.) என்பது:—இன்னும் ஒருகால் ஊடல் பெறுவோமோ? நுதல் வியர்ப்பக் கூடின கூட்டத்தாலே உண்டாகிய இன்பம் என்ற வாறு.

ஊடுதல் இருவர்க்கும் உண்டாகலால் பொதுப்படக் கூறினர். நுதலின் வியர்ப்ப என்றான். புணர்ச்சிக் காலத்து வேகம் மிகுதலே; இவ்வின்பம் ஊடினார்க்கு அல்லது பெறுதல் அரிது என்றது. (6)

கா. 7.

ப. 7.

தவறிலா ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

25. ஊடலுவகை.

117

(கா - உ.)
கப்பட்டாளது
என்பது.—தாம் தவறு இல்லார் ஆயினும் காதலிக் மென்தோள் நீங்குதலால் அஃது ஓர் இன்பம் உடைத்து ஆம என்றவாறு.

குற்றம் உண்டாயினும் இல்லை யாயினும்
ஊடலால் கூடல் நன்று
என்று கூறியது.

(ப - உ.) என்பது.—தாம் தவறு இல்லார்
ஆயினும் தாம் காத
லிக்கப்பட்டாரது மென்றோள் நீங்குதலானே
அஃது ஓர் இன்பம்
உடைத்தாம என்றவாறு.

குற்றம் உடைத்தாயினும் இல்லை யாயினும்
நன்று என்று கூறியது.

ஊடலால் கூடல்
(7)

கா. 8.

ப. 8.

புல்லி விடாஅப் புலவியுட்
டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

(கா - உ.) என்பது.—புல்லின இடத்து விட்டுப் புலந்த இடத்துத் தோன்றும்: எனது உள்ளத்தை அழிக்கும் கருவி என்றவாறு. அஃதாவது தலைமகள் புலவியால் கூறும் சொற்கள் புணர்ந்த பின்பு தோற்றுமையால் அதனைக் கேட்டல் இன்பம் உடைத்து என்று கூறியது.

இவை எட்டும் தலைமகன் கூற்று.

(ப - உ.) என்பது.—புல்லின இடத்துத் துனியாம்படி இவளைப் பொருந்தி விடாதே நிற்கின்ற புலவிக்கண்ணே வெளிப்படும் எனது உள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம் போன்ற துன்பம் என்றவாறு.

நீடுங்கால் புலவி துன்பம் எனவே புலவி
கடிது நீங்க வேண்டும்
என்றது. விட்டுப் புலந்த இடத்துத் தோற்றும்
அழிக்கும் கருவி என்றவாறு.

எனது உள்ளத்தை

அஃதாவது தலைமகள் புலவியால் கூறும்
சொற்கள். அது
புணர்ந்த பின்பு தோற்றுமையால் அதனைக்
கேட்டால் இன்பம்
உடைத்து என்று கூறியது.

இவை எட்டும் தலைமகன் கூற்று.

(8)
கா. 9.
ப. 9.

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

(கா - உ.) என்பது.— அவர் நமக்குச் செய்த குற்றம் இல்லை யாயினும் ஊடுதலைச் செய்யின் மற்று அவர் அன்பு மிகுதியால் நமக்கு அவர் அளியைப் பெறுகுவேம் என்றவாறு.



(ப - உ.) என்பது.—அவர்க்குத்
தவறு இல்லை யாயினும் அவர்
செய்யும் அருள் ஊடுதலைச் செய்ய வற்று
என்றவாறு.

இவ்வருள் பிறர்க்கும் செய்வர் என்னும் கருத்தினனே ஊட வேண்டும் என்றவாறு ஆயிற்று. தலைமகன் புணர்ந்து நீங்கிய வழித் தலைமகள் இன்பச் செவ்வி கண்டு இவ்வாறு இன்பம் நுகாது தவறு இல்லாதார்மாட்டுத் துன்பம் ஆகிய புலவியைச் செய்கின்றது எற்றுக்கு என்று வினவிய தோழிக்குத் தலைமகள் கூறியது. (9)

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னாரகத்து.

(கா - உ.) என்பது.—நிலனும் நீரும் பொருந்தினாற் போல ஒன்று பட்ட நெஞ்சுடையார் புல்லிப் புலத்தல் போல இன்பம் தருவது ஒரு தேவர் உலகு உண்டோ என்றவாறு.

நிலத்தொடு நீர் இயைதலாவது நிலத்தின் வெப்பமும் நீரின் தட்பமும் கூட அனுபவிக்கும் அவை போலக் காமத்தின் இன்பத் துன்பங் கூட அனுபவிப்பார் மாட்டு என்றவாறு ஆயிற்று.

(ப - உ.) என்பது.—நிலனும் நீரும் பொருந்தினாற் போல ஒன்று பட்ட நெஞ்சுடையார் மாட்டுப் புலத்தல் போல இன்பம் தருவது ஒரு தேவருலகம் உண்டோ என்றவாறு.

நிலத்தொடு நீர் இயைதல் ஆவது அவை கூட அனுபவிக்கும் வகைபோல இன்பமும்

வெப்பமும் தட்பமும்
துன்பமும் கூட அனு
பவிப்பார் மாட்டு என்றவாறு. தலைமகன் புலந்து நீங்கிய வழி நமக் குப் புலவி நன்று ஆயிற்று என்று கூறியது.

நகை யாடிய தோழிக்குத் தலைமகள்
(10)

ஊடிக்கூடல் முடிந்தது.






காலிங்கருரை முடிவு

நன்றாக. வடிவேதுணை. வேணுவனேசன் துணை. குருபாதம்.

திருவள்ளுவர் முப்பாலும் எழுதி முகிந்தது. பிள்ளை பட்ட
முடையா பிள்ளையவர்களுக்குத் தீர்க்காயித்து உண்டாக வேணு
மென்று எழுதி முகிந்தது. நன்றாக விக்கினேசுரன் பாதமே கெதி.

ஆகத் திருவள்ளுவ நாயனார் திருவுள்ளம் பற்றினது ஆயிரத்து
முந்நூற்று முப்பது குறளுக்கும் உரை எழுதி முடிந்தது. காலிங்

கருடைய உரை எழுதினது. அாகூயஎவுரு
புரசொற்பதி வருஷம்
பங்கூனி மர்தம் ருஉ எழுதி முகிந்தது. நன்ருக.
தம்பிரான் தோழன்
எழுதி முகித்தென். நன்ருக.

---

பரிப்பெருமாளுரை—முடிவு

காமத்துப்பால் ஒருவகையான்
முடிந்தது.

தெள்ளி மொழியிலைத் தேர்ந்துரைத்துத்
தேமொழியார்
சொள்ளிய காமனு
லோர்ந்துரைத்து—வள்ளுவனர்
பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான்
தென்செழுவைத்
தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து.
அக்ஷயவுரு ஆனிமீ" எஉ இரேபதியும்
தெசமியும் பெற்ற சனிக்
கிழமை நாள் வள்ளுவர் குறள் முப்பாலு
முரையுடன் எழுதி முடிந்

தது. உதிரமாலை செட்டியார் குமாரன் அரியா புத்திரன்.

எண்ணும் பலகலை தேருந் தொறுமிறைஞ் சக்கருத்தும்
கண்ணுஞ் சிரமுங் கடக்கவிட் டேன்வட காவியமும்
தெண்ணன் றமிழுஞ்சொற் சோதிட நூலுந் தெரிந்துயர்ந்த
தண்ணென் றதுமறைச் சோம ணிராமன் சரணங்களே.

அட்செயவருடம் ஆனிமீ" கருவ இயாட்பாணம் தோளா துக்குணி
யார் எழுதிவித்த பொத்தகம்.



## செய்யுள் அகராதி.

